# பொருளடக்கம்

# முன்னுரை

தமிழில் உள்ள பாராயண நூல்களுள் ஒன்று அபிராமி அந்தாதி. இதைப் பாடிய அபிராமி பட்டர் ஸ்ரீ வித்யா உபாசகர். ஆகையால் அம்பிகையைப் பற்றி மற்றவர்கள் பாடிய துதி நூல்களில் காணப் பெறாத சில சிறப்பியல்புகள் இந்த நூலில் உள்ளன. அம்பிகையைப் பரதேவதையாகக் கொண்டு அவளே எல்லாத் தெய்வங்களுக்கும் மேலானவள் என்று போற்றும் நெறியே ஸ்ரீ வித்யை. அம்பிகையின் திருவுருவம் செந்நிறத்தது என்றும், அவள் ஸ்ரீ சக்ரத்தில் பிந்து ஸ்தானத்தில் இருப்பவள் என்றும், அவள் பஞ்சப் பிரேத பர்யங்கத்தில் வீற்றிருப்பவள் என்றும், அவள் ஒவ்வோர் ஆதாரத்திலும் வெவ்வேறு வடிவத்தில் எழுந்தருளியிருக்கிறாள் என்றும் கூறும் கருத்துக்களும் இவை போன்ற பிறவும் ஸ்ரீ வித்யா உபாசகர்களுக்குப் பழக்கமானவை. அபிராமி பட்டர் இத்தகைய கருத்துக்களை இந்த அந்தாதியில் எடுத்துச் சொல்கிறார்.

தமிழில் ஸ்ரீ வித்யா சம்பந்தமான நூல்கள் மிகக் குறைவு; இல்லையென்றே சொல்லி விடலாம். மொழி பெயர்ப்பு நூல்களைத் தவிர அத்துறையில் வந்த முதல் நூல் ஏதும் இல்லை. சௌந்தர்யலகரி தமிழ்ச் செய்யுள் உருவத்தில் இருந்தாலும் அதுவும் மொழி பெயர்ப்பே. ஆதலின் அபிராமி அந்தாதியைத் தமிழ் மட்டும் அறிந்தவர்கள் படித்து ஓரளவு ஸ்ரீ வித்யையின் தத்துவங்களை உணர்ந்து கொள்ளலாம்.

அபிராமி அந்தாதியின் முதல் இருபத்தைந்து பாடல்களுக்குரிய விளக்கக் கட்டுரைகளைத் தொகுத்து, "எழில் உதயம்" என்ற பெயரில் முன்பு வெளியிட்டேன். அதைத்

தொடர்ந்து இருபத்தாறிலிருந்து ஐம்பது வரையிலுள்ள பாடல்களுக்குரிய விளக்கக் கட்டுரைகளை, ''மாலை பூண்ட மலர்'' என்ற பெயருடன் இந்த இரண்டாந் தொகுதியாக இப்போது வெளியிடுகிறேன். இவை ஸ்ரீரங்கத்திலிருந்து வெளியாகும் 'சங்கர கிருபா' என்ற மாதப் பத்திரிகையில் வெளியானவை.

இந்தப் பாடல்களின் விளக்கக் கட்டுரைகளில் பல உவமைகளையும் எடுத்துக்காட்டுக்களையும் எடுத்து கூறிச் சமயக் கருத்துக்களை விளக்க முயன்றிருக்கிறேன். தேவாரம், திருவாசகம் முதலிய அருளாளர் நூல்களில் உள்ள கருத்துக்களை ஒப்புமையாகக் காட்டி இருக்கிறேன். அங்கங்கே லலிதா சகசிர நாமத்தில் வரும் திருநாமங்களை யும் காட்டியுள்ளேன். ஸ்ரீ வித்யா உபாசகராகிய அபிராமி பட்டருக்கு அந்தச் சகசிர நாமத்தில் ஈடுபாடிருந்ததனாலும், அம்பிகையின் பெருமையை அந்த நூல் பலபடியாகக் கூறு வதனாலும் இந்தத் திருநாமங்கள் இந்நூலாசிரியரின் கருத் துக்கு அரண் செய்ய உதவுகின்றன.

இந்தப் பாடல்கள் தெளிவான நடையில் இருப்பதனால் உரை இல்லாமலே படித்துத்தெரிந்து இன்புறுவதற்குரியன. இதைப் பாடியவர் அருளாளர். ஆதலின் பல அநுபவ உண்மைகளை வெளியிட்டிருக்கிறார். அம்பிகையினிடம் இவருக்குள்ள உறுதியான பக்தியும், அம்பிகையின் பெருங் கருணைத் திறத்தை இவர் பாராட்டி வியக்கும் தகைமையும் தமக்குப் பக்குவம் குறைவு என்று சொல்லும அடக்க உணர் வும் அம்பிகையிடம் பக்தி கொள்வதனால் பலபல நன்மைகள் உண்டாகும் என்ற நம்பிக்கையும் இந்தப் பாடல்களால் புலனாகின்றன. சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கு வகை வழிபாட்டு நிலைகளிலும் நின்று பேசுகிறார் இந்த ஆசிரியர். அந்த அந்தத் துறையில் நிற்பவர்களுக்கு அந்த நிலையில் உள்ள பாடல்கள் மனத்தில் நன்கு பதிந்து உருக்கத்தை உண்டாக்கும். அநுபவாதிசயத்தைக் காட்டும் பாடல்கள் திருவாசகப் பாடல்களை நினைப்பூட்டுகின்றன.

இந்த நூலுக்கு ஓரளவு விளக்கம் எழுதத் துணை செய்த முருகன் திருவருளை வாழ்த்துகிறேன். ஸ்ரீ வித்யையில் துறை போய பெரியவர்கள் இதற்கு விளக்கம் கூறப் புகுந்தால் அது விரிவாகவும் பயனுள்ளதாகவும் இருக்கும்.

இதில் உள்ள கட்டுரைகளை வெளியிட்டு உதவிய 'சங்கர கிருபா'வின் ஆசிரியருக்கு என் நன்றியறிவைத் தெரிவித்துக் கொள்கிறேன். ஸ்ரீ சிருங்கேரியில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ சாரதா பீடாதிபதியாகிய ஸ்ரீமத் சங்கராசாரிய சுவாமிகளின் அருள் துணையால் வெளியாகும் அப்பத்திரிகை பல சமயக் கட்டுரைகளை வெளியிட்டு வருவதை அன்பர்கள் உணர்வார்கள்.

இவ்வாறே எஞ்சிய பாடல்களின் விளக்கமும் வெளியாக முருகப் பெருமான் திருவருள் கூட்டுவிக்கும் என்று நம்புகிறேன்.

'காந்த மலை'
சென்னை—28.

கி. வா. ஜகந்நாதன்
20—12—70

# செய்யுள் முதற் குறிப்பு அகராதி

## (26 முதல் 50 வரை)

# மாலை பூண்ட மலர்

அம்பிகையை மனம் உருகிப் போற்றி செய்த அபிராமி பட்டர் அப்பெருமாட்டியின் திருவருள் அநுபவத்தைப் பெற்றவர். தம்முடைய விண்ணப்பங்களை அன்னை ஏற்றுக் கொண்டாள் என்ற உறுதிப்பாடு அவருக்கு உண்டாயிற்று. தம்முடைய புகழ் மொழிகள் அபிராமி யம்மையின் திருவடி களுக்கு உகந்த மலர்கள் ஆயின என்ற நம்பிக்கை அவரிடம் தோன்றியது. அவர் தம்முடைய விருப்பம் காரணமாக அவ்வாறு எண்ணிக்கொண்டார் என்று சொல்லலாமா? மற்றவர் திறத்தில் ஒருகால் அப்படிச் சொல்லலாம். அபிராமிபட்டரோ அநுபூதிமான்; அம்பிகை யின் திருவுருவத்தைத் தரிசித்தவர். அந்த அநுபவ மிடுக்கினால் அவர் தம் பாமாலை அம்பிகையின் சரணாரவிந் தங்களில் ஏறியது என்று சொல்கிறார். அவர் உணர்ந்த உண்மை அது. தம் பாமாலை பூண்ட மலராக இறைவியின் திருவடியைப் பார்க்கிறார்.

அருளநுபவத்தில் ஆழ்ந்தவர்களுக்கு இப்படி ஓர் உணர்ச்சி உண்டாவது இயற்கை. முருகப்பெருமானுடைய திருவருளில் ஊறி அநுபூதி கைவரப்பெற்ற அருணகிரி நாதர்,

''மல்லே புரிபன் னிருவா குவில்என்
சொல்லே புனையும் கடர்வே லவனே''

என்று பாடுகிறார். முருகன் செய்த பேரருள் வல்லபத்தால் இந்த உணர்ச்சி அவருக்கு உண்டாயிற்று. அதே நிலையில் இருப்பவர் அபிராமிபட்டர்.

எம்பெருமாட்டியின் திருவடிகளில் தம் பாமாலை சேர்ந்து விளங்குவதனால் அவருக்கு ஒரு பெருமிதம் உண்டாயிற்று. ஆனால் அதே சமயத்தில் ஒரு வியப்பும் உண்டாகிறது. அவருடைய நிலை என்ன! அம்பிகையின் நிலை என்ன! அவருடைய மொழிகள் அன்னையின் திருவடியில் தங்கும் தகுதியைப் பெற்று அங்கே சேர்ந்தனவா? இல்லை, இல்லை; எம்பெருமாட்டியின் கருணையினால்தான் அவை அங்கே இணைந்தன. அவருடைய பாடல்கள் அம்பிகையின் தாளை அடையும் தகுதி அமைந்தன என்று அவர் நினைக்கவில்லை. அன்னை பெருங் கருணையால், 'நம்முடைய அன்புக்குகந்த பிள்ளை கட்டிய மாலை ஆயிற்றே!' என்று அவற்றை ஏற்றுக்கொண்டாள் என்பது அவருடைய எண்ணம். மூவரைப் பெற்ற அன்னை யாகிய அவளுக்கு இது ஒரு பொருளா? ஆனாலும் இம் மாலையை அவள் ஏற்றுக்கொண்டாள்.

தம்முடைய புன்மொழிகளுக்குக் கிடைத்த பேற்றை எண்ணி அபிராமிபட்டர் வியக்கிறார்; 'இந்தப் புன்மொழி களுக்கும் இத்தனை உயர்வு வந்ததே!' என்று நகைக் கிறார். 'எம்பெருமாட்டியே, ஒன்றுக்கும் பற்றாதவன் அடியேன். என்னுடைய நாக்கு எச்சிலை உமிழ்வது; எதை எதையோ உண்ணுவது; எதை எதையோ உரைப்பது; அழுக்கு நிறைந்தது; என் அழுக்கு மனத்தில தோன்றும் அழுக்கான எண்ணங்களை அழுக்கான மொழிகளாக்கி வெளியிடுவது. இத்தகைய இழிந்த நாக்கில் தங்கி நின்ற வார்த்தைகளே உன் தோத்திரமாக வந்தன. அந்த மொழிகளில் சொல்நயம் உண்டா? பொருள்நயம் உண்டா? சாரம் இல்லாத பொலிவற்ற புன்மொழிகள் அவை. நான் குணமற்றவன். என் நாக்கு அழுக்குடையது. அதில் தோன்றியவையோ புன் மொழிகள். அப்படி யிருந்தும் நீ அவற்றை உன் திருவடிகளில் மாலையாக ஏற்றுக்கொண்டாய். எளியேன் நாவிலே தங்கியிருந்த

அந்தப் புன் மொழிகள் இப்போது உன் திருவடிகளில் ஏறிக்கொண்டன. இது என்ன ஆச்சரியம்! நினைக்க நினைக்கச் சிரிப்பாக வருகிறதே!' என்கிறார்.

(நின் தாளிணைக்கு என்)

நாத் தங்கு புன்மொழி ஏறியவாறு
நகை உடைத்தே!

அந்தத் தாளிணை இயல்பாகவே தாமரையின் எழிலும் மணமும் உடையது. இந்திராதி தேவர்கள் கற்பகமலர் முதலியவற்றால் பூசிக்க, அவற்றால் உண்டான நறுமணத்தையும் பெற்றது. இயற்கையாகவும், பூமாலை முதலியவற்றால் செயற்கையாகவும் மணம்பெற்று நிலவுவது அன்னையின் தாளிணை. அவை பெற்ற பாமாலைகளைப்பற்றி எண்ணினால் எல்லையின்றி விரியும். வேதம் அவள் திருவடிகளைச் சூழ்ந்து புலம்புகிறது. எத்தனையோ பெரியவர்கள் தம் அருள் மணக்கும் பாமாலைகளால் அவ்வடிகளுக்கு அழகு செய்திருக்கின்றனர். வடமொழி மாலைகளும் தென்மொழி மாலைகளும் புனைந்து இலங்குவன அந்தத் திருவடிகள். பூமணமும் பாமணமும் இணைந்து மணக்கும் அந்தத் திருவடிகளில் அபிராமிபட்டருடைய மொழிகளும் அலங்காரமாயின.

'முன்பே பூவும் பாவும் மணக்கும் நின் தாளிணைக்கு என் புன் மொழிகள் ஏறியது நகைப்பதற்குரியது' என்கிறார்.

மணம் நாறும் நின் தாளிணைக்கு என்
நாத் தங்கு புன்மொழி ஏறியவாறு
நகை உடைத்தே!

எம்பெருமாட்டி எத்தகையவள்? தன்னைப் புகழ்வார் யாரும் இல்லாமையால், 'இவனாவது பாடினானே!' என்று

ஏற்றுக் கொள்ளவேண்டிய நிலையில் இருப்பவளா? உலக மெல்லாம் மிகப்பெரியவர்கள் என்று எந்த மூர்த்திகளைத் துதிக்கின்றதோ, அவர்கள் எம்பெருமாட்டியின் புகழைப் பாடுகிறார்கள். உலகத்தில் உள்ள அடியவர்கள் இறைவியைப் புகழ்வது பெரிது அன்று; முனிபுங்கவர்கள் அவளுடைய துதிகளைப் பாடுவது அரிதன்று; கந்தருவர், கின்னரர், வித்தியாதரர்கள் அன்னையின் இசை பாடுவதும் பெரிய செயல் அன்று; தேவர்கள் பாராட்டுகிறார்களே, அதுவும் அருமையான காரியம் அன்று; தேவர்களுக்கு அதிபதியாகிய இந்திரன் பொழுது விடிந்தால் அம்பிகையைப் புகழ்ந்து வாழ்த்தி வாழ்கிறான்; அதுகூடப் பெருமையன்று. இவர்களுக்கெல்லாம் மேலானவன் பிரமதேவன்; படைப்புத் தொழில் புரியும் பெரியவன்; அவன் அம்பிகையைப் போற்றுகிறான். தன் படைப்புத் தொழிலைத் தன்பால் வைத்துக் காப்பாற்றுபவள் அன்னை என்ற அறிவுடையவனாதலால் அவளை ஏத்துகிறான். அவன் மட்டுமா? அவனைப் பிறப்பித்தவர் திருமால்; காப்புத் தொழிலை நடத்தும் பெருமான் அவர்; அவரும் அம்பிகையை ஏத்துகிறார். 'கமலாக்ஷ நிஷேவிதா' (558) என்று லலிதா சகசிரநாமம் கூறுகிறது. பிரமனும் திருமாலும் ஒன்றுகூடி அம்பிகையை வாயாரத் துதிக்கிறார்கள். எவ்வளவு பெரியவர்கள் அவர்கள்! 'ப்ரம்ஹோபேந்த்ர மஹேந்த்ராதி தேவ ஸம்ஸ்துத வைபவா' (83) என்னும் லலிதாம்பிகையின் திருநாமமும், 'ஹரி ப்ரஹ்மேந்த்ர ஸேவிதா' (297) என்ற திருநாமமும் இந்த உண்மைகளை உரைக்கின்றன.

இவ்வளவு உயர்ந்தவள் என்று நாம் நினைத்து வியக்கிறோம். அம்பிகையின் பெருமை அதோடு நிற்கிறதா? சர்வ சங்காரம் செய்யும் சிவபெருமானே அவளைத் துதிக்கிறார். 'மஹாபைரவ பூஜிதா' (231) என்று சகசிரநாமம் கூறுகிறது.

இந்த மும்மூர்த்திகளும் அடியவர்களாக நின்று வணங்கிப் பணிவுடன் அம்பிகையை ஏத்துகிறார்கள்.

''சந்திப் பவர்நாற் றிசைமுகர், நாரணர்
சிந்தையுள்ளே
பந்திப் பவர் அழி யாப்பர மானந்தர்''

என்று முன்னும் இவர் பாடினார் (14)

ஈரேழுலகையும் படைக்கும் பிரமனும், காக்கும் திருமாலும், அழிக்கும் சிவனும் இறைவியின் சந்நிதானத்தில் அடியவராகி நின்று ஏத்துகிறார்கள்.

ஏத்தும் அடியவர், ஈரேழுலகினையும்
படைத்தும் காத்தும் அழித்தும் திரிபவராம்.

இவ்வாறு மும்மூர்த்திகளும் புகழும் பெருமாட்டிக்குப் புகழ்மாலை அரிதென்று சொல்லலாமா? அவர்கள் ஏத்தியதால் படைத்தல் முதலிய தொழில்களைச் செய்து வளைய வருகிறார்கள். 'அவர்களுடைய துதி மாலைகள் ஏறிய திருவடிக்கு என்னுடைய புன்மொழிகளும் ஏறினவே!' என்று வியக்கிறார் ஆசிரியர்.

எம்பெருமாட்டி அடிமுதல் முடிவரையில் மணம் பொருந்திய பொருள்களை அணிபவள். அவளுக்குக் கதம்ப மலர் என்றால் மிகவும் விருப்பம். 'கதம்ப குஸுமப்ரியா' (323) என்பது அவளுடைய திவ்ய நாமங்களில் ஒன்று. அவள் கதம்ப வனத்தில் வாழ்கிறவள். தன்னுடைய அழகிய கூந்தலில் கடம்ப மலரைத் தரித்திருக்கிறாள். முடி கதம்பம் மணக்கிறது. அடியும் மலர்கள் மணக்கிறது. பூங்கடம்பு சாத்தும் குழலும், மணம் நாறும் தாளிணையும் உடையவள் அவள்.

கமழ் பூங்கடம்பு
சாத்தும் குழல் அணங்கே, மணம்
நாறும் நின் தாளிணைக்கு.

"மும்மூர்த்திகளும் போற்றிப் புகழும் பெருமாட்டி என் புன்மொழியையும் ஏற்றுக்கொண்டாள். மணம் நாறும் குழலும் அடியும் உடையவள் என் மணமற்ற புன் மொழியை ஏற்றுக்கொண்டாள். அவள் பெருங்கருணை இருந்தவாறு என்னே! என் புன் மொழிகளுக்குக் கிடைத்த பேற்றை எண்ணுகையில் எனக்கே சிரிப்பு வருகிறது" என்று பாடுகிறார் அபிராமிபட்டர்.

ஏத்தும் அடியவர், ஈரே ழுலகினை
  யும்படைத்தும்
காத்தும் அழித்தும் திரிபவ ராம்; கமழ்
  பூங்கடம்பு
சாத்தும் குழல்அணங் கே,மணம் நாறும்நின்
  தாளிணைக்குஎன்
நாத்தங்கு புன்மொழி ஏறிய வாறு
  நகையுடைத்தே!

[மணம் வீசுகின்ற கடம்பமலரை அணியும் கூந்தலை யுடைய தெய்வப் பெண்ணே, உன்னைத் துதிக்கும் அடியவர்கள் பதினான்கு உலகங்களையும் படைத்தும் காத்தும் அழித்தும் திரிபவர்களாகிய மும் மூர்த்திகள், அப்படி இருக்க மணம் வீசுகின்ற நின்னுடைய இரண்டு திருவடிகளுக்கு ஒன்றுக்கும் பற்றாத அடியேனுடைய நாக்கில் தங்கிய பொலிவற்ற மொழிகள் ஏறிய செயல் நகைக்கத் தக்கதாக இருக்கிறது!

ஏத்துதல்-துதித்தல். இணை-இரண்டு, புன்மொழி;- சொற்சுவை பொருட் சுவை இல்லாத மொழி.]

தம் மொழிகளை எண்ணும்போது நகையுடைத்து என்று கூறினாலும். அம்பிகை பெருங்கருணையினால் சௌலப்யத்தோடு வந்து ஏற்றுக்கொண்டாள் என்ற வியப்பை உள்ளுறையாகக் கொண்டது இப்பாட்டு.

இது அபிராமி அந்தாதியில் 26-ஆம் பாட்டு.

# என்ன அதிசயம்!

தம்முடைய புன்மொழியையும் அம்பிகை ஏற்றுக் கொண்டாள் என்பதை எண்ணி மகிழ்ந்த அபிராமிபட்டர் அப்பெருமாட்டியால் தமக்கு உண்டாகியிருக்கும் உயர்ந்த வாழ்வை இப்போது சிந்தித்துப் பார்க்கிறார். அன்னையின் அருளால், இனிப் பிறவாத உறுதி அவருக்கு வந்திருக்கிறது. பிறவிப் பெருங்கடலுக்கு நாவாயைப் போன்ற அன்னையின் திருவடிகளை இறுகப் பற்றிக்கொண்ட அவருக்கு, இந்தப் பிறவியில் அடைய வேண்டியதை அடைந்து விட்டமையால், இனிப் பிறக்கவேண்டிய அவசியமே இல்லாமற் போயிற்று. அகங்கார மமகாரத்தை ஒழித்து, தம் செயல் என்ற உணர்வே இல்லாமல், எல்லாம் அவள் செயல் என்று உணரும் அநுபவ நிலையில் இருப்பவராதலால் அவருக்கு வினை இல்லை. ஆகையால் அதனால் வரும் விளைவாகிய பிறப்பும் இல்லை. அது இப்போதே புலனாகிறது. சுந்தரமூர்த்தி நாயனாரும்,

> "பெற்றாலும் பிறந்தேன் இனிப்
> பிறவாத தன்மை வந்து எய்தினேன்"

என்று பாடுகிறார்; அவ்வளவு உறுதி, உண்மையான பக்தர்களுக்கு உண்டாகும். அன்னைக்கு, 'ஜன்ம ம்ருத்யு ஜராதப்த ஜனவிச்ராந்தி தாயினீ' (851) என்பது ஒரு திருநாமம். பிறப்பு, இறப்பு, மூப்பு ஆகியவற்றால் வருந்தும் மக்களை அத்துன்பங்களினின்றும் நீக்கி அமைதியைக் கொடுப்பவள் என்பது அதன் பொருள். ஜன்மக் கனலால் வரும் தாபத்தை நீக்கும் பிராட்டி அவள்.

நாம் எடுக்கும் பிறவி ஒன்றா இரண்டா? அநாதி காலமாக நாம் பிறந்து பிறந்து இறந்து வருகிறோம். இதற்கு

முன் போன பிறவிகள் எத்தனையோ? இனி வர இருக்கும் பிறவிகள் எத்தனையோ? இவை மலை மலையாகக் குவிந்திருக்கின்றன. இவற்றைப் போக்க யாராலும் ஆகாது. அன்னையின் அருள் ஒன்றுதான் இந்த வஞ்சப் பிறவியை உடைத்துத் தூள் தூள் ஆக்கும் திறமையுடையது. 'இனி எனக்குப் பிறவியே இல்லை. பிறவிப் பெருமலையை நீ நின்னருளால் உடைத்துத் தகர்த்துவிட்டாய். என் செயலால் ஆனது அன்று இது. நின் திருவருள் செய்த அற்புதம் இது' என்று கூறி, 'அந்தத் திருவருளின் பெருமையை எத்தகையதென்று அடியேன் சொல்லிப் பாராட்டுவேன்!' என்று அதிசயப்படுகிறார். ஆனந்த அநுபவத்திலே பிறந்த அதிசயம் இது.

> உடைத்தனை வஞ்சப் பிறவியை;
> ..............சுந்தரி, நின் அருள்
> ஏது என்று சொல்லுவதே!

இந்த நிலை எளிதில் வந்துவிட்டதா? இதற்கு முன் எத்தனையோ படிகளைத் தாண்டவேண்டியிருந்தது. இப்போது முடிந்த இன்ப நிலையில் இருக்கும் ஆசிரியர் பின் திரும்பிப் பார்க்கிறார். காரியத்தை முன்னே வைத்துக் காரணத்தைப் பின் வைத்துப் பேசுகிறார். பிறவியினால் வரும் துன்பம் இல்லையென்பதற்குக் காரணம், 'என் செயலாவது யாதொன்றும் இல்லை. என்ற உணர்வுதான். அந்த உணர்வு உண்டாவதற்குக் காரணமாக இருப்பது அன்னையின்பால் உள்ள இணையற்ற அன்பே. அவளை நினைந்து நினைந்து உருகும் அன்பு அவரிடம் உண்டாயிற்று. அது முறுக முறுக இந்த நிலை வந்திருக்கிறது. அந்த அன்பு எப்படி வந்தது? அதுவும் அன்னையின் அருளாலே அமைந்ததுதான். உள்ளம் உருகும் அன்பு எளிதில் வருவதில்லை. எத்தனை நூல்களைக் கற்றாலும் அறிவு

கூர்மையாகுமேயன்றி உள்ளம் குழைவதில்லை. பல வகையான நற்செயல்களைச் செய்பவர்களுக்கும் உள்ளம் எளிதில் உருகுவதில்லை.

அன்னையை நினைந்து உருகுவது அன்பிற்கு அடையாளம்.

''நினைந்துருகும் அடியார்''

என்று அப்பர் சொல்வார். மனம் கல்லாக இருக்குமட்டும் நற்குணங்கள் அதில் ஏறுவதில்லை. நம்முடைய தாழ்ந்த நிலையை முதலில் எண்ணி எண்ணி நெஞ்சு நெகிழ வேண்டும். பிறகு அன்னையின் பேரருளுக்காக ஏங்கிக் கரையவேண்டும். இந்த உருக்கமே அன்புக்கு அடையாளம்.

பிறவி இனி இல்லை என்ற சாத்திய நிலைக்கு முன் இருந்த சாதன நிலை உள்ளம் உருகும் அன்பு நிலை. அந்த நிலையும் நம்முடைய முயற்சியினுலே வருவதன்று; இறைவியின் திருவருளே அதனை நம்மிடம் உண்டாக்கவேண்டும். 'அந்த நிலையை அம்மை என்னிடம் படைத்தாள்' என்கிறுர்.

உள்ளம் உருகும் அன்பு படைத்தனை:
...நின் அருள் ஏதென்று சொல்லுவதே!

அன்பு என்பது உள்ளத்தில் உண்டாவது. அந்த உணர்ச்சி முறுகவேண்டுமானுல் பலகாலும் அன்னையைப் பணிந்து வழிபடவேண்டும். பணக்காரர்களைப் பார்த்து அவர்கள் பெற்றுள்ள வசதிகளைக் கண்டு, 'நாமும் பணத்தைச் சம்பாதிக்கவேண்டும்' என்ற எண்ணம் உண்டாகும். அவ்வாறே அன்னையை வணங்கி நலம் பெறும் பக்தர்களைக் கண்டு, 'நாமும் இந்த நிலையைப் பெறவேண்டும்' என்ற எண்ணம் எழவேண்டும். இறைவியைப் பணிந்து வழிபடுவதற்கே இந்தப் பிறவி

கிடைத்திருக்கிறது என்ற உண்மையை உணர்ந்து கொள்ளவேண்டும். அத்தகைய நிலையும் அவள் அருளாலே தான் வரவேண்டும். ''அவன் அருளாலே அவன் தாள் வணங்கி'' என்று மாணிக்கவாசகர் கூறுகிறார்.

வேறு எந்தக் காரியங்களைச் செய்தாலும் செய்யா விட்டாலும் தேவியைப் பணியும் காரியத்தை விடாமல் செய்யும் தகைமையை இவ்வன்பர் பெற்றார். அதுவும் அப்பெருமாட்டியின் திருவருளால் விளைந்த விளைவே என்பதை எண்ணி வியக்கிறார்.

> பத்ம பதயுகம் சூடும் பணி எனக்கே
> அடைத்தனை... நின் அருள் ஏதென்று
> சொல்லுவதே!

'நின்னுடைய தாமரைபோன்ற இரண்டு திருவடிகளை என் தலையில் வைத்துக்கொள்ளும் பணியையே அடியே னுக்கு உரியதாக வரையறுத்துவிட்டாய்; இந்தத் திருவருளை எப்படிப் புகழ்வேன்!' என்று பாடுகிறார்.

'பணி எனக்கே அடைத்தனை' என்பதிலுள்ள ஏகாரத்தை மாற்றிக் கூட்டி, 'பணியே எனக்கு அடைத்தனை' என வைத்துப் பொருள் செய்யவேண்டும்.

> ''பாடும் பணியே பணியாய் அருள்வாய்''

என்று அருணகிரிநாதர் கந்தரநுபூதியில் அருளியது காண்க.

அன்னையின் இரண்டு பாதங்களையும் சூடுவதே வேலையாக வாழ்ந்தவர் அபிராமிபட்டர். இது எப்படிச் சாத்தியம்? வேறு வேலை ஏதும் இல்லையா? எந்த வேலை செய்தாலும் அது இந்த வேலைக்கு உபகாரப்படுவதாகவே அமையும். எதை மறந்தாலும் இதை மறக்கமாட்டார்.

ஒருவர் ஓர் உத்தியோகத்தில் இருக்கிறார். ''அவருக்கு என்ன வேலை?'' என்று கேட்கும்போது, ''அவர் குமாஸ்தா

வேலை செய்கிறார்'' என்று சொல்கிறார்கள். காலையில் எழுந்தது முதல் இரவு வரையில் அவர் குமாஸ்தா வேலையையே செய்துவருகிறார் என்றா நாம் நினைப்போம்? அலுவலகம் சென்று செய்யும் வேலை அது. ஆனாலும் அதைச் செய்வதற்கு வேண்டிய உடல் வலிமை, உள்ளத் தெளிவு, மகிழ்ச்சி ஆகியவற்றைப் பெறுவதற்குரிய காரியங்களை மற்ற நேரங்களில் செய்கிறார். அவை யாவும் அவர் உத்தியோகம் பார்க்கிறதற்கு உபகாரமாக இருப்பவை. அவ்வாறே இறைவியைப் பணிந்து வழிபடும் உடம்புக்கு வேண்டியவற்றைச் செய்யும் காரியங்கள் அந்தப் பணிக்கு உபகாரப்படுவனவே ஆகும். புலன் நுகர்ச்சியையே பெரிதாக எண்ணி உடம்பைப் போற்றுவது மற்றவர்கள் செயல். பக்தர்களோ இந்த உடம்பு அன்னையின் தொண்டைப் புரிவதற்கு வந்த கருவியென்று கருதி இதைப் பாதுகாப்பார்கள். அர்ச்சனை செய்வதற்காக மலர்களைப் பறிக்கிறார் பக்தர். ஒரு குடலையில் மலரைக் கொய்து போட்டுக்கொள்கிறார். அந்தக் குடலை பிய்ந்து போகாதபடி பார்த்துக்கொள்வது அவர் கடமை. அதுவும் அர்ச்சனைக்கு உதவுகிற காரியந்தான். நேர்முகமாக உதவா விட்டாலும் மறைமுகமாக உதவுகிறது. அவ்வண்ணமே இந்த உடம்பைப் பாதுகாப்பதும், அன்னையின் வழி பாட்டுக்கு அங்கமான செயலே. இப்படிப் பார்த்தால் பக்தர்கள் எது செய்தாலும் அது அன்னையின் வழி பாட்டுக்கு ஏதேனும் ஒரு வகையில் உபகாரப்படுவ தாகவே அமையும். அதை நினைந்தே, 'உன் திருவடியைப் பணிவதாகிய வேலையையே எனக்கு நியமித்தாய்' என்று ஏகாரம் போட்டுச் சொன்னார். அது பிரிநிலை ஏகாரம். வேறு வேலை ஏதும் இல்லை என்பதைக் குறிக்க வந்தது அது.

இறைவியை வழிபட்டு வழிபட்டு உள்ளத்தே உருகும் அன்பு உண்டாகி முறுகி, ஜீவபோதம் கழன்று இனிப்

பிறவி இல்லை என்ற உறுதியான நிலைக்கு வந்தவர் ஆசிரியர். எல்லாமே இறைவியின் திருவருளால் விளைந்தவை என்று உணர்ந்து பாடுகிறார்.

அவள் திருவடி பணியும் பணியையே செய்யும் நிலையை இப்போது சொன்னார். அதுமட்டும் எளிதில் வந்துவிடுமா? அடிப்படையான நிலைகளில்தான் அல்லல் அதிகம். மனம் பல பல திசைகளில் தாவும். முன்பே பல பிறவிகளில் பூசிக் கொண்ட வாசனைகளாகிய அழுக்கு களோடு இந்தப் பிறவியிலும் பல மாசுகளை ஏற்றிக் கொள்கிறது. எத்தனை காலம் வாழ்கிறோமோ. அத்தனை காலம் மாசுகள் ஏறிக்கொண்டே இருக்கின்றன. மாசற்ற உள்ளமுடைய குழந்தை வளர்ந்து உலகத்தில் பழகப் பழக அதன் உள்ளம் மேலும் மேலும் ஆசை முதலிய அழுக்குகளை ஏற்றிக்கொள்கிறது. இந்த அழுக்கு இருக்கிற வரைக்கும் இறைவியிடம் பக்தி நன்றாகப் படியாது. அழுக்குள்ள சுவரில் சித்திரம் எழுத இயலாது. ஆகவே நெஞ்சத்தில் உள்ள அழுக்கைப் போக்கிக் கொண்டால்தான் அம்பிகையின் வழிபாடு பிடிக்கும். இதுதான் மிக மிக அடிப்படையான செயல்: மேலே கட்டும் பெரிய திருமாளிகைக்கு அஸ்திவாரம் போன்றது. பல பல பிறவிகளில் பூசிக்கொண்ட அழுக்கையல்லவா போக்கவேண்டும்?

இதைப் போக்குவது எப்படி? இதுவும் நம்முடைய முயற்சியால் நிறைவேறுவது அன்று. அன்னையின் அருள் தான் இந்த அழுக்கைப் போக்க வேண்டும். நாம் உலகில் காணும் புனல் யாவும் அழுக்கேறியது. அழுக்குப் புனலால் அழுக்கைப் போக்க முடியுமா? சாக்கடைத் தண்ணீரைக் கொண்டு வீட்டைச் சுத்தம் செய்யலாமா?

ஆதலால் தூயதாக உள்ள புனலால் இந்த அழுக்கைக் கழுவவேண்டும். அந்தப் புனலும் வேகமாக வெள்ள

மாக வந்து அடிக்கவேண்டும். அப்போதுதான் நம் நெஞ்சிலே படலம் படலமாகச் சேர்ந்துள்ள அழுக்குக் கரையும். அப்படி ஒரு புனல் உண்டா? உண்டு; அதுதான் அம்பிகையின் அருளாகிய புனல். அது கரையை உடைத்துக்கொண்டு பாயும் கடல்போலப் பெருக் கெடுப்பது. அருள் வெள்ளம் என்று சொல்வார்கள். அந்த அருட்புனலால் அம்பிகை நெஞ்சில் உள்ள அழுக்கை எல்லாம் துடைத்தாளாம்.

நெஞ்சத்து அழுக்கை எல்லாம் நின்
அருட்புனலால் துடைத்தனை; சுந்தரி!
நின் அருள் ஏதென்று சொல்லுவதே!

அவள் அருளாகிய புனல் எத்தனை அழுக்கு இருந் தாலும் அதைப் போக்கிவிடும் ஆற்றல் உடையது. அந்த அழுக்கு நமக்குப் பெரிய பாரமாக இருக்கிறது; பிறவி களுக்குக் காரணமாக இருந்து தொல்லை கொடுக்கிறது. ஆனால் அம்பிகை மிக எளிதில் அதைப் போக்கிவிடு கிறாளாம். முகம் பார்க்கும் கண்ணாடியில் சிறிது அழுக்கு இருந்தால் எளிதில் கையால் துடைத்துவிடுவதுபோல, துடைத்து விடுகிறாளாம். இது எத்தகைய ஆச்சரியம்!

அவள் அழகி; சுந்தரி; அழகியர் சூழ நிற்கும் பேரழகி. அவள் பழகும் இடம் யாவும் அழகியவை. அவளுக்கும் அழுக்குக்கும் நெடுந்தூரம். அவள் எங்கே சென்றாலும் அங்கே உள்ள அழுக்கு மறைந்து போகும்; அழகு பொங்கும். சுண்ணாம்புக்கல்லில் நீரை விட்டால் அது மலர்ந்து வெளுப்பது போலவே, அவள் அருட்புனல் பாயும் இடங்கள் அழுக்கு நீங்கி அழகு பெறும்.

நம் உடம்பு அழுக்கானது;

"அழுக்கு மெய்கொடுன் திருவடி அடைந்தேன்"

என்பது சுந்தரர் திருவாக்கு. நம் மனமோ அதைவிட அழுக்கானது;

"அழுக்கு மனத்து அடியேன்"

என்பார் மாணிக்கவாசகர்.

இந்த அழுக்குகள் போக அம்பிகையின் அருளென்னும் கங்கை பாயவேண்டும். அபிராமிபட்டருக்கு அருள் வெள்ளம் பாய்ந்தது; அதனால் அவர் நெஞ்சத்து அழுக்கெல்லாம் போயின; அதனால் வேறு ஒரு கடைப்பிடியும் இல்லாமல் இறைவியின் திருவடிகளைச் சூடும் பணி ஒன்றையே செய்தார்; அதனால் உள்ளம் உருகும் அன்பு உண்டாகி வளர்ந்தது; அதனால் இனிப் பிறவியே இல்லை என்ற முக்தி நிலையை அடைந்தார். இது காரண காரிய முறையில் வைத்துப் பாடுகிறார் அபிராமிபட்டர்.

உடைத்தனை வஞ்சப் பிறவியை;
உள்ளம் உருகும் அன்பு
படைத்தனை; பத்ம பதயுகம்
சூடும் பணி எனக்கே
அடைத்தனை; நெஞ்சத்து அழுக்கைஎல்
லாம்நின் அருட்புனலால்
துடைத்தனை; சுந்தரி, நின் அருள்
ஏதென்று சொல்லுவதே!

[பேரழகியே, வஞ்சகமாக யான் அறியாவண்ணம் வந்து என்னைத் துன்புறுத்தும் பிறவிக்குவையை உடைத்து விட்டாய்; அதற்குமுன் அடியேனுடைய உள்ளம் உருகுவதற்குக் காரணமான சிறந்த அன்பை அடியேன் பெறும்படி செய்தாய்; அது உண்டாவதற்குமுன் நின்னுடைய தாமரை மலரைப் போன்ற இரண்டு திருவடிகளை எளியேன் தலையில் அணிந்து வழிபடும் வேலையையே எனக்கு

நியமித்தாய்; அதற்குமுன் ஏழையேனுடைய நெஞ்சிலுள்ள பல வகையான அழுக்குகள் எல்லாவற்றையும் நின் அருளாகிய தூய தண்ணீரால் துடைத்து விட்டாய்; இவ்வளவுக்கும் காரணமாய் நின்று உதவிய நின் திருவருளை எத்தகையதென்று சொல்வது!

உடைத்தல் — பொடியாக்குதல். வஞ்சம் என்பது நெருங்கிப் பழகுபவருக்கும் தெரியாத கொடுமைப் பண்பு. படைத்தனை-உண்டாக்கினாய். யுகம்-இரண்டு. சூடுதல்-தலையில் அணிதல்; தலையால் வணங்குவதைக் குறித்தது. உபலட்சணத்தால் முக்கரண வழிபாட்டையும் கொள்ள வேண்டும். பணி - உத்தியோகம். பணியே எனக்கு அடைத்தனை; அடைத்தல்-வரையறுத்தல்; இதனையன்றி வேறு வேலை செய்யவேண்டாம் என்று நியமித்தல். அருட்புனல்-பெருங்கருணை வெள்ளம். துடைத்தனை என்றார், எம்பெருமாட்டி எளிதில் செய்தாள் என்ற குறிப்புத் தோன்ற. அழுக்கின்றி நின்ற அழகுப் பிராட்டியாதலின், சுந்தரி என்றார். இவ்வளவுக்கும் மூலகாரணமாக நிற்பது நின் அருள் என்றபடி. அதன் வலிமையையும், எளிதாந் தன்மையையும் எவ்வாறு சொல்ல இயலும் என்று அதிசயிக்கிறார்.]

அம்பிகையின் திருவருள் இருந்தால் சித்த சுத்தியும், உபாசனா பலமும், முறுகிய பக்தியும், ஜீவன் முக்தியும் படிப்படியாக உண்டாகும் என்பது கருத்து.

இது அபிராமி அந்தாதியில் உள்ள 27-ஆவது பாடல்.

# இம்மையும் மறுமையும்

தமக்குப் படிப்படியாக நிலை உயரும்படி அருள் செய்த அம்பிகையின் பெருங்கருணையை நினைந்து வியப் படைந்த ஆசிரியர், பொதுவாக யார் அன்னையைப் புகலடைந்தாலும் அவர்களுக்கு இகத்திலும் பரத்திலும் படிப்படியே நன்மை உண்டாகும் என்று சொல்ல வருகிறார்.

முதலில் அம்பிகையைத் துதிக்கிறார். எம்பெருமாட்டி சிவபெருமானுடன் இணைந்து விளங்குகிறாள். சொல்லும் பொருளும் இணைந்ததுபோல் பிரிவின்றி இணைந்து நிற்கிறார்கள் இருவரும். அன்னை சொல்வடிவாக இருப்பவளென்றும், சிவபெருமான் அதன் பொருள் வடிவாக இருப்பவன் என்றும் காளிதாஸன் முதலிய மகாகவிகள் கூறுகிறார்கள்.

"சொல்வடிவாய்நின் இடம்பிரியா இமயப் பாவை,
தன்னையும்சொற் பொருளான உன்னையுமே"
—இடைக்காடன் பிணக்குத் தீர்த்தபடலம், 1

என்பது திருவிளையாடற் புராணம். இறைவியும் இறைவனும் ஒன்றி நிற்கும் கோலத்தை அபிராமிபட்டர் நினைக்கிறார்.

சொல்லும் பொருளும் என நடமாடும்
துணைவருடன்
புல்லும் பரிமளப் பூங்கொடியே!

அம்பிகை சொல்வடிவாக இருக்கிறாள்; வாயிலிருந்து வரும் சொற்கள் யாவும் அவள் அருளால் வருவன; அவளே அந்த மயமாக விளங்குகிறாள். வாக்வாதினீ (350).

வாகதீச்வரி (640) என்ற திருநாமங்களை அவள் பெற்றிருக்கிறாள்.

நடமாடும் துணைவராகிய நடராசப் பெருமானுடன் அவள் ஒன்றி நிற்கிறாள். அவளும் நடமாடுவதுண்டு. அதனால் அவளுக்கு நடேச்வரி (734) என்ற திருநாமம் அமைந்தது. கற்பகத்தோடு காமவல்லி என்னும் கொடி ஒன்றித் தழுவி நிற்பதுபோல எம்பெருமாட்டி இருக்கிறாள். கொடிபோன்ற அவளைச் சிவகாமவல்லி என்று பாராட்டுகிறோம். நடராசப் பெருமானுடன் நின்று விளங்குபவள் அவள். அந்தத் திருநாமத்தை நினைந்தே இங்கும் பூங்கொடியே என்றார்.

அம்பிகை தெய்விக மணம் கமழும் திருமேனியை உடையவள்; ஞான மணம் கமழும் திருக்கோலம் பெற்றவள். 'திவ்ய கந்தாட்யா' (631) என்று லலிதா சகசிர நாமம் கூறுகிறது. இவ்வாசிரியர், "பரிமள யாமளைப் பைங்கிளியே" (15), "சுடரும் கலைமதி துன்றும் சடைமுடிக் குன்றில் ஒன்றிப் படரும் பரிமளப் பச்சைக் கொடி" (48) என்று வேறு இடங்களில் பாடுவார்.

> சொல்லும் பொருளும் என நடம் ஆடும்
> துணைவருடன்
> புல்லும் பரிமளப் பூங்கொடியே.

இவ்வாறு அன்னையைத் துதித்தவர் அவளுடைய அடியார் பெறும் பேற்றைச் சொல்ல வருகிறார். அவள் இம்மை மறுமைப் போகங்களை வழங்குபவள் என்பதை உணர்த்துகிறார்.

அவளுடைய திருவடி தாமரை மலரைப் போன்றது. தாமரை மலரோ வாடுவது. இந்தத் திருவடி என்றும் வாடாதது; அப்பொழுது அலர்ந்த புதிய மலரைப் போலவே எப்போதும் விளங்குவது மலருக்குரிய

தண்மையும், மென்மையும், விரிவும் அந்தத் திருவடிக்கு உண்டு. அதோடு ஞான மணமும் ஆனந்தத் தேனும் பில்குவது. அதனைத் தொழுவது அடியார் திறம். அடியைப் பற்றிக் கொள்வதனால்தான் அடியார் என்ற பெயர் அமைந்தது. இரவும் பகலும் இடைவிடாமல் அம்மையின் திருவடியைத் தொழுகிறார்கள். அத்தகையவர்கள் மிகச் சிறந்த பேற்றை அடைகிறார்களாம்.

அவர்களுக்கு இந்த உலகத்திலே சிறந்த இன்ப வாழ்வு உண்டாகிறது. இம்மை வாழ்வுக்குச் சிறப்பைத் தருவது பொருள்.

"பொருளிலார்க் கிவ்வுலகம் இல்லை"

என்பது திருக்குறள். செல்வம் பெற்றவர்களுள் சிறந்த வன் அரசன். அவனுடைய செல்வத்தை ராஜபோகம் என்றும் அரசத்திரு என்றும் சிறப்பித்துச் சொல்வார்கள். அரசனுக்கும் சில சமயங்களில் துன்பம் உண்டாகும். பகைவர்களால் தன் அரசை இழக்கும் நிலை வரும். அத்த கைய நிலை வராமல் அழியாத அரசத்திருவுடன் விளங்கும் வாழ்வை அன்னையின் அடியவர்கள் பெறுவார்கள்.

நின் புது மலர்த்தாள்
அல்லும் பகலும் தொழும் அவர்க்கே
அழியா அரசும்

அம்பிகைக்கு ராஜ்ய தாயினீ (685) என்ற திருநாமம் ஒன்று உண்டு.

அரசச் செல்வம் பெற்று அந்தச் செல்வத்தால் தருக் குற்று வாழ்ந்தால் அவர்களுக்கு நன்மை இல்லை. நன்றாகப் போக போக்கியங்களை அநுபவித்துவிட்டுப் பிறகு எல்லா வற்றையும் துறந்து தவம்புரிவது பழைய கால அரசர் வழக்கம். தசரதன் தவம்புரிய எண்ணியே இராமனுக்கு

முடிசூட்ட முயன்ருன். ஆனுல் கதை வேறு விதமாக முடிந்தது.

இறைவியின் பதம்தொழும் அடியவர்களுக்கும் முறையாக எந்த எந்த நிலை வரவேண்டுமோ அவையெல்லாம் வரும். சிறந்த ஐசுவரியத்தை உடைய அரசராக வாழ்ந்து, பிறகு அவற்றை விட்டுத் தவம் புரிவார்கள். அரச போகத்தை நுகரும்போது அன்னையை மறவாமல் வாழ்கிறவர்கள் ஆகையால் எந்தச் சமயத்திலும் அந்த வாழ்வைத் துறக்கும் மனநிலை அவர்களுக்கு உண்டு. ஆகவே, அரசைப்பெற்று நன்ருக வாழ்ந்து, உரிய காலத்தில் அந்த வாழ்வில் பற்றை ஒழித்துத் தவவாழ்வை மேற்கொள்வார்கள். அந்தத் தவவழியிலே செல்லுவார்கள்.

அவ்வாறு படிப்படியாக மேல் ஏறும் அவர்களுக்கு இம்மை வாழ்வு மாறி மறுமை வரும்போது என்றும் மங்காத பேரின்ப வாழ்வு கிடைக்கும். அதுவே முக்தி; வீடு; சிவலோகம்.

தொழும் அவர்க்கே
அழியா அரசும்
செல்லும் தவநெறியும் சிவலோகமும்
சித்திக்குமே.

எம்பெருமாட்டியின் அருள் இல்லாமல் வெறும் புண்ணியப் பயனுக அரசு கிடைத்தால் அது விரைவில் அழிந்துவிடும். அருள் பெற்றவர்களுக்கோ பிறரால் அழியாத அரசு கிடைக்கும். அவர்களாகவே விட்டு நீங்குவார்களேயன்றி, அதுவாக அவரிடத்தினின்றும் நழுவாது.

அவ்வாறே அவள் துணையில்லாமல் தம் முயற்சியால் தவநெறியில் செல்பவர்கள் இடையே தடுமாறுவார்கள்; வழுவிப்போவார்கள்; தவத்தைக் கொண்டு செலுத்த முடியாமல் திண்டாடுவார்கள். அதனுல்தான்,

''தவமும் தவமுடையார்க் காகும்''

என்று வள்ளுவர் சொன்னார். தவநெறியில் தொடர்ந்து செல்லும் திறமை அன்னையின் அருள் பெற்றவர்களுக்கே சாத்தியமாகும்.

அன்னையின் திருவடியைப் பற்றிக்கொண்டு, அறம், பொருள், இன்பம் நிரம்பிய இக வாழ்விலே இன்புற்று வாழ்ந்து, பிறகு வீட்டு நெறியாகிய தவத்தை மேற்கொண்டு, முடிவில் பேரின்பப் பெருவாழ்வை அடைவார்கள் அன்பர்கள்.

சொல்லும் பொருளும் எனநடம்
ஆடும் துணைவருடன்
புல்லும் பரிமளப் பூங்கொடி
யே ! நின் புதுமலர்த்தாள்
அல்லும் பகலும் தொழும்அவர்க்
கேஅழி யாஅரசும்
செல்லும் தவநெறி யும்சிவ
லோகமும் சித்திக்குமே.

[சொல்லும் பொருளும் போல ஆனந்தத் தாண்டவம் புரியும் நடராசப் பெருமானுடன் இணையும் ஞான மணம் வீசும் மலர்க்கொடி போன்ற அன்னையே, அப்பொழுதலர்ந்த தாமரை மலரைப் போன்ற நின்னுடைய திருவடியை இரவும் பகலும் தொழுகின்ற அடியவர்களுக்கு, பகைவர்களால் அழிவு வராத அரசச் செல்வமும், பயனடையும் வரையில் செல்லும் தவநெறி வாழ்வும், இறுதியில் மோட்சமாகிய சிவலோக பதவியும் கிடைக்கும்.

புல்லும்-இணைந்திருக்கும். அல்-இரவு. சிவலோகம் என்றது இங்கே முக்தியைக் குறித்து நின்றது.]

இது அபிராமி அந்தாதியில் 28-ஆவதுபாடல்.

# எல்லாம் ஆனவள்

உலகத்தில் மனிதன் தான் செய்யும் காரியங்கள் யாவும் தான் நினைத்தபடியே நிறைவேறவேண்டும் என்று ஆசைப்படுகிறான். ஆனால் அதற்கு ஏற்ற ஆற்றல் அவனுக்கு இருப்பதில்லை. மனத்திண்மை இருந்தால் எண்ணியவற்றை எண்ணியபடி நிறைவேற்றலாம்.

"எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியார்
திண்ணியர் ஆகப் பெறின்"

என்பது திருக்குறள். மன ஒருமைப்பாடு இல்லாதவருக்கு மனத்திண்மை உண்டாவது அரிது. மனத்தை ஒருமுகப் படுத்தும் பெரியோர்கள் மனத்திண்மை உடையவர்களாக இருப்பார்கள். மனத்தை ஒருமுகப்படுத்துவது தியானம்; அது தவத்தைச் சார்ந்தது. தவ முனிவர்கள் மனத்தை அடக்கும் வல்லமையுடையவர்கள். அதனால் அவர்களிடம் பல அற்புத ஆற்றல்கள் தோன்றும். அவற்றைச் சித்திகள் என்று சொல்வார்கள். அவை பலவானாலும் தலைமையாக எண்வகைச் சித்திகளைச் சொல்லுவார்கள். "அஷ்டமஹா சித்திகள்" என்று அவை பெயர்பெறும்; அணிமா, மகிமா, லகிமா, கரிமா, ப்ராப்தி, ப்ராகாம்யம், ஈசித்வம், வசித்வம், என்பவை.

இந்தச் சித்திகளாக இருப்பவள் அம்பிகை. மகாசித்தி என்ற திருநாமத்தை உடையவள் அவள் (லலிதா சக.224.)

சித்திகளையுடைய தவமுனிவர்களைச் சித்தர்கள் என்று சொல்வார்கள். பதினெண் சித்தர்கள் என்று ஒருவகையில் கணக்குக் கூறுவதுண்டு. கோரக்கர், மச்சேந்திர நாதர்

முதலிய சித்தர்கள் பலர் உண்டு. ஒன்பது கோடி சித்தர்கள் என்றும் ஒரு கணக்கு உண்டு. அவர்கள் திருவாவடுதுறை என்னும் தலத்தில் இருந்து தவம் செய்து அருள் பெற்றார்களாம். அதனால் அந்தத் தலத்துக்கு நவகோடி சித்தவாசபுரம் என்று ஒரு பெயர் அமைந்தது.

இந்தச் சித்தர்களுக்கு உயர்ந்த சித்திகளை வழங்கி அருளுபவள் எம்பெருமாட்டி. அதனால் ஸித்தேசுவரி; ஸித்தமாதா (லலிதா. 471, 473) என்ற திருநாமங்கள் அன்னைக்கு உண்டாயின. சித்தியாக நின்றும், சித்திகளைச் சித்தர்களுக்கு வழங்கும் அன்னையாக நின்றும் அபிராமி விளங்குகின்றாள். இதை அபிராமிபட்டர் நினைக்கிறார்.

சித்தியும், சித்தி தரும் தெய்வம் ஆகித் திகழும் பராசக்தியும்

என்று துதிக்கத் தொடங்குகிறார்.

அம்பிகை எல்லாச் சக்திகளுக்கும் மேற்பட்ட சக்தி; அவள் ஆற்றலுக்கு இணை வேறு எங்கும் இல்லை. தெய்வங்கள் அத்தனைக்கும் தலைவியாகத் தனக்கு மேலே யாரும் இல்லாதவளாக இருப்பவள். அதனால் பராசக்தி என்ற திருநாமம் அம்பிகைக்கு உரியதாயிற்று (லலிதா.572.)

சக்தியும் சிவமும் இணைந்து ஒன்றாயிருப்பர். சக்தி இல்லையெனில் சிவம் இல்லை; சக்தியோடு சேர்ந்தே சிவம் தொழிற்படுகிறது.

> "சிவமெ னும்பொருளும் ஆதி சத்தியொடு
> சேரின் எத்தொழிலும் வல்லதாம்
> அவள்பி ரிந்திடின் இயங்குதற்கும் அரிதாம்"

என்பது சௌந்தர்யலகரி. சிவம் சக்தியாகத் தழைக்கிறது. சிவம் கதிரவனானால் சக்தி வெப்பம்; சிவம் நீரானால் சக்தி அதன் தண்மை.

''நீரின் தண்மையனல் வெம்மையெனத் தனையகலா
திருந்தசரா சரங்கள் ஈன்ற
பெண்மையுரு வாகியதன் ஆனந்தக் கொடி''
(திருவிளையாடற்புராணம்)

என்பதனால் இந்த உண்மை புலனாகும்.

இப்படி அபேதமாக நிற்கும் சிவமும் சக்தியும் ஒரு பொருளின் இருவேறு நிலை. பொருளும் ஆற்றலும் (Matter and energy) வெவ்வேறு என்று ஒரு காலத்தில் விஞ்ஞானிகள் கூறி வந்தனர். இப்போது இரண்டும் ஒன்றே என்ற உண்மையை அறிந்திருக்கின்றனர். சிவமும் சக்தியும் அபின்னமானவர்கள் என்று காணும் முடிந்த முடிபுக்கு இந்த அறிவு வாயிலாக இருக்கிறது. அம்பிகையே சிவமாக இருக்கிறாள். சிவமூர்த்தி என்பது அந்தப் பெருமாட்டியின் திருநாமங்களில் ஒன்று (லலிதா. 407). சிவபெருமானது திருவுருவமாக இருப்பவள் என்பது அதன் பொருள். ஆகவே 'சக்தி தழைக்கும் சிவமும்' என்று அடுத்தபடி பாடுகிறார் அபிராமிபட்டர்.

எம்பெருமாட்டியை எண்ணி வழிபடுகிறவர்களில் பல வகை உண்டு. இந்த உலகியலில் தங்கள் வாழ்வு இடையூறின்றி நிகழவேண்டுமென்று வேண்டுபவர் பலர். தாம் மேற்கொண்ட செயல்கள் இனிது நிறைவேற வேண்டுமென்று தொழுபவர் பலர். தமக்கு வந்த அல்லல்கள் நீங்கவேண்டுமென்று அன்பு செய்பவர் பலர். தேவர்கள் கூடத் தங்கள் பதவிகள் நமக்கு நிலைக்கவேண்டும் என்றே வாழ்த்துகிறார்கள்.

''வாழ்த்துவதும் வானவர்கள் தாம்வாழ்வான்''

என்று மாணிக்கவாசகர் பாடுகிறார்.

உண்மையான பக்தர்கள் எல்லாவற்றினும் விடுபட்டு இறைவியோடு ஒன்றுபடவேண்டும் என்று விரும்பு

வார்கள். அந்த விடுதலையே முக்தி. அந்தப் பக்தர்கள் செய்வதே தவம். நிஷ்காம்யமான தவத்தைப் புரிபவர் களுக்கு முக்தியை அவள் வழங்குகிருள். ஆனந்தமய மானது முக்தி நிலை. ஆனந்தமே உருவமாக இருப்பவள் அம்பிகை; ஆகவே முக்தியும் அவள் சொரூபந்தான். அதனால் அம்பிகைக்கு முக்தி ஸ்வருபிணி' (லலிதா. 737) என்ற திருநாமம் அமைந்தது.

### தவம் முயல்வார் முத்தியும்

முத்திக்கு வித்தாயும் அம்பிகை இருக்கிருள். முத்தி ஞானத்திஞல் கிடைப்பது. ஞானமே அவள் திருவுருவம், மக்களுக்கு உள்ள அவித்தையே பிறவிக்குக் காரணம். அது போஞல் பிறவியினின்றும் விடுதலை பெறலாம்; முத்தி யின்பத்தை அடையலாம். அவித்தை அல்லது அறியாமை போவதற்கு ஞானம் வேண்டும். அது விரிந்து பரந்து உண்மையைப் புலப்படுத்தும். அறிவு வளர்ந்து மலர்ந்து தெளிந்து நிற்கும்போது அறியாமை ஓடிவிடும். முத்திக்கு வித்தான மெய்ஞ்ஞானமாக இருப்பவளும், அதனுல் விகசிதம் பெறும் சிறந்த அறிவாக இருப்பவளும் அம்பிகையே.

### முத்திக்கு வித்தும் வித்தாகி
### முளைத்து எழுந்த புத்தியும்

அவரவர்களுடைய அறிவினுக்குள் இருந்து அதை அறியும்படி செய்கிறவள் அம்பிகை. அறிவு வயிரம் போன்றது. வயிரம் இருளில் ஒளி விடாது. ஒளியில் மிகச் சிறந்து ஒளிரும். அதுபோல அறிவு ஒளிர்வது அதனூடே அன்னை இருந்து அறிவிப்பதனுல்தான். அறிவென்னும் விளக்குக்கு ஒளிதரும் சுடர் அவள். அறிவென்னும் மலரை மணக்கச் செய்கிறவள் அவள்.

மக்களுடைய புத்தியில் இருந்து பாதுகாக்கும் இறைவி அபிராமி புத்தியை மட்டுமா பாதுகாக்கிறாள்? அவள் திரிபுரங்களாகிய மூன்று மூன்று பொருள்களைப் புரக்கிறாள். அதனால் திரிபுரசுந்தரி யென்ற திருநாமம் பெற்றுள்ளாள்.

புத்தியின் உள்ளே புரக்கும்
புரத்தை அன்றே.

சித்தி முதல் திரிபுரங்கள் வரையில் எல்லாம் தானாகி இருப்பவள் அன்னை. எதைத் தருகிறாளோ அதுவேயாகி இருக்கிறாள். தன்னையே தருகிறாள். யார் அதைப் பெற வேண்டுமோ அவர்களின் அறிவுக்குள் இருந்து அறிவிக்கிறாள்.

எல்லாப் பொருளும் அவள்; எல்லா ஆற்றலும் அவள்: எல்லாக் கடவுளும் அவள்; எல்லாவற்றிற்கும் முடிவு அவள்.

இவ்வாறெல்லாம் எண்ணி இந்தப் பாடலைப் பாடினார் அபிராமிபட்டர்.

சித்தியும், சித்தி தரும்தெய்வம்
ஆகித் திகழும்பரா
சத்தியும், சத்தி தழைக்கும்
சிவமும் தவம்முயல்வார்
முத்தியும், முத்திக்கு வித்தும், வித்
தாகி முளைத்துஎழுந்த
புத்தியும் புத்தியின் உள்ளே
புரக்கும் புரத்தைஅன்றே.

[அஷ்டமா சித்திகளும், அந்தச் சித்திகளை வழங்கும் தெய்வமாகி விளங்குகின்ற பராசக்தியும், சக்தியைத் தம்மிடத்தே தழைக்கச் செய்த பரமசிவமும், தவம் புரிவார் அடையும் முக்தியின்பமும், அந்த முக்தியைப் பெறுவதற்கு

மூலமும், மூலமாகித் தோன்றி எழுந்த அறிவும் ஆகிய எல்லாமாக இருப்பவள், அறிவினுக்குள்ளே நின்று பாது காக்கும் திரிபுரசுந்தரியே.

புரத்தை சித்தி முதலாக இருப்பவள் என்று கூட்டிப் பொருள் கொள்க.

புரத்தை : புரம் என்பதன் அடியாகப் பிறந்த பெண்பாற் பெயர். புரம் என்றது அம்பிகைக்குரிய திரிபுரங்களை.]

திரிபுர சுந்தரியே எல்லாமாகி யிருக்கிறாள் என்பது கருத்து.

இது அபிராமி அந்தாதியில் 29-ஆவது பாடல்.



# கரையேற்றும் உமையவள்

சுந்தரமூர்த்தி நாயனர் இறைவனுக்குத் தொண்டு புரியும் ஆலால சுந்தரரின் அவதாரம். அவருக்குத் திருமணம் செய்ய ஏற்பாடுகள் நடந்தபோது இறைவன் கிழவேதியராக எழுந்தருளி, ''நீ என் அடிமை'' என்ருன். சுந்தரர் அதை மறுத்தார். இறைவன் ஆவண ஓலை காட்டித் தான் சொல்லியதை மெய்யென்று நிரூபித்தான். சுந்தரர் தொடர்ந்து சென்றபோது அந்தணஞக வந்தவன் மறைந்து பிறகு விடையின்மேல் உமாதேவியுடன் காட்சி கொடுத் தருளினன். அப்போது உண்மையை உணர்ந்த சுந்தரர், ''எம்பெருமானே, நான் உனக்கு ஆளானவன். என்றும் உன் அடிமை. அப்படி இருக்க நான் ஆள் அல்ல என்று சொல்லலாமா?'' என்று உருகிப் பாடினர்.

''அத்தாஉனக் காளாய்இனி அல்லேன்என லாமே?''

என்று ஒவ்வொரு பாட்டின் இறுதியிலும் வரும்படி ஒரு பதிகமே பாடினர். அடிமையாக இருப்பவன் தன் தலைவனிடம், 'நான் உமக்கு ஆள் அல்ல' என்று சொன்னலும் அந்த வார்த்தை செல்லாது என்பதை அந்த வரலாறு உணர்த்துகிறது.

அதற்கு எதிரான ஒன்றை அபிராமிபட்டர் சொல்ல வருகிருர். அம்பிகையின் பெருமையைப் பாடிக்கொண்டு வந்தவர் தமக்கும் எம்பெருமாட்டிக்கும் உள்ள உறவை எண்ணிப் பார்க்கிருர். உலகியலில் ஈடுபட்டு வாழ்ந்த அவரை அன்னை கருணை மிகுதியால் தடுத்து ஆண்டு கொண்டு தன்னுடைய 'பத்ம பத யுகம்சூடும் பணியை' அவருக்கு அமைத்தாள், நெஞ்சத்து அழுக்கை யெல்லாம்

தன் அருட்புனலால் துடைத்தாள் (27). இப்படி ஆண்டு கொண்ட மகாமாதா, "எனக்கும் உனக்கும் ஒரு தொடர்பும் இல்லை; நான் உன்னை ஆளாகக் கொள்ளவில்லை" என்று சொல்லிவிட்டால் என்செய்வது? நான் அடிமை அல்ல என்று சொன்ன சுந்தரர் கதைக்கு இது எதிராக இருக்கிறது அல்லவா? அங்கே அடிமை ஆட்கொண்டவனை மறுக்கிறார். இங்கே ஆண்டு கொண்டவள் அடிமையை மறுக்கிறாள்.

அன்னை மறுக்கவில்லை. 'ஒருகால் அப்படி மறுத்து விட்டால்?' என்ற விசித்திரமான எண்ணம் தோன்றியது இந்த அன்பருக்கு. 'அப்படிச் சொன்னால் விட்டு விடுகிற பேர்வழி நான் அல்ல' என்ற சமாதானம் உடனே உண்டாயிற்று. அம்பிகையைப் பார்த்தே சொல்லத் தொடங்கினார்

"தாயே, நீ நெடுங்காலத்துக்கு முன்பே அடியேன் போன போக்கை மாற்றித் தடுத்து ஆண்டுகொண்டாய். அப்படி ஆட்கொள்ளவில்லை யென்று நீ சொன்னால் அது உனக்கு நல்லதா? நியாயமா?"

> அன்றே தடுத்து என்னை ஆண்டுகொண்டாய்;
> கொண்டது அல்ல என்கை
> நன்றே உனக்கு?

'நியாயமோ, நியாயம் அல்லவோ அதைப்பற்றி ஆராய நாம் யார்?' என்ற எண்ணம் அடுத்துத் தோன்றியது.

அம்பிகை ஒருகால் அவரைச் சோதனை செய்வதற்காகச் சொன்னாலும் சொல்லலாம். குழந்தையின் தாய் வேடிக்கையாக, "நீ என் சொந்தக் குழந்தை அல்ல. உன்னைத் தவிட்டுக்கு வாங்கி வந்தேன்" என்று சொல்வதும், அது கேட்டுக் குழந்தை சிணுங்குவதும் வழக்கம். அது போல அம்பிகை சொன்னாலும் சொல்லலாம். அதற்காக அன்னையோடு வாதாட முடியுமா?

அன்னை என்ன சோதனை செய்தாலும் இந்த உறவு விடாது. தடுத்தாட் கொண்ட அன்னை கைவிட்டு விடுவாளா? சிற்றறிவுடைய மனிதன் மனப்போக்குத்தான் இன்னதென்று உறுதியாகச் சொல்லமுடியாது. அன்னை இயல்பு அது அல்லவே! அவள் எப்படியும் காப்பாற்று வாள்.

ஆண்டு கொண்ட உரிமை இருக்கிறது. அதனை மறந்து அதற்கு விரோதமாகப் பக்தன் ஏதாவது செய்தா லும் அன்னை விடமாட்டாள். குழந்தைக்கு நோய் வந்து விட்டது; தாய், ''இது என் குழந்தை அன்று'' என்று சொல்வாளா? பைத்தியம் பிடித்துவிட்டது; தாயையே அடிக்க வருகிறது. அப்போது, ''இவன் என் குழந்தை அல்ல'' என்று சொல்வாளா? சொல்ல மாட்டாள். தன் வயிற்றில் பிறந்த பிள்ளை என்ற பாசம் எந்த நிலையிலும் விடாது.

உலகிலுள்ள மனிதத்தாய்க்கே இவ்வளவு வாத் ஸல்யம் இருக்கும்போது மகாமாதாவாகிய அபிராமி, ''நீ எனக்குப் பிள்ளை அல்ல'' என்று உதறிவிடுவாளா?

அவள் நம்மைத் தூய்மைப்படுத்துவதற்காகத் துன்பங் களைத் தருகிறாள். அதனால் அல்லற்பட்டு, ''ஐயோ, அம்பிகை என்னைக் கைவிட்டு விட்டாளே!'' என்று சொல்வது முறையன்று. நாம் அவளை மறந்தாலும் அவள் நம்மை மறப்பதில்லை. நமக்காகவே பல திருவிளையாடல் களைச் செய்திருக்கிறாள்; இனியும் செய்வாள்.

பக்தன் என்ன செய்தாலும் அதனால் வெறுப்படை யாமல், ஆண்டு கொண்ட உரிமைபற்றி அவனைக் காப்பாற் றும் கருணைப் பிராட்டி அவள். ''பொல்லாத குழந்தை; இவனைச்சிறையில் அடையுங்கள்'' என்று எந்தத் தாயாவது போலீஸ்காரனுக்குச் சொல்வாளா?

ஆகவே பக்தன் என்ன செய்தாலும், தனக்குத் துன்பத்தை உண்டாக்கும் காரியம் இது என்று அறியாமல் எதைச் செய்தாலும், அவனைக் காப்பாற்றும் கடப்பாட்டை உடையவள் அன்னை.

''நான் எப்படிப் போனாலும் யாருக்கு என்ன?'' என்ற வெறி மூண்டு ஓடிப் போய்க் கப்பலில் ஏறித் திடீர் என்று நடுக்கடலில் போய் விழுந்து விடுகிறான். அப்போது யார் என்ன செய்யமுடியும்? ஆனாலும் அன்னை அங்கே வந்து பாதுகாத்துக் கரையேற்றுவாள். அவளுக்குத் தெரியாமல் எதையும் செய்யமுடியாது. ஏனென்றால், அவள் இல்லாத இடமே இல்லை. அண்டபிண்டமெல்லாம் நிறைவாகிப் பரந்திருக்கும் ஏக வஸ்து அவள்.

தன்னை நம்பினவர்களை எந்த ஆபத்திலிருந்தும் காப்பாற்றுவது அபிராமியின் திருவுள்ளம். அந்த ஆபத்துத் தானே வந்தாலும் அவர்களாக வருவித்துக் கொண்டாலும் எப்படி இருப்பினும் அவள் அதை நீக்கியருள்வாள்.

குழந்தை தெரியாமல் குழியில் விழப்போகிறது; விளக்கைப் பூ என்று எண்ணி அதைப் பிடிக்கப்போகிறது. தாய் பார்த்துக்கொண்டு சும்மா இருப்பாளா? மறுகணமே ஓடிவந்து தடுப்பாள்; அல்லலில் அகப்படாமல் காப்பாற்று வாள். அவளாவது, வேறிடத்தில் இருந்தால் தன் குழந்தையின் போக்கைக் காணமுடியாது. அருகில் இருந்தாலும் சோர்ந்திருக்கலாம். சில சமயங்களில் அவள் சென்று தடுப்பதற்குள் காரியம் மிஞ்சிப்போய் விடலாம். இவையெல்லாம் மானிடத்தாயின் திறத்தில் சாத்தியமாகலாம். தெய்வத்தாயாகிய அபிராமிக்கு இத்தகைய குறைபாடு ஏதும் இல்லை. அவள் எப்போதும் விழித்துக்கொண்டே இருப்பவள். தேவர்களே இமையாமல் விழித்திருப்பவர்கள் என்றால் அம்பிகையைச் சொல்லவேண்டுமா?

அவளுடைய கருணைத்திருவுள்ளம், எந்த விதத்திலும் ஆட்கொள்ளப்பட்டவர்களை இன்னலில் அகப்பட்டுக் கொள்ளும்படி விடச் சம்மதியாது.

இனி நான் என் செயினும், நடுக்கடலுள்
சென்றே விழினும், கரையேற்றுகை நின்
திருவுளமே.

அவளுக்குத் தெரியாமல் நமக்கு எந்தத் தீங்கும் வராது. அவள் பார்க்குமிடம் எங்கும் ஒரு நீக்கமற நிறைந்துள்ள பரிபூரணவஸ்து.

ஒன்றே!

இரண்டாவது பொருள் ஒன்றும் இன்றி எல்லாமாய் இருப்பவளாதலின் அவளை, 'ஏகாகினி' என்று லலிதா சகஸ்ரநாமம் (665) கூறுகிறது. திருக்கோவையாரில், ''யாவையுமாம் ஏகம்'' என்றார் மாணிக்கவாசகர்.

பராசக்தி ஒருத்தியே ஆனாலும் வெவ்வேறு இடங்களில் வெவ்வேறு உருவமும் நாமமும் கொண்டு எழுந்தருளி யிருக்கிறாள். அது மட்டும் அன்று; வெவ்வேறு கொள்கை யுடையவர்கள் எம் தெய்வம் என்று கொண்டாடி வழிபடும் பல உருவங்களும் அவளுடைய வடிவங்களே. 'பஹுரூபா' (854) என்பது அன்னையின் திருநாமங்களுள் ஒன்று. பிரபஞ்சமெல்லாம் அவளுடைய திருவுருவே ஆதலின் அவள் அந்த அந்தப் பொருளாய் வடிவெடுத்து இலங்குகிறாள் என்றும், இயல்பான பரத்துவ நிலையில் அவள் அருவாக இருந்தாலும் வெவ்வேறு செயல்களை மேற்கொண்டு இயற்றும்பொழுது வெவ்வேறு வடிவங்களை எடுக்கிறாள் என்றும் தேவீ புராணம் கூறும்.

''வெகு ரூபி சுக நித்தியகல் யாணி''

என்றும்.

''வெகுவித சொரூபி''

என்றும் திருப்புகழ் கூறுகிறது.

பல உருவே!

அம்பிகை குணம் குறி கடந்தவள்; நிர்க்குண சொரூபி. எல்லாவற்றிற்கும் மேலான பரதேவதையாக நிற்கும் அவள் உபாதி ரகிதமானவள். ஆதலின் ஒன்றே என்றும், பல உருவே என்றும் போற்றிய அபிராமிபட்டர்.

அருவே!

என்று அடுத்தபடி சொன்னார். 'நிராகாரா' (137) என்பது அன்னையின் திருநாமங்களில் ஒன்று.

அப்படி இருந்தாலும் உயிர்களுக்குத் தன்னைப் பற்றிக் கொண்டு கரையேற வழிகாட்டுவதற்காக உருவமும் நாமமும் உடையவளாக வருகிறாள். பக்தன் எந்த மூர்த்தியிடம் தன் உள்ளம் கவிகிறதோ, எந்த வடிவத்தைத் தியானித்தால் உள்ளம் கனிகிறதோ, அந்த வடிவையும் அதனோடு தொடர்பு உடைய திருநாமங்களையும் இடைவிடாமல் போற்றுகிறான்; அதனால் இன்பம் பெறுகிறான். 'இந்தத் தெய்வம் என் தெய்வம்' என்று பெருமிதத்தோடு சொல்கிறான். அவனுடைய உபாசனா தெய்வம் அல்லது வழிபடு கடவுளாக அன்னை எழுந்தருளுகிறாள்.

அபிராமிபட்டர் தம் வழிபடு கடவுளாகிய அபிராமியை மிகவும் உரிமையோடு,

என் உமையவளே!

என்று கூறி இந்தப் பாட்டை முடிக்கிறார். உலகுயிர்களுக்கெல்லாம் அவள் உரியவளானாலும் அன்பின் முதிர்ச்சியால் தனக்கே உரிய பொருளைப் போல எண்ணி இன்புறுவது பக்தியின் நிலைகளில் ஒன்று.

உமா என்ற திருநாமம் தேவி பஞ்சாட்சரம் என்று சொல்லப்பெறுவது.

> ''எழுதா மறையின்
> ஒன்றும் அரும்பொருளே, உமையே''

என்று பத்தாவது பாடலில் இந்தத் திருநாமத்தை வைத்திருக்கிறார். அதன் விளக்கத்தில் அந்த நாமத்தின் பெருமையை ஓரளவு பார்க்க முடிந்தது.

'ஒன்றாகவும் பலவாகவும் அருவாகவும் உள்ள உமா தேவி நம்மை எப்படியும் காப்பாற்றுவாள்; ஆண்டு கொண்டவளுக்கு உரிய கடமை அது' என்பதை நினைப் பூட்டிக் கொள்வதற்காக, 'என்னை ஆண்டு கொள்ளவில்லை என்று சொல்வது முறையா?' என்ற கேள்வியைத் தோற்று வித்துக் கொண்டார் இந்தப் பக்தர்.

> அன்றே தடுத்துஎன்னை ஆண்டுகொண்
> டாய்; 'கொண்டது அல்ல'என்கை
> நன்றே உனக்கு? இனி நான்என்
> செயினும், நடுக்கடலுள்
> சென்றே விழினும், கரைஏற்
> றுகைஙின் திருவுளமே;
> ஒன்றே, பலஉரு வே, அரு
> வே, என் உமையவளே!

[ஒருருவாக உள்ளவளே, பல உருவங்களை உடையாய், உருவம் ஏதும் அற்ற அருவே, எனக்குத் தாயாகிய உமா தேவியே, முன் ஒரு நாள் அடியேனைத் தடுத்தாட் கொண்டருளினை; அவ்வாறு ஆட்கொண்டதை அல்ல என்று மறுத்தல் உனக்கு நியாயமா? இனிமேல், அடியேன் என்ன பிழை செய்தாலும், கடலுக்கு நடுவே சென்று விழுந்தாலும், என் குற்றத்தை மறந்து கரையேற்றிப் பாதுகாத்தலே நின் திருவுளப்பாங்குக்கு ஏற்ற செயலாகும்.

அன்று: நெஞ்சறிசுட்டு. தடுத்து ஆண்டுகொண்டாய் என்றது, தாமே அன்னையைப் புகலடையாமல் இருக்கும் நிலையில் அவளே கருணை கூர்ந்து வலிய வந்து தம் போக்கைத் தடுத்து ஆட்கொண்டாள் என்று சொன்னபடி ஆயிற்று. ''நாயேனையும் இங்கு ஒரு பொருளாக நயந்து வந்து, நீயே நினைவின்றி ஆண்டுகொண்டாய்'' (61) என்று பின்னால் ஒரு பாட்டில் விளக்கமாகச் சொல்வார். ஆண்டாய் என்னாமல் ஆண்டுகொண்டாய் என்றமையால், ஆள்வதில் அன்னைக்கு இருந்த ஊக்கம் புலனாகிறது. அல்ல என்பது இல்லை என்னும் பொருளில் வந்தது. என்செயினும் என்று பொதுவாகச் சொன்னாலும், எம்பெருமாட்டியின் திருவுள்ளத்துக்கு உவப்பாகாத தீய செயல் களையே கொள்ளவேண்டும். கரையேற்றுகை என்பதை என் செயினும் என்பதனோடு பொருத்தும்போது காப்பாற்றுதல் என்று பொருள்கொள்க. திருவுளமே என்பதில் உள்ள ஏகாரத்தைப் பிரித்துக் கரையேற்று கையே என்று கூட்டவேண்டும்; அன்றி நின்றவாறே தேற்றேகாரமாகக் கொள்வதும் ஒன்று. உமா என்பது உமை என்று வந்தது. அவள் என்பது பகுதிப் பொருள் விகுதி.]

இது அபிராமி அந்தாதியில் 30-ஆவது பாடல்.



# இனிமேல்

அன்னையின் திருநாமங்களில் ஒன்று, 'ஸ்ரீகண்டார்த்த-சரீரிணி' என்பது. பரமசிவனுடைய இடப்பாதியில் எம் பெருமாட்டி வீற்றிருக்கிறாள். இந்த அர்த்தநாரீசுவரத் திருக்கோலத்தில் இருவர் இருந்தாலும் ஒரு மூர்த்தியாகவே கொள்வார்கள். இருவரும் சேர்ந்த ஏக உருவம் அது. அந்த வடிவத்தைக் கண்டு, "இந்த மூர்த்தியை ஒருமையாக வைத்துச் சொல்வதா? பன்மையாக வைத்துச் சொல்வதா? ஆண்பால் என்று சொல்வதா? பெண்பால் என்று சொல்வதா?" என்ற சந்தேகங்கள் இலக்கணப் புலவர்களுக்கு எழலாம். எப்படித்தான் சொல்வது? விடை கூறுவது கொஞ்சம் சங்கடமான காரியமே,

இதைப்பற்றிக் குமரகுருபர சுவாமிகள் ஓர் அழகான பாட்டைப் பாடியிருக்கிறார். "இந்த மூர்த்தியை ஒருவன் என்று சொல்வதா? ஒருத்தி என்று சொல்வதா? நல்ல வேளை, இருபாலுக்கும் பொதுவாக ஒருவர் என்ற சொல் இருக்கிறது! அதையே சொல்லிவிடலாம். அப்படி ஒரு சொல் இருப்பது எவ்வளவு உபயோகமாக இருக்கிறது!" என்று அவர் மகிழ்ச்சி அடைகிறார். ஒருவர் என்ற சொல் பகுதியினால் ஒருமை; விகுதியினால் பன்மை. அதை வாக்கியத்தில் வைத்துச் சொன்னால் அது பன்மைக்குரிய பயனிலையோடு முடியும். "ஒருவர் நிற்கிறார்" என்று சொல்லும்போது நிற்கிறார் என்பது சொல் உருவத்தால் பன்மை.

> "ஒருவர் என்பது உயர்இரு பாற்றாய்ப்
> பன்மை வினைகொளும் பாங்கிற்று என்ப"

என்பது நன்னூல் சூத்திரம். ஆண்பாலையும் பெண்பாலையும் மதிப்பாகக் குறிக்கும்போது ஒருவர் என்றும் அவர் என்றும் சொல்கிறோம். இதற்கு இலக்கணம் இது. ஒருவனாகவும் ஒருத்தியாகவும் இல்லாமல் இரண்டும் கலந்த ஒற்றைத் திருவுருவத்தைக் குறிக்கவும் அந்தச் சொல் பயன்படுகிறது. இதைத்தான் குமரகுருபரர் பாடுகிறார்.

"அருவருக்கும் உலகவாழ்வு அடங்க நீத்தோர்க்கு
ஆனந்தப் பெருவாழ்வாம் ஆடல் காட்ட
மருவருக்கன் மதிவளிவான் யமானன் தீநீர்
மண்ணெனும்எண் வகைஉறுப்பின் வடிவு
கொண்ட
ஒருவனுக்கும் ஒருத்திக்கும் உருஒன் றால்அவ்
வுருவைஇஃதொருத்தன் என்கோ ஒருத்தி என்கோ
இருவருக்கும் உரித்தாக ஒருவர் என்றோர்
இயற்சொல்இல தெனின்யான்மற் றென்சொல்
கேனோ."

(சிதம்பரச் செய்யுட்கோவை, 54)

இந்த அர்த்தநாரீசத் திருக்கோலமே முதல் முதல் இறைவன் சகுண மூர்த்தியாகத் தோன்றிய வடிவமாதலின் இதை, "தொன்மைக் கோலம்" என்று மாணிக்கவாசகர் கூறுவார்.

அன்னை வேறு, அத்தன் வேறு என்று இல்லாமல் ஒருவருள் ஒருவர் அடங்கி நிற்பர். சைவர்கள் சிவத்துள் சக்தி அடங்கி நிற்கும் என்பர். சாக்தர்கள் பரதேவதை யிடம் யாவரும் ஒடுங்குவர் என்பர். அப்படி ஒன்றாக இருந்த பொருள் பாதிப் பாதி வேறு வேறு தோற்றமாகி வெளிப் படுகிறது. பிறகு தனியே பிரிந்தும் இயங்கி அருள் செய்யும் நிலை உண்டாகிறது.

அபிராமிபட்டர் பாதியும் பாதியும் இணைந்த ஒரு திருக் கோலமாகிய அர்த்தநாரீச மூர்த்தியை எண்ணுகிறார்.

'அம்பிகையும் அவளைத் தன் பாகத்தில் வைத்த பெருமானும் ஒரே வடிவில் இணைந்து வந்து ஒன்றுக்கும் பற்ருத எளியேனையும் என் போன்ற பிறரையும் தம்பால் பக்தி பண்ணும்படி அருள் பாலித்தார்கள்' என்று மனநிறைவுடன் சொல்கிருர்.

உமையும் உமை ஒரு பாகனும்
ஏக உருவில் வந்து இங்கு
எமையும் தமக்கு அன்பு செய்ய வைத்தார்.

ஏக உருவில் வந்தவர் யார்? அர்த்தநாரீசுவரர் என்று போற்றும் சைவர்கள் அந்த மூர்த்தம் மாகேசுவர மூர்த்தங்கள் இருபத்தைந்தில் ஒன்று என்று கொண்டாடுவார்கள். ஆகவே அவர்கள், ''எங்கள் பெருமான் அர்த்த நாரீசனாக எழுந்தருளினான்'' என்பார்கள். அன்னையின் பக்தர்களோ, ''அன்னையின் அருள் வடிவான கோலங்களில் அர்த்தேசுவரநாரியாக, ஸ்ரீகண்டார்த்த சரீரிணியாக இருப்பது ஒன்று. எம்பெருமாட்டியே அந்த வடிவில் எழுந்தருளுவாள்'' என்று கூறுவார்கள். அபிராமிபட்டரும் அப்படிச் சொல்கிறவர்தாம். ஆனால் இங்கே இரண்டு சாராருக்கும் பொருத்தமாக, ''இருவரும் ஏக உருவில் வந்தனர்'' என்கிருர். 'எமையும் தமக்கு அன்பு செய்ய வைத்தார்' என்பதில் உள்ள எமையும் என்றது தம்மையும் தம்மைச் சார்ந்த அன்பர் கூட்டத்தையும் சேர்த்துச் சொன்னபடி. 'அன்னையிடமும் அப்பனிடமும் அன்பு செய்வது எங்கள் கடமையாக இருக்க, அதனை மறந்து யார் யாரிடமோ அன்பு செய்தோம். இந்த அவல நிலையில் கிடந்த எங்களைக் கரையேற்றத் திருவுளங் கொண்டனர் அவ்விருவரும். தம்மை மறந்து வாழ்கின்றவர்களாயிற்றே என்று புறக்கணிக்கவில்லை. பிள்ளை மறந்தாலும் பெற்ருேர் மறவாமல் இருப்பது அன்பின் இயல்பு. ஆகவே தகுதி இல்லாத எங்களையும்

ஆட்கொள்ள எண்ணினர். தம்மிடம் அன்பு செய்யும்படி எங்களை வசப்படுத்தித் தடுத்து ஆண்டுகொண்டனர்' என்ற கருத்துடன் இவ்வாறு சொன்னார்.

இறைவனிடம் அன்பு செய்வதற்கும் அவன் அருளே கருவியாக இருந்து தூண்டவேண்டும். ''அவனருளாலே அவன்தாள் வணங்கி'' என்று மணிவாசகப்பெருமான் அருளினார். ''நினைப்பித்தால் நின்னை நினைப்பேன்'' என்பது மற்றோர் அருளாளர் வாக்கு. ஆகையால், அன்பு செய்ய வைத்தார்' என்றார்.

நாமாக விரும்பி நம்முடைய சிற்றறிவால் ஒரு முடிவு பண்ணி ஒரு காரியத்தைச் செய்ய மேற்கொண்டால், பிறகு அதில் விளையும் தீங்குகளை அநுபவத்தினால் அறிந்து அந்த முயற்சியைக் கைவிட வேண்டியிருக்கும்; அல்லது அறிஞர் இது தவறு என்று அறிவுறுத்தினாலும் அதனைத் தொடர்ந்து செய்யமாட்டோம். ஆனால் முற்றறிவுடையவனாகிய இறைவனே விரும்பி நம்மைத் தன் அடியானாக்கிக்கொண்டால் அதைவிட வேறு பாக்கியம் ஏது? நாம் கவலைப்பட என்ன அவசியம் இருக்கிறது?

தண்ணீர் இல்லாக் காட்டில் நீர்வேட்கை கொண்டு தவிக்கிறான் ஒருவன். அவனைச் சந்திக்கிறவர்கள் வெவ்வேறு இடத்தில் நீர்நிலை இருக்கிற செய்தியைச் சொல்கிறார்கள். எந்த இடத்துக்குப் போனால் எளிதில் நல்ல நீர் கிடைக்கும் என்ற யோசனையில் அவன் ஆழ்ந்திருக்கிறான். சொன்னவர்கள் யாவரும் தாம் தாம் அருந்திய நீரே சிறப்பானது என்று சொல்லியிருக்கிறார்கள். அப்போது ஒரு கருணையாளர் கங்கை நீரை ஒரு குடம் நிறைய அவன் இருக்கும் இடத்துக்கே கொண்டு வந்து, ''இந்தா, உன் வேட்கை தீரும் மட்டும் குடி'' என்று கொடுக்கிறார். அவனும் உண்டு தாகம் தீர்கிறான். அப்பால், எங்கே தண்ணீர் கிடைக்கும் என்ற

ஆராய்ச்சிக்கு இடம் இல்லை அல்லவா? அபிராமிபட்டர் அந்த நிலையில் இருக்கிறார்.

'அவர்களே எம்மைத் தடுத்து ஆண்டுகொண்டு தம்மிடம் அன்பு செய்யும் நெறியில் எம்மை ஈடுபடுத்தியருளினார்கள். இனி வேறு நெறிகளைப் பற்றிய ஆராய்ச்சி எதற்கு? இனி எமக்கு வேறு நெறிகளே இல்லை; வேண்டியதே இல்லை' என்கிறார்.

> உமையும் உமையொரு பாகனும்
> ஏக உருவில வந்து இங்கு
> எமையும் தமக்கு அன்பு செய்ய வைத்தார்;
> இனி எண்ணுதற்குச்
> சமயங்களும் இல்லை.

'இனிமேல் எதைக் கடைப்பிடிப்பது என்று எண்ணி ஆராய்வதற்குரிய சமயங்கள் வேறு இல்லை' என்கிறார்.

சமயம் என்பது இறைவனை அடையும் வழி; ஆதலால் அதை மார்க்கம் என்று சொல்வதுண்டு. உயிர்க்கூட்டம் அத்தனையும் இயங்கிக்கொண்டே இருக்கின்றது; வழி நடந்துகொண்டே இருக்கின்றது. இந்த ஜீவயாத்திரையில், எதை லட்சியமாகக்கொண்டு பயணம் நடைபெறுகிறதோ, அதற்கு ஏற்றபடி இன்ப துன்ப விளைவு இருக்கும். பெரும்பாலும் ஜீவர்கள் சன்மார்க்கமாகிய நன்னெறியை விட்டுத் துன்மார்க்கமாகிய புன்னெறியிலே செல்கிறார்கள். அதன் பயனாக மேலும் மேலும் பிறவியை எடுத்து அல்லற்படுகிறார்கள். அவர்கள் செல்லும் நெறி சாகும் நெறி.

அதற்கு எதிராக இருப்பது ஆகும் நெறி; வளர்ச்சி பெறும் வழி. நிரதிசய ஆனந்தமாகிய மாளிகையை அடையும் வழி அது. அதுவே அன்பு நெறி. அந்த நெறியில் புகுந்தவர்கள் லட்சியத்தை அடைவது நிச்சயமாகையால் அவர்கள் வேறு நெறியைக் கவனிக்க வேண்டாம்

அவர்களுடைய நெடும்பயணத்துக்கே முற்றுப்புள்ளி வைக்கும்படி ஆகிவிடும். கடுகி நடந்து கால் இளைத்து மீண்டும் மீண்டும் ஒவ்வோர் ஊராகச் சென்று பிச்சை வாங்கிக் காலங்கழிக்கும் ஏழை ஒருவனுக்கு ஒரு மாளிகையைக் கட்டிக்கொடுத்து, உண்ணுவதற்கும் உடுப்பதற்கும் குறைவின்றி ஏற்பாடு செய்துவிட்டால், அவனுடைய அலைச்சலுக்கு முற்றுப்புள்ளி வைத்துவிடுவான். அப்படித் தான் ஜீவர்கள் அடையவேண்டிய லட்சியத்தை அடைந்து விட்டால் மறுபடியும் யாத்திரை பண்ணவேண்டிய அவசியம் இல்லாமல் போய்விடும்.

மிகச் சிறந்த லட்சியத்தைப் பெற்ற வழியில் இறங்கினவர் அபிராமிபட்டர், அந்த லட்சியம் நிச்சயமாகக் கைகூடும். ஆகவே மறுபடியும் பிறந்து பயணத்தைத் தொடரவேண்டிய நிலையும் இனி ஒழிந்தது. இதையும் சொல்கிறார். 'இனி நாங்கள் பிறக்கவேண்டிய அவசியம் இல்லை. பிறவா நெறியிலே புகுந்துவிட்டோம். எப்படி எங்கள் ஆராய்ச்சிக்குரிய சமயங்கள் வேறு இல்லையோ, அப்படி இனி எங்களை ஈன்றெடுக்கும் தாயும் இல்லை' என்று அழகாகச் சொல்கிறார்.

இனி எண்ணுதற்குச்
சமயங்களும் இல்லை; ஈன்றெடுப்பாள்
ஒரு தாயும் இல்லை.

'இறைவியின் அருள் பெறுவதற்குமுன் ஆசைக் கடலில் அழுந்தி வாழ்ந்துவந்தேன். மூவாசைகளாலும் உள்ளம் மயங்கியது. அந்த மூவாசைகளிலும் மிகக் கடுமையாகப் பற்றி விடாமல் இருந்தது பெண்ணாசை. அதிலிருந்து எப்படி மீளப்போகிறோம் என்று ஏக்கம் அடைந்து கிடந்தேன். இப்போது அருள் வலிமை கிடைத்துவிட்டது. இனி அந்த ஆசைக்கு இடம் இல்லை. இதுவரைக்கும் பட்ட பாடு போதும். மூங்கிலைப் போன்ற தோளையுடைய மகளிர்மேல்

வைத்த மோகம் போதும், போதும்' என்று இப்போது ஆறுதல் பெறுகிருர் அபிராமிபட்டர். முன்பு துன்பத்திலே வேதனைப்பட்டவராதலின் இப்போது அதை நினைந்து, ''அப்பாடி! இனி விட்டது இந்தச் சனியன்!'' என்று சொல்வதுபோல இருக்கிறது.

அமையும் அமையுறு தோளியர்மேல்
வைத்த ஆசையுமே.

'எம்பெருமாட்டியும் எம்பெருமானும் ஒருவராக வந்து தடுத்து ஆண்டுகொண்டு தம்பால் அன்பு கொள்ளும்படி செய்தார்கள். அந்த அன்புநெறியில் செல்வதனுல் கிடைக்க வேண்டியவை யெல்லாம் கிடைக்கும். ஆதலின் வேறு மார்க்கங்களைப் பற்றிச் சிந்திக்கவேண்டிய அவசியமே இல்லாமல் போயிற்று. இனி மீண்டும் இவ்வுலகில் வந்து பிறவாத இன்பத்தைக் காணியாகப் பெறுவது நிச்சயமாத லால் நம்மை ஈன்றெடுக்கும் தாய் ஒருத்தியும் இருக்கப் போவதில்லை; இதுகாறும் அல்லலுக்குக் காரணமாக இருந்த ஆசைகளும், அவற்றுள் வலியதான பெண்ணுசையும் இனிப் போதும், போதும்' என்று பாடுகிருர் இந்தப் பேரன்பர்:

உமையும் உமைஒரு பாகனும்
ஏக உருவில் வந்துஇங்கு
எமையும் தமக்குஅன்பு செய்யவைத்
தார்; இனி எண்ணுதற்குச்
சமயங் களும்இல்லை; ஈன்றெடுப்
பாள்ஒரு தாயும் இல்லை;
அமையும், அமையுறு தோளியர்
மேல்வைத்த ஆசையுமே.

[உமாதேவியும் அத்தேவியை ஒரு பாகத்தில் கொண்ட பரமசிவனும் ஒரே உருவத்தில் வந்து, ஒன்றுக்கும் பற்ருத

எம்மையும் தம்மிடம் அன்பு செய்யும்படியாக வலியத் தடுத்து ஆண்டுகொண்டு நியமித்தார்கள்; இனிமேல், நாம் புகுந்து கதியடைய ஏற்றது எது என்று ஆராய்வதற்கு வேறு சமயங்களும் இல்லை; முக்தி பெறுவது உறுதியாதலின் எம்மை இவ்வுலகில் பெற்றெடுப்பவளாகிய தாயும் இனி மேல் இல்லை; மூங்கிலைப்போன்ற தோளையுடைய பெண்களின் மேல் வைத்த ஆசையும் இனிப் போதும்.

எமையும் என்றது, ஆட்கொள்ளப்பெற்ற பெருமித உணர்ச்சியால் சொன்னதாகவும் கொள்ளலாம்; "நாமார்க்கும் குடியல்லோம்" என்றதுபோல. எமையும்: உம்மை, ஆளப்பெற்றவர் இழிவைக் குறித்து அதன் வாயிலாக ஆண்டவரின் உயர்வைப் புலப்படுத்தியது. இனி என்பது இனிமேல் என்னும் பொருளுடையது. இனி என்பதற்குப் பழங்காலத்தில் இப்பொழுது என்றே பொருள் கொண்டனர். இக்காலத்தில் இந்தப் பொழுதுக்கு அப்பால் என்ற பொருளில் வழங்குகிறது. இனிச் சமயங்களும் இல்லை, இனித் தாயும் இல்லை, இனி அமையும் என்று மூன்றிடத்தும் கூட்டுக. அமையும் - போதும்; இல்லாமற் போய்விடும் என்றும் கொள்ளலாம். அமை - மூங்கில். உறு: உவம வாசகம்.]

இது அபிராமி அந்தாதியில் 31-ஆவது பாடல்.



# கமல முத்திரை

எத்தனை விதமாகப் பக்திசெய்தாலும், ஞானவிசாரம் செய்தாலும், செய்யவேண்டிய கர்மங்களைச் செவ்வனே செய்து வாழ்ந்தாலும் மனத்தில் நிறைவு உண்டாவதில்லை. இந்த வாழ்க்கையினிடையே வரும் துன்பங்களை ஒருவாறு பொறுத்துக்கொண்டு உறுதியாக நிற்கும் திறங்கூட வந்து விடலாம். ஆனால் இந்தப் பிறவியின் இறுதியில் மரணம் வருமே என்பதை எண்ணும்போது வயிறு பகீரென்றது. எவ்வளவு பெரியவர்களானாலும் காலன் கைப்பாசத்தில் கட்டுண்ணுவோமே என்று கலங்குவர்ர்கள் ''யானேதும் பிறப்பஞ்சேன் இறப்பதனுக் கென்கடவேன்'' என்று மணி வாசகர் அஞ்சினார்; ''ஒக்க அடைக்கும்போ துணர மாட்டேன்'' என்றார் திருநாவுக்கரசர்.

இந்த உலகில் செல்வத்தினாலும் உடல் வலிமை யினாலும் அறிவாற்றலினாலும் எவ்வளவோ காரியங்களைச் சாதித்துக் கொள்ளலாம். பலவகை இன்னல்களினின்றும் நீங்கி வாழலாம். ஆனால் செல்வம், உடல் வலிமை, அறி வாற்றல் இவை யாவும் காலன்முன் சிறிதும் பயன்படாமல் ஒழிந்துபோகும். மகாபண்டிதர்களாக விளங்கினவர்களும் இறுதிக் காலத்தில் மரணாவஸ்தையை அடைந்து இறந்து போயிருக்கிறார்கள். ஒவ்வொரு மனிதனும் அந்தத் துன் பத்தை உண்மையில் நினைந்து பார்த்தால் உள்ளீரலில் பற்றும். வேறு எந்தக் காரியமும் செய்யத் தோன்றாது.

இறைவனிடம் பக்தி உண்டாவதற்குப் பல காரணங் கள் உண்டு. ஆனால் அந்தப் பக்தி முறுகி நிற்க வேண்டு மானால் யமபயம் உள்ளத்தில் இருக்கவேண்டும்.

காலனிடத்தில் பயம் உண்டானால் காலகாலனிடத்தில் பக்தி ஆழமாக ஏற்படும்.

> ''ஆவிக்கு மோசம் வருமா றறிந்துன் அருட்பதங்கள்
> சேவிக்க என்று நினைக்கின்றிலேன்''

என்று அருணகிரிநாதர் கந்தர் அலங்காரத்தில் சொல்கிறார். ஆவிக்கு மோசம் வரும், காலன் வருவான் என்ற பயத்துடன் இறைவன் அடியைச் சேவித்தால் அப்போது பக்தி அழுத்த மாக இருக்கும். யாரேனும் பயமுறுத்தினால் குழந்தை ஓடி வந்து தாயை இறுகப் பற்றிக் கொள்வதைப் போலவும், தலையில் தீப்பிடித்தவன் தண்ணீரை நாடி வீழ்வதுபோலவும் இந்த முறுகிய பக்தி இருக்கும்.

எனவே, நம் தலைமாட்டில் யமன் நிற்கிறான் என்ற உணர்வு நமக்கு இருக்கவேண்டும். அதனால் பக்தி வரவர வைரம்போல முறுகும். அதனுடைய விளைவு வியத்தற் குரியது. இறைவனுடைய திருவருள் துணை கிடைத்து விட்டால் பிறகு யமனைப் பற்றிய கவலையே இராது, அவனுடைய நினைப்பே வராது. பக்தி இல்லாதவர்களுக்கும் யமனுடைய நினைப்பு இருப்பதில்லை; அருள் பெற்றவர்களுக் கும் அந்த நினைப்பு இருப்பதில்லை. இது வேடிக்கையாக இருக்கிறதல்லவா?

> ''சந்ததமும் வேதமொழி யாதொன்று பற்றினது
> தான்வந்து முற்றுமெனலால்
> சகமீ திருந்தாலும் மரணமுண் டென்பதைச்
> சதாநிஷ்டர் நினைவதில்லை''

என்று தாயுமானவரும்,

> ''மரணப்ர மாதம் நமக்கில்லை யாம்என்றும்
> வாய்த்ததுணை, கிரகணக் கலாபியும் வேலும் உண்டே

என்று அருணகிரிநாதரும் பாடுகின்றனர்.

உலகில் வாழும்போதே அருட்பலம் பெற்று, அந்த உறுதியால் யமனைப்பற்றிக் கவலையின்றியிருந்த பேரன்பர் கூட்டத்தைச் சேர்ந்தவர் அபிராமிபட்டர். அவர் அபிராமியின் திருவருட் பலத்தினால் அத்தகைய உறுதியான நிலையைப் பெற்றவர். அந்த நிலையில் இருந்து அவர் பாடுகிறார்.

பொதுவாக மனிதர்கள் பிறவிமேல் பிறவியாக ஓயாமல் பெற்று அலைந்து திரிகிறார்கள். அதற்கு மூலம் ஆசை, ஆசை காரணமாகவே பிறப்பு வருகிறது.

> ''அவாஎன்ப எல்லா உயிர்க்குமெஞ் ஞான்றும்
> தவாஅப் பிறப்பீனும் வித்து''

என்பது திருக்குறள். ஆசை அளவற்றது. மனிதன் தன் இந்திரியங்களைத் திருப்திப்படுத்த வேண்டிப் பலபொருள்களை நாடுகிறான். ஆசைப்பட்ட பொருள் கிடைத்துவிட்டால் அதனோடு நிறைவு பெறுவது மனத்தின் இயல்பு அன்று. அநுபவிக்க அநுபவிக்க மேலும் மேலும் அதை விரும்பியே தாவுகிறது. நெருப்பை நெய்விட்டு அவிக்கமுடியுமானால் ஆசையையும் போகத்தை நுகர்ந்து போக்கிவிடலாம். இரண்டும் இயலாத காரியம். ஆசை வர வர வளர்ந்து வருகிறது. ''ஆசைக்கோர் அளவில்லை'' என்பர் தாயுமானவர். அளவில்லாத பொருள்களுக்குக் கரையில்லாத கடலை உவமை கூறுவது மரபு. ஆகவே ஆசையும் கடல் போன்றது அதன் அளவு கண்டு கடந்து கரை ஏறுவது என்பது அரிதினும் அரிய செயல்.

அளவு கடந்து ஆசை பெருகப் பெருக, அதன் விளைவாகப் பிறப்பும் தொடர்ந்து வந்துகொண்டிருக்கிறது. ஆசை கடலானால் அதனால் உண்டாகும் பிறப்பும் பெரிய கடல் ஆகும். ''பிறவிப் பெருங்கடல்'' என்பது திருக்குறள் அல்லவா?

பிறப்பு வந்தால் தொடர்ந்து இறப்பும் உண்டு. பிறப்பும் இறப்பும் மாறிமாறி வரும். ஒரு புத்தகத்தில் ஒரு தாளில் இரண்டு பக்கங்கள் இருப்பதுபோலப் பிறப்பும் இறப்பும் ஒன்றனோடு ஒன்று ஒட்டித் தொடர்ந்து இருப்பவை. ஆதலால் ஆசைக்கடலால் பிறவிக்கடல் தோன்ற, அதனால் மரணக் கடலும் விரிக்கிறது.

மரணம் வரும்போது யமன் வந்து கைப்பாசத்தை வீசி உயிரைக் கொண்டு போகிறான் என்று சொல்வது மரபு. ஆசை என்னும் வித்தை விதைப்பதனால் யமனுக்கு வேலை கொடுக்கிறோம், அவன் கைப்பாசத்திற்கு வேலை கொடுக்கிறோம். ஒவ்வொருவரும் ஆசையை விரித்து விரித்து, இந்தப் பிறவியின் இறுதியில் அந்தகனாகிய யமனுடைய பாசவலையிலே படச் சித்தராக இருக்கிறோம்.

ஆனால் அம்பிகையின் திருவருளைப் பெற்றவர்களுக்கு இந்த நிலை மாறி விடுகிறது. இந்தப் பிறவியின் இறுதியில் யமனை ஓட்டும் நிலை வரும் என்பது மாத்திரம் அன்று; நமக்கு யமவாதனை இல்லை என்ற உறுதியும் அதனால் விளையும் இன்பமும் அவர்களுக்கு முன்கூட்டியே உண்டாகி விடுகின்றன. சூரியோதயத்துக்கு முன் அருணோதயம் போலவும், தாமரை நன்கு மலர்வதற்கு முன் பெரும் போதாவது போலவும் உள்ள ஒரு நிலையை அவர்கள் அடைகிறார்கள், சிறைப்பட்டவனுக்கு விடுதலை உத்தரவு வந்து விட்டதென்றால், அப்பொழுதே அவனுக்கு ஒருவகை இன்பம் உண்டாகும்; வெளியில் வந்துவிட்டது போன்ற மகிழ்ச்சியிலே திளைப்பான். கதவைத் திறந்து வெளியில்விடவேண்டிய அந்த ஒன்றுதான் குறை. அவன் சிறையிலுள்ள குற்றவாளி அல்ல. ஆனால் முழு விடுதலை அடைந்தவனும் அல்ல. அவன் உடம்பு இன்னும் சிறையில் இருக்கிறது. இதோ விரைவில் வெளியில் வந்தேவிடுவான்

இதே நிலையில் அவர்கள் இருக்கிறார்கள். இதைத்தான் ஜீவன் முக்த நிலை என்பார்கள். இந்தச் சரீரத்தில் இருந்தாலும் சுகதுக்கமற்ற பேரானந்தப் பிராப்தி அவர்களுக்குக் கிடைக்கிறது. பிராரப்தம் காரணமாக உடல் இருக்கிறது. அது கழிந்த பிறகு முழுவிடுதலை பெற்று விதேக முக்தியை அடைகிறார்கள். ஜீவன் முக்த தசையில் இனிப் பிறப்பில்லை என்ற உறுதியும் அதற்கேற்ற அநுபவமும் உண்டாகும்.

இத்தகைய நிலையை அபிராமிபட்டர் சொல்கிறார். அம்பிகையின் அருளைப் பெறாதபோது இருந்த ஆபத்தான நிலையையும், அப்பெருமாட்டியின் கருணைக்கு ஆளான பின்பு பெற்ற உயர்நிலையையும் சொல்கிறார். ''தாயே, அடியேன் ஆசைக்கடலில் அகப்பட்டுத் திரிந்துழன்று பல பிறவி எடுத்தேன். பிறகு இந்தப் பிறவி வந்தது. மற்றப் பிறவிகளைப்போல இதன் இறுதியிலும் மரணம் வந்து தலைப்படுவதாக இருந்தது. அந்தகன் கைப்பாசத்தில் அகப்பட்டு அல்லற்படும் நிலையில் இருந்தேன். அவ்வாறு இருந்த இந்த ஏழையை நீ ஆண்டுகொண்டாய்'' என்று தொடங்குகிறார்.

**ஆசைக் கடலில் அகப்பட்டு, அருள் அற்ற**
**அந்தகன் கைப்பாசத்தில் அல்லல் பட இருந்தேனை.**

யமன் கருணையற்றவன். இன்னார் இனியார் என்று பார்க்கமாட்டான். காலம் வந்தால் பாசத்தை வீசி உயிரைக் கைக்கொண்டு போய்விடுவான். அந்த இரக்கமற்றவன் கையில் அகப்பட இருந்தவரை அம்பிகை காப்பாற்றினாள். எவ்வாறு காப்பாற்றினாள் என்பதை மேலே சொல்கிறார்.

வெளி நாட்டிலிருந்து பண்டங்களைத் திருட்டுத்தனமாகச் சிலர் கொண்டுவருவதுண்டு. நேர்மையாகப் பலர் கொண்டு வருவார்கள். சுங்க நிலையத்தில் நேர்மையாக வரி செலுத்தியவர்களின் பண்டங்களுக்கு முத்திரையிட்டு எடுத்துச்செல்ல அநுமதிப்பார்கள். அல்லாதவற்றைப்

பறிமுதல் செய்வார்கள். முத்திரைப் பெற்ற பண்டங்கள் சுங்க அதிகாரிகளின் கைக்குச் செல்வதில்லை. அவற்றை உரியவர்கள் தம் விருப்பம்போல எடுத்துச் செல்லலாம்.

உயிர்க்கூட்டங்கள் ஆற்றவேண்டிய கடமையை ஆற்ருமல் இருக்கின்றன. அதனுல் யமபடர்களால் பறிமுதல் செய்யப்படுகின்றன. அருள் முத்திரை பெற்றுவிட்டால் யமபடர்கள் விட்டுவிடுவார்கள். அம்பிகை அப்படித் தன் அருள் முத்திரையை இட்டாளாம். அன்பர்கள் தாமே நாடிச் சென்று உரிய கட்டணம் கட்டி அந்த முத்திரையைப் பொறித்துக்கொள்வது வழக்கம். ஆனுல், இங்கே அன்பர் தாம் வருந்திச் செல்லாமலே அம்பிகை வலிய வந்து அவர் தலைமேல் தன்னுடைய பாதத்தை வைத்து, ''இந்தக் கமல முத்திரை நீ என் அடியானுனதற்கு அடையாளம்'' என்று சொல்லி ஆண்டு கொண்டாளாம். வலிய வந்து தடுத்தாட்கொண்ட பரம கருணையை எண்ணி எண்ணி அன்பர் வியந்தால் அது ஆச்சரியம் அல்லவே!

நின் பாதம் எனும் வாசக்கமலம் தலைமேல் வலியவைத்து
ஆண்டுகொண்ட நேசத்தை என் சொல்லுவேன்!

அம்பிகை தன் பாதமாகிய ஞானமணம் கமழும் செந்தாமரை மலரைத் தலைமேல் வலிய வைத்து ஆண்டு கொண்டாள். அவள் தன் குழந்தையின் தலையில் வலிமையுடன் காலால் மிதிக்கவில்லை. தலையின்மேல் மலரை வைத்தாற்போல் திருவடியை வைத்து ஆண்டு கொண்டாள். முடைநாய்த்தலையில் வாசக்கமலம் பட்டவுடன் இந்த உடம்பே புனிதமாகிவிட்டது. பிறகு யமனுக்கு இங்கே என்ன வேலை?

இந்த அற்புத அருளை நேசம் என்று குறிக்கிருர் அபிராமிபட்டர். நேசம் என்பது தானே விரும்பி ஏற்படுத்

திக்கொண்ட உறவு. எல்லோருக்கும் பயனளிப்பதுபோன்றது அருள். இது அத்தகையது அன்று. அம்பிகை தானே விரும்பி வந்து தன் தாளுக்கும் அன்பர் தலைக்கும் இணைப்பு ஏற்படுத்தி உறவாக்கிக்கொண்டாள். இனி அந்தத் தலை நிமிர்ந்து நிற்கும்.

இந்தப் பேரருளாகிய நேசத்தை எப்படி வருணிப்பது! வேறு யாரேனும் இப்படிச் செய்திருந்தால் உவமையாகக் கூறலாம். அதற்கும் வழியில்லை. ஆகவே, "தாயே! இந்த நேசத்தை நான் எவ்வாறு வருணித்துக் கூறுவேன்!" என்று அவசமாகிறார் இந்த அன்பர்.

எம்பெருமாட்டியின் அடையாளத்தைக் கடைசியில் சொல்கிறார். பரமசிவனுடைய வாமபாகத்தில் நுட்பமான ஆபரணங்களை அணிந்துகொண்டு ஒன்றியிருப்பவள் எம்பெருமாட்டி. அவளுடைய திருவடி முத்திரை தலையிற் பட்ட பிறகு காலன் பயம் ஒழிந்தது. 'இனி அந்தகன் கைப்பாசத்தில் அகப்படமாட்டோம்' என்ற உறுதி வந்து விட்டது.

இவ்வாறு ஒரு பெரிய வாழ்வை, வலிந்து தடுத்து ஆட்கொண்டு, வழங்கிய அபிராமியின் பெருங்கருணையை வெளியிட வார்த்தை ஏது?

ஆசைக் கடலில் அகப்பட்டு அருள்அற்ற
அந்தகன்கைப்
பாசத்தில் அல்லற் படஇருந் தேனை, நின்
பாதம்என்னும்
வாசக் கமலம் தலைமேல் வலியவைத்து
ஆண்டுகொண்ட
நேசத்தை என்சொல்லு வேன்! ஈசர் பாகத்து
நேரிழையே!

[சிவபெருமானுடைய வாமபாகத்தில் எழுந்தருளியிருக்கும் நுட்பமான அணிகலன்களை அணிந்துள்ள தாயே,

ஆசையென்னும் கரையற்ற கடலில் துரும்புபோல அகப்பட்டு, அதன் விளைவாக மரணம் வருங்கால் சிறிதும் இரக்கம் இல்லாத யமனுடைய கையிலுள்ள பாசத்தில் அகப்பட்டு மிக்க துன்பம் அடையும்படியான அவல நிலையில் கிடந்த இந்த எளியேனை, நின்னுடைய திருவடியாகிய நறுமணம் வீசும் தாமரை மலரை அடியேன் தலைமீது நீயாக விரும்பி வலிய வைத்து என்னை ஆண்டு ஆளாக்கிக்கொண்ட பெருங் கருணையை எவ்வாறு விரித்துச் சொல்லுவேன்!

அந்தகன் - யமன். பாசம்-கயிறு. வாசம் - நறுமணம். நேரிழை - நுட்பமான அணிகலன்களை அணிந்து கொண்டவள்; ''இழையணி சிறப்பிற் பழையோள்'' (திருமுருகாற்றுப்படை); நீல மேனி'' வாலிழை பாகத்து, ஒருவன்'' (ஐங்குறு நூறு) என்பவற்றைக் காண்க.]

அம்பிகை தன்னை அண்டி அன்பு செய்தவர்களுக்கு யமனால் வரும் துன்பத்தைப் போக்குபவள் என்பது 'காலஹந்த்ரீ' என்னும் அவள் திருநாமத்தால் பெறப்படும். அன்றியும் அபிராமி எழுந்தருளியிருக்கும் தலமே கால சங்கார க்ஷேத்திரந்தானே?

இது அபிராமி அந்தாதியில் 32-ஆம் பாடல்.



# நீயே சரணம்

''பயப்படாதே; பணம் இல்லாவிட்டால் நான் தருகிறேன்'' என்று ஒரு செல்வர் ஏழை ஒருவனுக்குக் கூறிப் புகல் அளித்தார். அதனால் ஏழைக்கு மனத்தில் இருந்த கலக்கம் ஒழிந்தது. நித்தியப்படி ஏற்படும் செலவுக்கு அவன் செல்வரை எதிர்பார்க்கவில்லை. ஒருவனிடத்தில் அவன் கடன் வாங்கியிருந்தான். அவன் இன்னபோது வந்து கடனைத் திருப்பிக் கேட்பானென்று தெரியாது. அவன் வந்து கேட்டால் என்ன செய்வது என்று நடுங்கிக் கொண்டிருந்தான். அப்போதுதான் அந்த ஏழைக்குச் செல்வரின் நினைவு வந்தது. அவரை அணுகிப் பணிந்து தன் குறையைச் சொன்னான். அவர் அவனுக்கு அபயம் அளித்தார்.

அதன் பிறகு ஏழைக்கு மனம் சற்றே உறுதி பெற்றது. கடன்காரனுக்கு அஞ்ச வேண்டாம் என்று எண்ணி இருந்தான். ஆனாலும் அவனுக்கு அச்சம் முற்றும் நீங்கின பாடு இல்லை. ஒருகால் கடன்காரன் வரும் சமயத்தில் அவரைக் காண முடியாமற் போகுமோ என்ற ஐயம் வந்தது. எதற்கும் மறு முறையும் நினைப்பூட்டலாம் என்று அவரிடம் சென்றான். ''ஐயா, உங்களைத்தான் நம்பியிருக்கிறேன். அந்தக் கடன்காரன் பொல்லாதவன். அவன் வருவது தெரிந்தால், நேரே இங்கே ஓடிவந்து, 'ஐயா! காப்பாற்றுங்கள்' என்று விழுவேன்; நீங்கள் கை கொடுக்க வேண்டும்'' என்று முறையிட்டுக் கொண்டான்.

அந்த ஏழையின் நிலையில் இருக்கிறார் அபிராமி பட்டர். சென்ற பாட்டில், 'அந்தகன் கைப்பாசத்தில் அல்லற்பட

இருந்தேனை நின் பாதமெனும், வாசக் கமலம் தலைமேல் வலியவைத் தாண்டு கொண்ட, நேசத்தை என் சொல்லு வேன்!'' என்று கூறியவர், தமக்கு அம்பிகையின் அருள் எப்படியும் கிடைத்துவிடும் என்பதை உறுதி செய்து கொள் வதற்காக மீட்டும் அன்னையிடம் விண்ணப்பம் செய்து கொள்கிறார்.

யமன் நம்முடைய இறுதி நாள் இன்ன காலத்தில் வரும் என்பதை எதிர்நோக்கிக் காத்துக் கொண்டிருக் கிறான். இன்ன நாள் என்று முன்பே விதிக்கப்பட்டிருக் கிறது. ''இழைத்தநாள் எல்லை'' என்று நாலடியார் கூறும். நம்முடைய முன்னை வினைப்பயனை நுகர்வதற்கே பிறவி வருகிறது. அந்த வினை தீர்ந்தால் இந்த உடலம் போய்விடும்; இப்பிறவியில் செய்யும் வினைப்பயனை நுகர வேறு பிறவி எடுக்கிறோம்.

''வினைப்போக மேயொரு தேகங்கண் டாய்வினை
தான் ஒழிந்தால்
தினைப்போ தளவும்நில் லாதுகண்டாய்''

என்று பட்டினத்தார் கூறுகிறார்.

அவ்வாறு அறுதியிடப்பட்ட நாளில் காலன் வருவான். அந்தக் கணக்கு அவனுக்கு நன்றாகத் தெரியும். ஆகையால் தான் அவனுக்குக் காலன் என்ற பெயரே வந்தது. ''நாட் பார்த்து உழலும் கூற்று'' என்பர். அந்தச் சமயத்தில் தவறாமல் அவன் வந்து நிற்பான். அவனை உலகில் யாராலும் தடுக்க முடியாது. காலன் வந்து, ''வா போக லாம்'' என்று அழைத்தால் உயிர் நடுநடுங்கும். அத்தகைய சமயத்தில் அவனிடமிருந்து காப்பாற்றும் வலிமை அம்பிகை ஒருத்திக்குத்தான் உண்டு; ஆதலால் மீண்டும் அப்பெருமாட்டியினிடம் விண்ணப்பித்துக் கொள்கிறார், பட்டர்.

இழைக்கும் வினைவழியே அடும் காலன்
எனை நடுங்க
அழைக்கும் பொழுது வந்து அஞ்சல் என்பாய்

காலனைக் கண்டு நடுங்கும்போது அம்பிகையின் நினைவு வரும். பூச்சாண்டியைக் கண்டு நடுங்கிய குழந்தை 'அம்மா!' என்று கத்திக்கொண்டு ஓடிவருவதுபோல அம்பிகையிடம் ஓடிச் செல்லலாம் என்று எண்ணுகிறார்; அதைச் சொல்கிறார். ''அந்தப் பாவி வந்துவிட்டால் நான் மிகவும் வருந்துவேன். அப்போது வேறு யாரிடமும் செல்லமாட்டேன்; உன்னிடமே ஓடிவந்து, 'தாயே! காப்பாற்ற வேண்டும்' என்று கதறுவேன்'' என்று விண்ணப்பம் செய்து கொள்கிறார்.

உழைக்கும்பொழுது உன்னையே
'அன்னையே!' என்பன் ஓடி வந்தே.

பல பேருக்கு மரணவஸ்தை உண்டாகும்பொழுது இறைவனுடைய நினைவு வருவதில்லை. 'சாகும் காலத்தில் சங்கரா சங்கரா' என்பது எளிதன்று. அப்பர் சுவாமிகளே, ''ஒண்ணுளே ஒன்பது வாசல் வைத்தாய், ஒக்க அடைக்கும்போது உணர மாட்டேன்'' என்று சொல்லும் போது, மற்றவர்கள் எம்மாத்திரம்? பல காலம் பழகிய பிரபஞ்சத்தின் வாசனைதான் அந்த இறுதிக் காலத்தில் முன் வந்து நிற்கும். அப்போது எந்த ஆசை மீதூர்ந்து நிற்கிறதோ, அதற்கு ஏற்றபடி அடுத்த பிறவி உண்டாகும்.

ஆனால் இறைவனிடம் பக்தி செய்து மெய்யறிவு பெற்றவர்களுக்கு அந்தச் சமயத்திலும் இறைவன் நினைவு மாறாது. மற்ற எல்லாவற்றையும் மறந்து அவனையே சார்பாகப் பற்றிக் கொள்வார்கள். அவர்களுடைய மனம் இறைவனிடம் விரைந்து சென்று பற்றிக் கொள்ளும்.

'யமன் வந்து அழைப்பான்; அதனால் நான் துன்புறும போது உன்பால் ஓடிவந்து அன்னையே என்பேன்' என்று சொல்வதில், ஓடிவருதல் என்பது விரைவில் மனத்தால் பற்றிக் கொள்வதையே குறிக்கிறது. அஞ்சிய குழந்தை அன்னையிடம் ஓடி வருவது போன்ற நிலை அது.

''அன்னையே! நீதான் சரணம்'' என்றுகூடச் சொல்ல வரவில்லை. அந்த வேகத்தில், ''அம்மா!'' என்று கூவுவதை யன்றி, தன் நிலையை விரித்துக் கூறும் ஆற்றல் இராது. அச்சம் நாவைக் கட்டிவிடும். அதனால் ஒன்றும் குறை இல்லை. அன்னைக்குத் தெரியாதா வந்த அன்பனுடைய நிலை? குறிப்பால் யாவும் உணரும் பேரருளன்னை 'அம்மா' என்று கதறும் வரையிலுங்கூடப் பார்த்துக் கொண்டிருக்க மாட்டாள். ''இந்தச் சமயத்தில் நம்மை எண்ணும் பக்குவம் இவனுக்கு இருக்கிறதே!' என்று மகிழ்ந்து அவளும் ஓடி வருவாள். ஆம்! நாம் ஓடிச் செல்லும் வேகத்தைவிட அவள் நம்மை நாடி ஓடி வரும் வேகம் அதிகமாகத் தான் இருக்கும். கீழே விழுந்து காயம்பட்ட குழந்தை எழுந்து ஓடிவரும் வேகத்தைவிட, அந்தக் 'குழந்தையை அணைக்க ஓடிவரும் அன்னையின் வேகம் மிகுதியாக இருக்கும் என்பதைச் சொல்லவும் வேண்டுமா? நாம் அச்சத்தினால் ஓடுகிறோம்; அது பயவேகம்; அம்பிகையின் வேகமோ கருணை வேகம்.

காலனால் வரும் அச்சத்தைப் போக்கும் பேராற்றல் உடையவள் அன்னையென்பதைப் பலகாலும் சொல்லுகிறார் அபிராமி பட்டர். காலஹந்த்ரீ, ஸர்வ ம்ருத்யு நிவாரணீ, ஜன்ம ம்ருத்யு ஜராதப்த ஜன விச்ராந்தி தாயினீ (லலிதா சகிகர நாமம், 557, 552, 851) என்னும் அம்பிகையின் திரு நாமங்கள் இந்த உண்மையைப் புலப்படுத்தும்.

அஞ்சிய குழந்தை அம்மா என்று ஓடுவது இயற்கை. நம் உடம்பு வளர்ந்திருப்பதனால் குழந்தைப் பருவத்

தைக் கடந்துவிட்டதாக நினைக்கிறோம். அதனால் அம்மாவை நினைப்பதில்லை. இந்த உடம்பைத் தந்த அன்னை சில காலம் இருந்து மறைபவள். எல்லாக் காலத்தும் எந்த உயிரும் அம்மா என்று அழைக்கும் தகுதி உடையவள் அபிராமி. அவளுக்கு எத்தனையோ வலிமையும் பண்புகளும் இருந்தாலும், கருணையினாலும் உறவினாலும் அவள் எல்லா உயிர்களுக்கும் தாயாக இருக்கும் பண்பு மிக மிகச் சிறந்தது. அதை நாம் நினைப்பதில்லை. அதனால்தான் துன்புறுகிறோம். துயரம் வரும்போது வாய் 'அம்மா' என்று அலறுகிறது. ஆனால் உண்மையான அன்னையை நினைத்து அலறுவதில்லை; மனம் அன்னையை நினைப்பதில்லை.

குழந்தைப் பருவத்தில் மனம் அன்னையை நினைத்தது; வாய் அம்மா என்று கூவியது. அந்தப் பழக்கத்தால் வாய் மட்டும் அம்மா என்று துன்புறும் போதெல்லாம் விடாமல் சொல்கிறது. காலிலே ஏதாவது குத்தினால், ''அம்மா!'' என்கிறோம். எதையாவது இழந்துவிட்டால், ''அம்மா'' என்கிறோம். யந்திரம் உணர்ச்சியின்றி ஒலிக்கும் ஒலிபோல இது இருக்கிறதேயன்றி, மனத்தில் அதன் பொருளை நினைத்துக் கூவுவதில்லை.

நாம் அறிவு வந்த குழந்தைகள். ஆதலின் எப்போதும் மாதாவாக இருக்கிற அன்னையை உணர்ந்து, அம்மா என்று அழைக்க வேண்டும். அழைக்கும் பழக்கம் இருக்கிறது; யார் அன்னை என்று உணரும் பழக்கம் இல்லை. மற்றவர்களெல்லாம் உண்மையான அன்னை அல்லர், எம்பிராட்டி ஒருத்தியே சத்தியமான அன்னை என்பதை அறிவுறுத்துவதற்காகவே லலிதாசகசிரநாமம் எடுத்தவுடனே 'ஸ்ரீமாதா' என்று அறிவிக்கிறது. அந்த ஒரு நாமத்தைத் தெரிந்து கொண்டு, உணர்ச்சிவசப்பட்டுக் கதறினாலே போதும். தொடக்கத்திலே சொன்னது போதாதென்று மீண்டும்,

ஆப்ரஹ்ம கீட ஜனனீ (285) என்றும், அம்பிகா (295) என்றும், மாதா (457) என்றும், ஜனனீ (823) என்றும். அம்பா (985) என்றும் அந்தத் திவ்ய நூல் நினைவுறுத்து கிறது.

இறுதிக் காலத்தில் அப்பிராட்டியிடம் 'அன்னையே என்பன் ஓடிவந்தே, என்று புகுவதற்கு எவ்வளவு தகுதி வேண்டும்! அந்தத் தகுதியுடையவர் அபிராமிபட்டர்.

இழைக்கும் வினைவழியே அடும் காலன்
எனை நடுங்க
அழைக்கும் பொழுது, வந்த அஞ்சல் என்பாய்;
... ... ... ...
உழைக்கும் பொழுது உன்னையே அன்னையே
என்பன் ஓடிவந்தே.

காலன் வந்து நிற்கும்போது நாம் ஓடிச் சென்றால் போதாது. நம்மால் அம்பிகையை அணுக இயலாது. முழுத் தூரமும் போவதற்கு நமக்கு ஆற்றல் இல்லை. அவளும் நம்மை நோக்கி வரவேண்டும். நாம் ஓடிச் செல்வோம். அவள் மெல்ல நடந்து வந்தாலே போதும்.

''அன்னையே என்று ஓடிவருவேன்'' என்றார் பட்டர். அன்னை எத்தகையவள்! நம்முடைய தந்தைக்குப் பிரியமானவள். அதை நினைக்கிறார். அம்பிகையின் உருவப் பேரழகில் சொக்கி நிற்கிறவர், எம்பெருமானாகிய பரமசிவனார். நம் அத்தராகிய அவருடைய சித்தத்தைக் குழையச் செய்கிறது அம்மையின் தனபாரம். இளமை வாடாத நிலையில் அமைந்த அது கலவைச் சந்தனத்தைப் பூசிக்கொண்டு விளங்குகிறது; எம்பெருமானுடைய திருவுள்ளம் வேறு எதையும் நாடாதபடி முழுவதையும் குழையச் செய்கின்றது.

அத்தர் சித்தம் எல்லாம்
குழைக்கும் களபக் குவிமுலை.

லலிதா சகசிரநாமத்தில், 'காமேச்வர ப்ரேமரத்ன மணி ப்ரதிபணஸ்தனீ'' என்பது ஒரு திருநாமம். 'காமேச்வரருடைய காதலென்னும் ரத்தினத்துக்கு எதிரே வழங்கும் மணிகளாக உள்ள தனங்களையுடையவள்' என்பது அதன் பொருள். அந்தத் திருநாமத்தை எண்ணியே அபிராமி பட்டர் இப்படிப் பாடியிருக்கிறார். பின்னும் 42-ஆம் பாடலில், ''கொங்கை மலைகொண் டிறைவர் வலிய நெஞ்சை நடங்கொண்ட கொள்கை நலம்கொண்ட நாயகி'' என்று பாடுவார். தக்கயாகப் பரணியில் ஒட்டக்கூத்தர், ''பாகன் அகங்குழைவித்த பவித்ர பயோதரி!'' (74) என்று பாடுவார். இவ்வாறு எம்பெருமான் தெய்வக்காதல் அம்மையின் நகில்மேல் படர்வதைக் குமரகுருபர சுவாமிகள்.

''தார்கொண்ட மதிமுடி ஒருத்தன் திருக்கண்மலர்
சாத்தக் கிளர்ந்துபொங்கித்
தவழும்இள வெயிலும்மழ நிலவும்அள வளவலால்
தண்ணென்று வெச்சென்றுபொன்
வார்கொண் டணந்தமுலை மலைவல்லி கர்ப்பூர
வல்லியபி ராமவல்லி''

என்று மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழில் பாடுகிறார்.

அம்பிகைக்குச் சியாமளை என்பது திருநாமம்; அது தமிழில் யாமளை என வரும். அவள் மிகவும் மென்மையானவள்; அதனால் கோமளாங்கி, கோமளாகாரா என்ற திருநாமங்களைப் பெற்றாள். இந்த இரண்டையும் இணைத்து,

யாமளைக் கோமளமே!

என்று அபிராமிபட்டர் துதிக்கிறார். வன்மையான சித்தத்தையுடைய சிவபெருமானைக் குழைவிக்கிறவள் மெல்லியலான அம்பிகை. நீரால் கல் கரைவது போன்றது இது. அந்த மெல்லியலே காலனது பயத்தையும் போக்கவல்லவள். காலன் அஞ்சும்படி வந்து அருள் செய்கிறவள் அவள்

காலனுக்குப் பயத்தையும் காலகாலனுக்கு நயத்தையும் உண்டாக்கும் அபிராமியம்மையின் பெருமையை இந்தப் பாட்டில் பாடுகிறார் அபிராமிபட்டர்.

இழைக்கும் வினைவழி யேஅடும்
காலன் எனைநடுங்க
அழைக்கும் பொழுதுவந் தஞ்சல்என்
பாய்;அத்தர் சித்தம்எல்லாம்
குழைக்கும் களபக் குவிமுலை
யாமளைக் கோமளமே!
உழைக்கும் பொழுதுன்னை யேஅன்னை
யேஎன்பன், ஓடிவந்தே.

[இறைவருடைய திருவுள்ளம் முழுதும் உருகும்படி செய்யும், கலவைச் சந்தனம் பூசிய குவிந்த தனபாரங்களை உடைய யாமளையாகிய மெல்லியலே, எல்லாவற்றையும் வரையறுக்கும் விதியின்படி கொல்ல வரும் காலன் என்னை நடுங்கச்செய்து அழைக்கும்போது, நீ எழுந்தருளி, "நீ பயப்படாதே!" என்று அருளவேண்டும்; நான் வருந்தும் போது வேறு யாரையும் நாடாமல் உன்னையே நாடி ஓடி வந்து, "அன்னையே! சரணம்" என்று புகலடைவேன்.

இழைக்கும்-விதிக்கும்; வினை-விதி. நான் செய்த முன்னை வினையின்படி என் இறுதிக் காலத்தில் காலன் அழைக்கும்பொழுது என்றும் பொருள் கொள்ளலாம். அடும்-கொல்லும். குழைக்கும்-திண்மை நீங்கி உருகச் செய்யும். களபம்-கலவைச் சந்தனம். உழைத்தல்-வருந்துதல்.]

இது அபிராமி அந்தாதியில் உள்ள 33-ஆவது பாடல்.

# ஆறு இடங்கள்

அம்பிகையினிடம், ''காலன் வரும்போது உன்னையே சரணம் புகுவேன்'' என்று கூறிய அபிராமிபட்டர். அன்னையின் பெருங்கருணையை நினைத்துப் பார்க்கிறார். அவள் தன்னைச் சரணம் அடைபவர்களுக்கு எல்லா நலங்களையும் அருள்கிறவள். இகலோகத்தில் வளவாழ்வை அருள்வாள்; பிறகு சுவர்க்கபதவியை வழங்குவாள்; அப்பால் முத்தியையும் கொடுப்பாள்.

எல்லா வகையான போகங்களுக்கும் உறைவிடம் அமரர் உலகம். இந்திரபோகம் என்று போகத்தின் உயர்ந்த நிலைக்கு உதாரணம் சொல்வது வழக்கம். வானுலகம் அமுதம் உண்டு குறை நிரம்பிய தேவர்கள் வாழும் இடம். அதனை அம்பிகை அருளுவாள்.

மிகவும் கருணையையுடைய தாய் ஒருத்தி தன் குழந்தைகளுக்குத் தனக்குரிய பெரிய மாளிகையை, ''குழந்தைகள் சௌக்கியமாக இருக்கட்டும்'' என்று கொடுத்துவிட்டுத் தான் எங்கோ சின்னச் சின்ன இடங்களில் சென்று தங்குகிறாள். அவளுடைய அன்பை எவ்வாறு சொல்வது! தன் நலத்தைக் கருதாமல் தன் குழந்தைகளின் நலத்தைக் கருதுவதுதானே தாயின் இயல்பு? அந்தத் தாயைப்போல இருக்கிறாள் அபிராமி என்று தோற்றும்படி நயமாகப் பாடுகிறார் பட்டர். 'தன்னை அண்டிச் சரணமென்று புகுந்தவர்களுக்குச் சகல சௌபாக்கியங்களும் உள்ள தேவலோகத்தை அளித்துவிட்டுத் தான் போய் வெவ்வேறு சிறிய இடங்களில் இருப்பாள்' என்று கூறுகிறார். ஒருவனுடைய முகத்திலும் மற்றொருவனுடைய மார்பிலும் பின்னும் ஒருவனுடைய பாகத்திலும் மலரிலும்

சூரியனிலும் சந்திரனிலும் போய்த் தங்குகிறாள் என்று அந்த இடங்களைக் குறிக்கிறார். அந்தப் பாடலை இப் போது பார்க்கலாம்.

அவளுடைய அடியார்கள் வேறு யாரையும் நாடிச் செல்வதில்லை. ''எங்கள் மாதாவாகிய பராசக்திக்கு மிஞ்சியவர் யாரும் இல்லை. அந்தப் பிராட்டியே எங்களுக்கு யாவும் தருபவள்; எந்த இடையூற்றினின்றும் எம்மைக் காப்பவள்'' என்று உறுதியாக நம்பி அவளைச் சரணம் அடைவார்கள். அவர்களுக்கு அம்பிகை தேவலோகத்தை அன்போடு வழங்குகிறாள். 'பாவம்! இவர்கள் எங்கெங்கோ உழன்றார்கள். உலகத்தில் வறுமையினாலும் நோயினாலும் பிற துன்பங்களினாலும் வருந்தி அமைதியில்லாமல் தங்க இடமும் அநுபவிக்கப் பொருளும் இல்லாமல் திண்டாடி னார்கள். இவர்கள் இந்த விசாலமான இடத்தில் பரம போக்யமான வாழ்வைப் பெற்று இருக்கட்டும்' என்று பரிவோடு தருகிறாள்.

> வந்தே சரணம் புகும் அடியாருக்கு வானுலகம்
> தந்தே பரிவொடு.

யார் யாரையோ தேடிப் போகாமல் தாய் உள்ள இடத்தைஅறிந்து வந்துசரணம் புகுகிறவர்கள் அடியார்கள். தாயினிடம் ஓடிவந்து காலைக் கட்டிக்கொள்ளும் குழந்தையை அன்னை உடனே எடுத்துக் கொஞ்சுவாள். அடியார்கள் அன்னையின் அடியைப் பற்றிக்கொண்டு சரண் அடைகிறார்கள். அவர்களுடைய பழைய நிலையை யும் இப்போதுள்ள ஆர்வத்தையும் கண்டு அன்னை பரிவோடு நோக்குகிறாள். 'இவர்கள் சில காலம் இந்தப் போகத்தை நுகரட்டும்' என்று அமரலோக வாழ்வை அருளுகிறாள். பக்தர்களுக்கு இனிய போக வாழ்வைத் தருகிறவள் அன்னை என்பதை, 'பக்த ஸௌபாக்ய தாயினீ' என்ற அவள் திருநாமம் சொல்லும். சுவர்க்கம்

முதலிய நல்ல கதிகளை வழங்குபவள் என்பதை, 'ஸத்கதி ப்ரதா' என்ற திருநாமமும், பெரிய ஸாம்ராஜ்யங்களையே அளிப்பவள் என்பதை, 'ஸாம்ராஜ்ய தாயினி' என்ற திருநாமமும் விளக்குகின்றன.

இவ்வாறு தன்னைச் சரணம் அடைந்த பக்தர்களுக்கு இன்ப வாழ்வை அருளும் எம்பெருமாட்டி எங்கே இருக்கிறாள்? அவள் தனக்கென்று அமைத்துக்கொண்ட இடம் எல்லாவற்றிற்கும் மேலானது. அவளுடைய இராசதானி அது. ஆனால் அங்கே தங்கிவிட்டால் பிரபஞ்ச காரியங்கள் நடைபெற வேண்டுமே! அதன் பொருட்டு வெவ்வேறு இடங்களில் தான் போய்த் தங்கி வெவ்வேறு காரியங்கள் நிகழும்படி செய்கிறாள்.

பிரபஞ்சத்தை உண்டாக்கி உயிர்களை அங்கே குடியேற்றவேண்டும். இந்தப் படைப்பென்னும் தொழிலைப் பிரமனிடம் ஒப்படைத்திருக்கிறாள் இறைவி. அவன் சுதந்தரனாக அதைச் செய்யும் ஆற்றல் இல்லாதவன். அவனுக்குத் துணையாகக் கலைமகளை அளித்திருக்கிறாள். கலைமகள் அறிவின் திருவுரு, அறிவு இல்லாவிடின் எதையும் படைக்க இயலாது. ஆகவே, படைப்புத் தொழிலையுடைய நான்முகனுக்கு அறிவாற்றலின் உருவாகிய கலைமகள் துணைவியாக விளங்குகிறாள். பிரமனுக்குப் படைக்கும் தொழிலை வகுத்து அவனுக்குக் கலைமகளாகிய துணைவியை அருளுவதோடு நிற்பதில்லை அன்னை. அந்தக் கலைமகளினூடே இருந்து இயக்குகிறாள். அதனால் கலைமகளே அவ்வுடைய மூர்த்திகளில் ஒன்று என்று சாஸ்திரங்கள் சொல்லும். 'ப்ராம்ஹி' (657), 'ஸரஸ்வதி' (704) என்ற திருநாமங்கள் அன்னைக்கு இருப்பதை நினைத்தால் இந்த உண்மை வெளியாகும். "புண்டரிக வீட்டிற் பொலிந்து மதுரச் சொற்பொலி பழம்பாடல் சொல்லுகின்றவளும் நின் சொருபம்" என்று

மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் கூறுவதும் இங்கே உணரத்தக்கது.

படைப்புத்தொழில் நடப்பதற்கு இவ்வாறு உதவி புரியும் அம்மை, அடுத்து நடக்கும் காப்புத்தொழிலுக்கும் ஆவன செய்கிறாள். அதனைப் புரிபவர் திருமால். மக்களைப் பாதுகாப்பதற்குப் பொருள் இன்றியமையாதது. பொருளின் வடிவாக இருப்பவள் திருமகள். திருமால் கௌஸ்துபமணியை அணிந்த தம் திருமார்பில் திருமகளைத் துணையாக வைத்திருக்கிறார். பேரழகியாகிய திருமகள் மலர்மாலையும் மணியும் அணிந்த திருமால் மார்பில் இனிது வீற்றிருக்கிறாள். அந்தத் திருமகளினுள்ளே இருந்து அவள் மயமாக நின்று சகல ஐசுவரியங்களையும் தருகிறவள் பராசக்தி. அதனால் அவளைத் திருமகள் என்றே வழங்குவதுண்டு. அபிராமிபட்டர் மூன்றாம் பாடலில், "திருவே" என்று அழைத்தார். திருமகளைக் குறிக்கும் ரமா (313), வைஷ்ணவி (892) என்னும் திருநாமங்களை அன்னைக்கு உரியனவாக லலிதா சகசிரநாமம் கூறுகிறது.

சரசுவதியாகப் பிரம்மாவின் முகத்திலும், திருமகளாகத் திருமாலின் மார்பிலும் எழுந்தருளியிருக்கும் அபிராமி சிவபிரானுடைய ஒரு பாகத்தில் குடிகொண்டு ஐந்தொழில்களையும் நடத்துகிறாள்.

> "உறைகின்ற நின்திருக் கோயில்நின் கேள்வர்
> ஒருபக்கமோ' (20)

என்று முன்பும் பாடினார். ஆகவே மூன்று மூர்த்திகளுடைய திருமேனியில் சென்று நின்று அவர்களால் ஆகும் காரியங்கள் இனிது நடக்கும்படி அருள்பாலிக்கிறாள் தாய்.

> தான் போய் இருக்கும் சதுர்முகமும்,
> பைந்தேன் அலங்கல் பருமணி ஆகமும்,
> பாகமும்.

இவற்றோடு அம்மை போயிருக்கும் வேறு இடங்களையும் சொல்ல வருகிறார். அவள் தாமரை மலரில் வீற்றிருக்கிறாள். வெவ்வேறு இடங்களில் வெவ்வேறு விதமான தாமரை மலர்களில் வெவ்வேறு உருவங்களில் எழுந்தருளியிருக்கிறாள். பிரமனுடைய உருவத்தில் தாமரை மலரில் இருக்கிறாள்; அதனால் அவளுக்கு, ப்ரஹ்மரூபா (265) என்ற திருப்பெயர் அமைந்தது. உடம்பிலுள்ள ஆறு ஆதாரங்களிலுள்ள தாமரைகளில் அவள் வெவ்வேறு கோலத்துடன் வீற்றிருக்கிறாள். இதை 20-ஆம் பாடலின் உரையில் பார்த்தோம். ஆதாரங் கடந்த பிரமரந்தரத்தில் ஆயிர இதழ்த் தாமரையில் அவள் சோதிவடிவாய் இருக்கிறாள். அதனால் ஸஹஸ்ராராம்புஜ ரூடா (105), ஸஹஸ்ரதள பத்மஸ்த்தா (528) என்ற திருநாமங்கள் அவளுக்கு உரியவை ஆயின. பொதுவாகப் பத்மாஸனா (278) என்ற திருநாமமும் உண்டு.

உலகம் பகலில் சூரியனால் ஒளி பெறுகிறது. இரவில் சந்திரனால் ஒளிபெறுகிறது. காலந் தவறாமல் இந்த இரண்டு சுடர்களும் தங்கள் செயலைச் செய்துவருகின்றன. இவை தம் நிலை த்வறினாலும் காலந்தவறினாலும் பிரபஞ்சத்தின் போக்கில் பெரிய மாறுதல்களும் துன்பங்களும் உண்டாகும். இந்த இரண்டு மண்டலங்களும் வழுவாமல் நின்று ஒளி வழங்குவதற்குக் காரணம் இவற்றினூடே அன்னை இருந்து இயக்குவதுதான். இவை எப்போதும் சுழன்றுகொண்டே இருக்கின்றன. பம்பரம் சுழன்று கொண்டிருப்பதைப் பார்க்கும் குழந்தை உண்மை தெரியாமல் அது தானே சுழல்கிறது என்று நினைத்துக் கொள்கிறது. அதைப்போலவே அறியாதவர்கள் சூரியன் முதலிய கிரகங்கள் தாமே சுழல்கின்றன, அது இயற்கை என்று எண்ணுகிறார்கள். பம்பரத்தைச் சுழற்றிவிட்ட பையன் மறைவில் இருக்கிறான். அவ்வாறே இவற்றை

யெல்லாம் சுழலவிட்ட மகாசக்தி ஒன்று இருக்கிறது. அந்தச் சக்திக்குப் பெயரே பராசக்தி. அந்த அன்னையின் அருளால் சூரியசந்திரர்கள் சுழலுகிறார்கள்; வானவெளியில் ஆதாரமின்றி இருக்கிறார்கள்; ஒளி தருகிறார்கள். அம்மை அவற்றில் மறைந்து நின்று நடத்துகிறாள். பானுமண்டல மத்யஸ்தா (275) என்றும், சந்த்ரமண்டல மத்யகா (240) என்றும் அம்பிகையை வழங்குவதனால் இந்தக் கருத்தை உணரலாம்.

> "இரவுபகல், சூழும் சுடர்க்கு நடுவே
> கிடந்து சுடர்கின்றதே" (47)

என்று இவ்வாசிரியரே பின்னால் ஒரு பாடலில் சொல்கிறார்.

> பொற் செந்தேன் மலரும், அலர் கதிர்
> ஞாயிறும், திங்களுமே.

வீட்டைக் கட்டி, அது நன்றாக விளங்கும்படி. பாது காத்து, உரிய காலத்தில் அதை இடித்துப் புதுக்கி அதில் நல்ல விளக்குகளை ஏற்றிவைத்து நன்மை புரிகிற ஒருத்தியைப் போல, அம்பிகை இந்தப் பிரபஞ்சத்தைப் படைத்துக் காத்து அழிக்கக் காரணமாக இருந்து, வெவ்வேறு கோலங்களில் வெவ்வேறு இடத்தில் அமர்ந்து பல காரியங்கள் நடக்கச் செய்து, இரண்டு சுடர்களையும் ஒளி பெற்றுப் பிரகாசிக்கச் செய்கிறாள். இதனைப் பின்வரும் பாட்டில் அழகாகச் சொல்கிறார் அபிராமிபட்டர்.

> வந்தே சரணம் புகும்அடி
> யாருக்கு வான்உலகம்
> தந்தே பரிவொடு தான்போய்
> இருக்கும் சதுர்முகம்
> பைந்தேன் அலங்கற் பருமணி
> ஆகமும் பாகமும்பொற்
> செந்தேன் மலரும் அலர்கதிர்
> ஞாயிறும் திங்களுமே.

[அபிராமியன்னை தன்னிடம் வந்து புகலடையும் அடியவர்களுக்குச் சொர்க்கலோக பதவியை அன்போடு தந்து, நான் பிரமதேவனுடைய நான்கு முகங்களிலும். பசிய தேன் ஒழுகும் துழாய்மாலையும் பருத்த கவுஸ்துப மணியும் அணிந்த திருமாலின் திருமார்பிலும், சிவபிரானுடைய வாமபாகத்திலும், செந்தேன் சொரியும் பொலிவு பெற்ற தாமரை மலரிலும், பரவிய கிரணங்களையுடைய கதிரவனிடத்திலும், சந்திரனிடத்திலும் போய் வீற்றிருப்பாள்.

வானுலகம் — தேவலோக பதவி. பரிவு — அன்பு, இரக்கம். சதுர்முகம் என்ற எண்ணிக்கை பிரமாவின் முகங்களைக் குறித்தது. பைந்தேன்: இங்கே பசுமை, புதுமையைக் குறித்தது. பொன்—பொலிவு].

இது அபிராமி அந்தாதியில் 34-ஆம் பாடல்.



# பெறலரும் தவம்

அபிராமி பட்டருக்கு எத்தனை பெருமிதம்! தமக்குக் கிடைத்த பேறு வேறு யாருக்கும் கிடைக்கவில்லை என்று பெருமைப்படுகிறார்; எண்ணி எண்ணி உளம் பூரிக்கிறார். 'இந்தப் பேறு கிடைக்க என்ன தவம் செய்தேனோ!' என்பது கூட அகங்காரமாகிவிடும் என்று எண்ணினார் போலும்! 'இப்படி ஒரு தவம் எங்களுக்குக் கிடைத்ததே!' என்று ஈடுபடுகிறார். அது என்ன பேறு?

அம்பிகை தன்னுடைய சிறிய அடியை அவருடைய சென்னியின்மேல் வைத்தாளாம். "சென்னிய துன்பொற் றிருவடித் தாமரை" (6) என்று முன்னேயும் சொன்னார். அந்த அடியை அம்பிகையே திருவுள்ளம் குளிர்ந்து வந்து தலையில் வைத்தாளாம். அது பெருந்தவத்தின் பயன். அந்தத் தவம் எப்படி வந்தது? அதுவும் அம்பிகையின் அருளாலே கை கூடியது தான். "அவனருளாலே அவன் தாள் வணங்கி" என்று அடிக்கடி கேட்டிருக்கிறோம். தம்முடைய பெருமுயற்சி இல்லாமலே அம்பிகையின் அருளால் அந்தத் தவம் அவரை வந்து அடைந்ததாம். அது பெரிய வியப்பல்லவா? ஆ என்ன உயர்ந்த கருணை! 'தவம் எங்களை வந்து சேர்ந்தது. அது மிக மிக ஆச்சரியமானது.'

> சீறடி சென்னி வைக்க
> எங்கட்கு ஒரு தவம் எய்தியவா!

அடியார் கூட்டம் அத்தனையையும் மனத்தில் கொண்டு பேசுகிறார் இந்த அன்பர்; 'எங்களுக்கு இப்படி ஓர் ஒப்பற்ற தவம் கிடைத்தவாறு என்னே!' என்கிறார். அம்பிகை இவர் தலையில் வைப்பதற்கென்றே சிறிய அடியை உடைய

திருக்கோலத்தோடு எழுந்தருளியிருக்கிறாள். உலகமே திருமேனியாக உடைய எம்பிராட்டி உலகம் மூடும் பெரும் பாதம் உடையவள். ஆயினும் தன்னுடைய அடியார்களுக்காக இரங்கி அவர்களுடைய தலையில் அமையும்படி சிற்றடிப் பெண்ணாக வந்து அவர்கள் அடியார் என்பதை உறுதிப் படுத்துகிறாள். அம்பிகையின் அடியை முடியில் உடையவர் களாதலின் அடியார் ஆயினர்.

இந்தத் தவம் பெரிது என்பதற்கு என்ன ஆதாரம்? எத்தனையோ தேவர்கள் அந்தத் திருவடியைத் தம்முடைய தலையிலே சூடிக்கொள்ள வேண்டுமென்று எண்ணினார்கள்; முயன்றார்கள். ஆனாலும் அவர்களுக்குத் தவம் போதவில்லை. அவர்கள் செய்யும் தவத்துக்கு அவ்வளவு பெரிய பரிசு கிடைக்க நியாயம் இல்லை. தேவர்கள் தம்மை நோக்கித் தவம் செய்கிறவர்களுக்குப் பல வரம் கொடுத்தவர்கள். அவ்வளவு பெரியவர்கள் இறைவியின் திருவடியைத் தம் தலைமேலே வைத்துக்கொள்ள எண்ணி எப்படி எப்படியோ முயல்கிறார்கள். அவர்கள் செய்யும் தவம் அதற்குப் போதவில்லை. 'அவர்களுக்கு எங்கே அதற்கு ஏற்ற தவம் கிடைக்கப் போகிறது?' என்றே தோன்றுகிறது.

எண் இறந்த விண்ணோர்
தங்கட்கும் இந்தத் தவம் எய்துமோ!

தேவர்கட்கும் கிடைக்காத தவம் அடியவர்களுக்குக் கிடைத்தது. அந்தத் தவத்தின் பயனாக இந்தப் பெரும் பேறு கிடைத்தது. அம்பிகை தன் சிறிய திருவடியை அவர்களுடைய தலைமேல் வைத்தாள்.

பக்தர்கள் அகந்தையை விட்டு எப்போதும் பணிவுடன் இருப்பார்கள். தலையில் அம்பிகையின் திருவடி இருப்பதால் நிமிரமாட்டார்கள்; பணிவாகவே இருப்பார்கள். தேவர் களுக்கும் பணிவுக்கும் நெடுந்தூரம். அதனால்தான் அவர்கள்

தலை குனிவதில்லை; பணிவதில்லை. பணிந்தால் தானே பயன் கிடைக்கும்? யார் தலை அடக்கத்தால் குனிந்திருக்கிறதோ அந்தத் தலையில் அம்பிகை தன் திருவடியை வைக்கிருள். அவர்கள் தலைபணிந்து நிற்கிற நிலையே அன்னையின் திருவடி இங்கே பதியவேண்டும் என்ற குறிப்பைக் காட்டுகிறது. அகந்தையினுல் நிமிர்ந்த தலையில் அவள் அடியை வைக்க மாட்டாள்.

அரசன் ஒருவனுக்கு முடிசூட்டும்போது பெரியவர்கள் சூட்டுவார்கள். இராமனுக்கு வசிஷ்டர் முடி சூட்டினுர். முடியைச் சூடிக்கொள்ளும்போது தலைபணிந்து ஏற்பார்கள். இறைவியின் திருவடியோ அகிலலோக சாம்ராஜ்யத்தின் தனிமுடி போன்றது. அதை ஏற்றுக்கொள்ள எத்தனை பணிவு வேண்டும்! அந்தத் திருவடி நம் தலையிலும் பதியுமா என்று ஏங்கி, அகந்தை அழிந்து உருகி நிற்பது அடியார் இயல்பு. அதுவே பெருந்தவம். அதன் பயனுக அவர்கள் தலைகள், முடி பெற்ற தலைபோலச் சிறப்பை அடைகின்றன; இறைவியின் அடியைச் சூடிக்கொள்கின்றன.

இந்தத் தவம் செய்த கூட்டத்தினருள் ஒருவராகிய அபிராமிபட்டர், "கணக்கற்ற தேவர்களுக்கும் கிடைக்காத பாக்கியம் அல்லவா எங்களுக்குக் கிடைத்திருக்கிறது? வேறு யாருடைய தலையில் அன்னையின் திருவடி பதியும்?" என்று எக்களிப்போடு சொல்கிருர்.

அடியார்களையல்லாமல் தேவர்கள் தலையில் அன்னை தன் திருவடி வைப்பதில்லை என்ருலும், தேவர்களுக் கெல்லாம் பெரிய தேவனுகிய மகாதேவனுடைய திருமுடி யில் அதனை வைப்பதுண்டு. ஆனுல் அது பரமரகசியமான செய்தி.

எல்லோரும் அறிய அடியார்கள் தலையின்மேல் அம்பிகை ர் சீறடியை வைக்கிருள். ஆனுல் மகாதேவனுகிய

சிவபிரானுடைய தலையில் மிக மிக இரகசியமாக வைக்கிருள். அம்மையும் அப்பனும் அந்தரங்கமாகப் பழகும் இடத்தில் நிகழ்கிற காரியம் இது. இது அம்பலத்தில் வராதது. ஆனாலும் அடியார்கள் அறிந்தது.

அம்பிகையும் அப்பனும் தனித்து இருக்கும்போது அவர்களுடைய உறவுக்குச் சுவை மிகுதியாக வேண்டு மல்லவா? அப்போதுதான் பிரபஞ்ச சிருஷ்டியும் உயிர்களி னிடம் கருணையும் தோன்றும். அதனுல் அம்பிகை ஊடல் கொள்கிருள். அதனைத் தணிப்பதற்காக எம்பெருமான் காமேசுவரியாகிய தேவியை வணங்குகிருன்.

''ஆதி பகவான் தனதூடல் தணிப்பான் பணிய''

என்று பிரபுலிங்க லீலை சொல்கிறது.

''சரணுர விந்தம்...எம்பிரான் முடிக்கண் ணியதே'' (11)

என்று முன்னே பாடினுர் அபிராமிபட்டர்.

''பனிமாமலர்ப் பாதம்வைக்க...
கொன்றைவார் சடையின் மேலினும்'' (60)

''தைவந்து நின்அடித் தாமரை சூடிய
சங்கரற்கு'' (97)

என்று பின்னும் பாடுவார்.

ஊடற்காலத்தில் பணியும் காமேசுவரன் திருமுடிமேல் திருவடியை நீட்டுகிருள் அம்பிகை. அப்போது திருமுடியி லுள்ள சந்திரன் அந்தத் திருவடியில் படுகிறது; அதன் முத்திரை படிகிறது. இறைவன் பிறைச்சந்திரனைத்தானே முடியில் வைத்திருக்கிருன்? அந்தச் சந்திரகண்டமாகிய திங்கட்பகவின் மணம் அம்பிகையின் அடியில் மணக்கிறது. அதை அடியார்கள் உணர்ந்து கொள்கிருர்கள்.

மகாதேவனுடைய திருமுடியிலே வைக்கும் பாதம என்று, அறையில் நடந்ததை அம்பலமாக்குவது முறையா காது. ஆனாலும் அந்த அடியின் பெருமையைச் சொல்ல வேண்டும். அதனால் குறிப்பாக இது புலப்படும்படி, அம்பிகையின் திருவடி பிறைச்சந்திரனுடைய மணம் வீசுகிறது என்கிறார் அபிராமிபட்டர்.

திங்கட் பகவின் மணம் நாறும் சீறடி
 சென்னி வைக்க
எங்கட்கு ஒரு தவம் எய்தியவா!

என்று சொல்கிறார். 'அந்தரங்கமான நிகழ்ச்சி நடைபெறும் இடத்தில் இறைவனுடைய தலையின்மேல் படும் திருவடி, வேறு எந்தத் தேவரும் தம் தலைமேல் வைத்துக்கொள்ளும் பாக்கியம் இல்லாத திருவடி; அதைத் தாயே நீ எங்கள் தலையின்மேல் வைப்பதற்கு நாங்கள் செய்த தவந்தான் என்னே! அந்தத் தவம் வேறு யாருக்கும் கிடைக்காதே!' என்று ஈடுபடுகிறார் அபிராமிபட்டர்.

அருணகிரிநாதர் அம்பிகையின் திருவடியில் பிறைச் சந்திரனுடைய மணம் வீசும் என்பதைச் சித்து வகுப்பில் பாடுகிறார்.

''தருண சந்த்ர ரேகை விரவு மணநாறு பாதார வித்த
 விதரண விநோத மாதா.''

குமரகுருபர முனிவர் இந்தச் செய்தியை,

''கூன்பிறைக் கோடுழுத பொலன்சீறடி''

என்று மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழிலும்,

''பிறைநாறும் சீறடியைப் பாடுவனே''

என்று மீனாட்சியம்மை குறத்திலும்,

''பிள்ளைப் பிறைநாறும் சீறடியெம் பேதாய்''

என்று சிவகாமியம்மை இரட்டை மணிமாலையிலும் அமைக்கிருர்.

'இந்தத் தவம் பிறருக்கு எய்துமோ?' என்று அம்பிகையையே கேட்கிருர். "வேறு ஒருவருக்கும் கிடைத்ததுண்டு" என்று அம்பிகை சொல்ல முந்திஞலும் முந்தலாம். அந்த இரகசியம் தமக்குத் தெரியும் என்பதைக் குறிப்பாகச் சொல்வார்போல,

திங்கட் பகவின் மணம் நறும் சீறடி

என்று சொன்ஞர்.

அம்பிகையை விளித்து இதைச் சொல்கிருர்.

வெங்கட் பணிஅணைமேல் துயில்கூரும்
விழுப்பொருளே!

என்று பாட்டை முடிக்கிருர்.

அம்பிகை வெவ்விய கண்ணை உடைய ஆதிசேஷஞகிய படுக்கையின்மேல் துயில் கூர்கிருளாம். ஆதிசேஷன்மேல் துயிலுபவர் திருமால். அம்பிகையே திருமாலாக இருந்து உலகத்தைப் புரக்கிருள். கோவிந்தரூபிணி, நாராயணி, முகுந்தா, வைஷ்ணவி, விஷ்ணுரூபிணி என்ற திருநாமங்கள் அவளுக்கு வழங்குவதன் காரணமே அதுதான். அம்பிகையின் உருவங்களில் ஆண் உருவமாக உள்ளது திருமால் வடிவம். வைஷ்ணவி சக்தியாகத் திருமாலுக்குரிய படைகளைத் தரித்துப் பாம்பணையில் துயில் கொள்வதும் உண்டு.

"பொங்கமளிப் புணரித்துயில் வல்லி"
"வலையவா ளராமீது துயில்விடாத தான்" (73, 111)

என்று ஒட்டக்கூத்தர் தக்கயாகப் பரணியில் பாடுகிருர்.

இங்கே அந்த நிலையைச் சொல்கிருர் ஆசிரியர். அவள் எல்லாப் பொருளுக்கும் மேலான பொருள்; பரம்பொருள்;

விழுப்பொருள். பரப்பிரம்மமே அவள்தான். அதையும் நினைக்கிறார்.

அந்த விழுப்பொருளாகிய அபிராமியன்னை அடியவர்களிடம் பேரருள் கூர்ந்து அடியார்கள் என்பதை உறுதிப்படுத்துவதுபோல அவர்கள் தலையில் தன் திருவடியை வைத்து நலம் செய்கிறாள். இந்தப் பேற்றைப் பெற்ற பட்டர் வியந்து பாடுகிறார்.

திங்கட் பகவின் மணம்நாறும் சீறடி
    சென்னிவைக்க
எங்கட்கு ஒருதவம் எய்திய வா!எண்
    இறந்தவிண்ணோர்
தங்கட்கும் இந்தத் தவம்எய்து மோ?தரங்
    கக்கடலுள்
வெங்கட் பணிஅணை மேல்துயில் கூரும்
    விழுப்பொருளே

[அலை வீசும் பாற்கடலில் வெவ்விய கண்ணையுடைய ஆதிசேஷனாகிய பாம்புப்பாயலின்மீது துயிலும் பரம்பொருளே, சிவபிரானுடைய திருமுடியில் உள்ள பிறைச் சந்திரனது மணம் வீசும் நின்னுடைய சிறிய அடியை அடியேங்களுடைய தலையிலே நீ வைத்தருள. எங்களுக்கு ஒப்பற்ற தவம் கிடைத்தவாறு என்ன வியப்பு! கணக்கில்லாத பல தேவர்களுக்கும் இத்தகைய சிறந்த தவம் கிடைக்குமோ? கிடைக்காதே!

திங்கட் பகவு - சந்திரனது பிளவு; பிறை. எங்கட்கு என்றது அடியார்கள் எல்லாரையும் எண்ணிச் சொன்னது. ஒரு - ஒப்பற்ற. எய்தியவா - எய்தியவாறு என்ன வியப்பு. தரங்கம் - அலை. கண்ணினால் தீயைக் கொப்புளிப்பதனால் வெங்கண் என்றார். பணி - பாம்பு, இங்கே ஆதிசேஷன். அணை - படுக்கை.]

இது அபிராமி அந்தாதியில் 35-ஆம் பாடல்.

# அநுபவ அதிசயம்

அம்பிகையின் திருவடியைப் பணிந்து அவளுக்கு அடியாரான பேற்றை நினைக்க நினைக்க அபிராமிபட்டருக்கு வியப்பு மீதூர்கிறது. அப்படி அடிமைப்பட்டதனால் உண்டான அநுபவத்தை எண்ணிப் பார்க்கிறார். 'ஒன்றுக்கும் பற்றாத இந்த எளியவனுக்கு இத்தகைய அநுபவம் கிடைக்கும்படி செய்த மகாமாதாவின் திருவருளை என்ன வென்று சொல்வது!' என்று வியக்கிறார். அன்னையையே பார்த்து, "அம்மா! உன் அருளின் வல்லபத்தை எவ்வாறு நான் அறிந்து சொல்ல முடியும்?" என்று உருகுகிறார்.

அன்னை உலகத்துச் செல்வம் அத்தனையுமாக விளங்கு பவள்; எல்லாச் செல்வத்துக்கும் மேலான செல்வமாக நிலவுகிறவள். எல்லாப் பொருளுக்கும் மேலான பரம் பொருளே அவள்தானே? அவளைச் செல்வமே என்று அழைக்கலாம்; பரவஸ்துவே என்று துதிக்கலாம். எல்லாப் பொருளுமாக இருப்பவளே என்றும் சொல்லலாம் இவற்றை ஒருங்கே எண்ணும்படி,

பொருளே!

என்று தொடங்குகிறார் ஆசிரியர். அவள் செல்வமாக இருக்கிறாள்; செல்வத்தை வழங்குகிறாள்; வஸுதா (670) என்பது அன்னையின் திருநாமங்களில் ஒன்று. 'எல்லா மக்களுக்கும் செல்வத்தைக் கொடுப்பவள்' என்பது அதன் பொருள்.

பொருள் என்பதற்கு உண்மையென்றும் பொருள் உண்டு. அம்பிகை ஒருத்திதான் மெய்யாக உள்ள பொருள்.

தலின் மெய்ப்பொருளே என்றும் அதற்குப் பொருள் கொள்ளலாம்.

பின்னாலே, 'பொருள் முடிக்கும் போகமே' என்று வருவதால், செல்வமாக விளங்குபவளே என்று கூறுவது பொருத்தமாக இருக்கும்.

பொருள் அல்லது செல்வத்தால் உண்டாவது நுகர்ச்சி அல்லது போகம். வெறும் பொருளைப் பயன்படுத்தாமல் வைத்திருப்பதனால் அதற்கு மதிப்பே இல்லாமல் போய் விடுகிறது. ஒரு குறிப்பிட்ட அளவுள்ள பொருள் ஒரு காலத்தில் அதிகமாக மதிக்கப்பெறுகிறது; வேறு ஒரு காலத்தில் அத்தனை மதிப்பு அதற்கு இருப்பதில்லை. அந்தப் பொருளால் கிடைக்கும் போகத்துக்கு ஏற்ப அதற்கு மதிப்பு மாறுகிறது. ஒரு நாட்டில் செலாவணியாகும் நாணயம் மற்றொரு நாட்டில் செல்லுவதில்லை. அங்கே பொருள் இருந்தும் போகம் இல்லை. அம்பிகை பொருளாக இருக்கிறாள்; அந்தப் பொருளால் நிறைவேற்றிக்கொள்ளும் போகமாகவும் விளங்குகிறாள். அவளுக்கு மஹாபோகா (219) என்பது ஒரு திருநாமம்.

பொருள் முடிக்கும் போகமே!

''முனிவரும் மன்னரும் முன்னுவ பொன்னால் முடியும்'' என்று திருக்கோவையார் கூறும். போகத்தைப் பொருள் தான் நிறைவேற்றிக் கொடுக்க வேண்டும் ஆகவே, பொருள் முடிக்கும் போகமே என்றார்.

''பொன்னாய் மணியா ளாய்போக மாளாய்

என்று அப்பர் சுவாமிகளும் இறைவனைப் பொருளாகவும் போகமாகவும் போற்றுகிறார்.

மிக்க போகத்தில் ஈடுபட்டவர்களுக்கு அந்தப் போகமே உண்மையானது என்ற மயக்கம் உண்டாகும். நிலையாத

வற்றை நிலையுள்ளன என்று கருதும் இயல்பை மருள் என்றும் மாயை என்றும் கூறுவார்கள்.

"பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரும் மருள்" என்பது திருக்குறள், இவ்வாறு உண்டாகும் மயக்கத்தின் உருவாகவும் அன்னை இருக்கிறாளாம்.

அரும் போகம் செய்யும் மருளே!

அம்பிகைக்கு மஹாமாயா (215), மாயா (719), ஸர்வ மோஹினி (703) என்றுள்ள திருநாமங்கள் இத்தகைய மயக்கத்தையும் மறைப்பையும் உண்டுபண்ணுபவளும், அந்த மாயையாகவே இருப்பவளும் அவளே என்பதைப் புலப்படுத்துகின்றன.

அவ்வாறு மயங்கிய ஆன்மாக்கள் அந்த மயக்கத்தினின்றும் நீங்கித் தெளிவை அடைகின்றன. அந்தத் தெளிவையும் அவளே உண்டாக்குகிறாள்; அந்தத் தெளிவே தானாக அவள் இலங்குகிறாள்,

மருளில் வரும் தெருளே!

அவித்தையாகிய மருளைப்போக்கித் தெளிவை உண்டாக்குவதனால் அம்பிகைக்கு விஞ்ஞானகலனா (902) என்ற திருநாமம் உண்டாயிற்று. குழந்தையின் ஆசையை அறிந்து அது கேட்கிற உணவைக் கொடுத்துவிட்டு, அதனால் குழந்தைக்கு மந்தந் தட்டி நோய் வந்தால், அதை மாற்ற மருந்தும் வாங்கித் தருகிறாள் தாய். இரண்டும் அவளுக்குக் குழந்தையினிடம் உள்ள அன்பினால் விளையும் செயல்களாம். உலகன்னையாகிய அபிராமியும் தன் குழந்தைகளின் ஆசைப்படியே போகமாக நின்று நுகரச்செய்து, அதன் விளைவாக மருளை உண்டாக்கி, அப்பால் அது தெளியத் தெளிவு தந்து, அந்தத் தெளிவாகிய ஞானமே தன்னுடைய உருவாக விளங்குகிறாள்.

இத்தகைய அன்னையை உள்ளத்தில் வைத்துத் தியானம் செய்தவர் அபிராமிபட்டர். பல காலம் அன்னையைத் தியானம் பண்ணிய பழக்கத்தினால் அவருடைய உள்ளத்தில் அம்பிகை சுடர்விட்டு விளங்குகிறாள்.

நம்முடைய மனத்தில் என்ன இருக்கிறது? கண்ணை மூடிக்கொண்டு பார்த்தால் ஒரே இருட்டைத்தான் காண்கிறோம். நம்முடன் இருக்கும் மனம் நமக்கு எதையும் காட்டாமல் இருட்டுத் திரை போட்டு விடுகிறது. அந்த இருள் திரையைக் கிழிக்க நமக்குத் திறமை இல்லை. ஒளி வந்தால்தான் இருளை ஓட்டமுடியும். விளக்கைத் தேடிப் பெற்று அதைக் கொண்டுவந்து மனத்துக்குள் வைக்கும் வழி தெரியவில்லை. உலகத்திலுள்ள எதை எதையோ கொண்டு வந்து மனத்துக்குள் வைத்துக்கொள்கிறோம்; அவற்றையே நினைத்துக் கொண்டிருக்கிறோம். அதனால் நம்மை அறியாமல், நமக்குத் தீமையையே தரும் இந்த இருட்டு. மனத்துக்குள்ளே புகுந்து போகமாட்டேன் என்கிறது.

இந்த இருட்டைப் போக்கும் விளக்கு இன்னதென்று தெரிந்துகொள்ள வேண்டும். அதை உள்ளத்தே கொண்டு-வந்து வைக்க வேண்டும் அம்பிகையே அந்த விளக்கு.

''அகந்தைக் கிழங்கை அகழ்ந்து எடுக்கும்
தொழும்பர் உளக்கோயிற்கு ஏற்றும் விளக்கே''

என்று குமரகுருபரர் மீனாட்சியம்மையைச் சொல்கிறார். அன்னையாகிய விளக்கைக் கொண்டுவந்து அகத்தே வைத்தால் அங்குள்ள நல்ல பொருள்களும் அல்லாத பொருள்களும் தெரியும். நல்ல பொருள் சிறிதும் இல்லை என்ற உண்மை தெரியவரும். அப்போது தீய பொருள்களை ஒவ்வொன்றாக வெளியே தள்ளிவிட முயல்வோம். நாளடைவில் எல்லா அழுக்குகளையும் ஒழித்துவிட முடியும்.

அதற்குள் விளக்காக இருந்த அன்னை சுடராக விரிந்து சோதியாகப் பரந்து நிற்பாள். அப்போது கண்ணை மூடிக் கொண்டால் ஒரே ஒளிமயமாகத் தோன்றும். ஒரு சிறு புள்ளியளவு மாசும் இல்லாமல், அவள் நான் என்ற வேறு பாடும் இல்லாமல் அந்த ஒளி வெள்ளத்தில் மூழ்கி நம்மை மறந்து நிற்போம்.

தெருள் பெற்றவர்களுக்கு, தம்மை அறியாமல் புகுந்து கொண்ட வஞ்சக இருள் ஒழிந்துபோக, ஒரே ஒளி நிரம்பிய ஆகாசமாக, ஒளி வெளியாக, அம்பிகை காட்சி அளிப்பாள். அப்போது உண்டாகும் ஆனந்தத்துக்கு அளவு ஏது? எல்லாம் மறந்து நாமே அந்த ஒளி வெள்ளமாகிவிடுவோம். இந்த அநுபவத்தை அம்பிகை தருகிறாளாம்.

பக்தனிடம் பரம கருணைகொண்டு இந்த அநுபவத்தை உண்டாக்குகிறாள் அன்னை. அந்தக் கருணையை எப்படி மதிப்பிடுவது? அதற்கு உவமை ஏதாவது உண்டா? அந்த அருளால் விளைந்த அநுபவம் எப்படி வாக்கினால் அளவிட்டுச் சொல்லமுடியாதோ, அவ்வாறே அந்த அருளையும் சொல்ல முடியாது.

என் மனத்து வஞ்சத்து
இருள் ஏதும் இன்றி ஒளிவெளி ஆகி
இருக்கும் உன்றன்
அருள் ஏது? அறிகின்றிலேன்

என்று, சொல்லமுடியாமல் திணறுகிறார் ஆசிரியர். "உன்னுடைய இந்த அருள் எத்தகையது? எனக்குச் சொல்லத் தெரியவில்லையே!" என்று அவர் உருகுகிறார்;

அம்பிகையின் திவ்யதேஜோமய லாவண்யம் கங்கு கரை இல்லாத கடல். உருவநிலையினின்றும் மாறி அலையற்ற ஜோதி வெள்ளமாகி, கரையற்ற ஜோதிக்கடலாகி நிற்கும்

அவளோடு இந்த ஆத்மா ஒரு மின்னற் கீற்றுப்போலே கலந்து ஒன்ருகிவிடுகிறது. வெள்ளத்தில் மழைத்துளி வீழ்ந்து கரைவதுபோல, பெருங்கடலில் அலையெழுந்து அடங்குவதுபோலே, இந்த இரண்டற்ற நிலை உண்டாகி விடுகிறது. இந்த அதிசய நிலையிலிருந்து இறங்கி வந்து பேசுகிருர் அபிராமிபட்டர். சொல்லுவதற்குரிய நிலைக்கு அவர் இறங்கினுர்; ஆனுல் இந்த அநுபவம் சொல்லும் அளவுக்கு இறங்கி வரவில்லையே!

அம்புயத்தை ஆசனமாக உடைய அம்பிகையை நோக்கி உருகுகிருர் பட்டர். அவள் ஆருதாரக் கமலங் களில் இருந்து வழிகாட்டுகிறவள்; அவற்றிற்குமேலே பிரமரந்திரத்தில் ஆயிர இதழ்க் கமலத்திலே ஜோதி வடி வாக வீற்றிருக்கிறவள்.

உலக நிகழ்ச்சிகள் யாவும் அவள் விளையாட்டு. அவள் குழந்தையைக் கிள்ளிவிட்டு அழச் செய்கிருள். அழுத குழந்தைக்குத் தாலாட்டுப் பாடித் தூங்க வைக்கிருள். உயிர்களுக்குப் போகம் தந்து மயக்கிப் பின்பு தெளிவும் வழங்கி ஆனந்தாநுபவத்தை உண்டாக்குகிருள். அம்புயா தனத்து அம்பிகையாகிய அபிராமி செய்யும் இந்த அருள் விளையாடலைப் பாடி இன்புறுகிருர், அபிராமிபட்டர்.

பொருளே, பொருள்முடிக் கும்போக
மே, அரும் போகம் செய்யும்
மருளே, மருளில் வரும்தெரு
ளே, என் மனத்துவஞ்சத்து
இருள் ஏதும் இன்றி ஒளிவெளி
ஆகி இருக்கும் உன்றன்
அருள்ஏது? அறிகின்றிலேன், அம்பு
யாதனத்து அம்பிகையே!

[பலவகைச் செல்வமாக உள்ளவளே, அச்செல்வத்தால் நிறைவேறும் போகமே, அரிய போகங்களைத் துய்ப்பதனுல் வரும் மயக்கமே, அம்மயக்கத்தின் முடிவில் உண்டாகும் தெளிந்த ஞானமே, தாமரையாகிய இருக்கையில் எழுந்தருளிய தாயே, அடியேனது மனத்தில் மாயையிருள் சிறிதும் இல்லாமல் ஒழியச் சுடர்வீசும் பெருவெளியாக இருக்கும் நின் திருவருள் எத்தகையதென்று அடியேன் அறிய இயலவில்லை.]

இது அபிராமியந்தாதியில் வரும் 36-ஆவது பாடல்.



# அன்னை அணியும் பொருள்கள்

பொருளே என்றும், போகமே என்றும் நுட்பமாக அம்பிகையை விளித்துப் போற்றிய அன்பர். ''அம்புயா தனத்து அம்பிகையே'' என்று முன் பாட்டை முடித்தார். உடனே அப்பெருமாட்டியின் திருவுருவம் அகக்கண்முன் வந்து நின்றது. அந்தத் திருமேனியின் பேரழகிலே மனத்தை லயிக்கவிட்டுத் தியானம் செய்தார். அவளுடைய அங்கங் களுக்கு அணியாகப் புகுந்து அழகு பெறும் பொருள்களை உற்றுக் கவனித்தார்; பாடத்தொடங்குகிறார்.

அன்னையின் திருக் கரங்களில் உள்ள கரும்பு வில்லும், மலரம்புகளும் நினைவுக்கு வருகின்றன. அவை இப்போது இனிய கரும்பாக, மணக்கும் நறுமலராகக் காட்சி தருகின்றன. அவற்றை அலங்காரமாக அம்பிகை அணிந் திருக்கிறாள். மனத்தையே கரும்பு வில்லாகவும் பஞ்ச தன்மாத்திரைகளையே ஐந்து மலரம்புகளாகவும் அம்மை ஏந்தியிருப்பதாக லலிதா சகசிரநாமம் கூறுகிறது. இவற்றை, மேலே உள்ள இரு கரங்களில் அணிந்திருக்கிறாள். அங்குச பாசங்கள் எப்போதுமே ஆயுதமாக இருப்பவை. ஆனால் கரும்பும் பூவும் கையில் இருக்கும் போது அழகாக இருக் கின்றன; போர் செய்யப் புகும்போது வில்லும் அம்புமாகத் தொழிற்படுகின்றன. இப்போது அம்மை தய்யையே உருவாகக் காட்சி அளிக்கின்றாள். ஆதலின் கரும்பும் மலரும் கையில் அணிந்துள்ள அழகுப் பொருள்களாகத் திகழ்கின்றன.

கைக்கே அணிவது கன்னலும் பூவும்.

திருக்கரங்களில் உள்ளவற்றைக் கண்டு பிறகு அம்மையின் திருமேனியைக் காண்கிறார். மென்மையும்

செம்மையும் உடைய திருமேனி அது. இதற்கு உவமான மாக எதைச் சொல்வது? செங்கமலத்தைச் சொல்லலாம் என்று தோன்றுகிறது. செக்கச் சிவந்த திருமேனியை யுடைய சிவபிரான் மெய்க்கோலத்துக்குத் தாமரையை உவமை கூறினார் மாணிக்க வாசகர்.

"செந்தாமரைக் காடு அனைய மேனித் தனிச்சுடரே"

என்று பாடினார். அபிராமிபட்டருக்கு, அம்பிகையின் செய்ய திருமேனிக்கு அந்தக் கமலமே உவமையாகத் தோன்றுகிறது.

கமலம் அன்ன மெய்.

அந்தத் திருமேனியிலுள்ள திருமார்பில் வெள்ளை வெளேரென்ற முத்துமாலை ஒளிர்கிறது. "திருத்தன பாரமும் ஆரமும்" என்று ஒன்பதாவது பாட்டில் கூறி யிருப்பதைப் பார்த்தோம். கமலம் போன்ற மெய்யில் வெண் முத்துமாலையை அணிந்திருக்கிறாள் அன்னை. லலிதா சகசிரநாமத்தில் 32-ஆவது திருநாமம், 'ரத்ன க்ரைவேய சிந்தாகலோல முக்தா பலான்விதா' என்பது; அன்னை திருமார்பில் அசையும் முத்துவடம் ஒளிர்வதை அது குறிக்கிறது.

கமலம் அன்ன, மெய்க்கே அணிவது
வெண்முத்து மாலை.

கரும்பும் மலரும், முத்து மாலையும், "ஆரமும் செங்கைச் சிலையும் அம்பும்" என்று 9-ஆவது பாட்டிலும் ஒருங்கே கூறப்பட்டுள்ளன.

கையிலுள்ள கரும்பையும் மலரையும் கண்டு, மெய்யி லுள்ள வெண்முத்துமாலையையும் கண்டு பின்னும் கீழே கண்ணை ஓட்டும்போது, அன்னையின் இடையிலுள்ள பல மணிமாலைகளாலாகிய மேகலை தெரிகிறது. அரவின் படம்

போன்ற இரகசிய ஸ்தானத்தை மறைத்துக் கொண்டு அந்த மேகலையும், அதன்மேல் பட்டுடையும் ஒளிர்கின்றன.

செல்வ வளம் உள்ள மகளிர் தம் இடையிலே பல வடங்களையுடைய மேகலைகளை அணிந்திருப்பார்கள். பழங் காலத்துச் சிற்ப உருவங்களில் அவற்றைக் காணலாம். எட்டு வடங்களையுடைய மேகலைக்குக் காஞ்சி என்று பெயர்; ஏழு வடங்களை உடையது மேகலை; பதினாறு வடங்களை உடையது கலாபம்; பதினெட்டு வடங்களை யுடையது பருமம்; முப்பத்திரண்டு வடங்களாலானது விரிசிகை.

> ''எண்கோவை காஞ்சி, எழுகோவை மேகலை,
> பண்கொள் கலாபம் பதினாறு,—கண்கொள்
> பருமல் பதினெட்டு, முப்பத் திரண்டு
> விரிசிகை என்றுணரற் பாற்று''

என்பது ஒரு பழம் பாடல், அம்பிகை அளவிலே பெரியதும் பல கோவைகளையுடையதுமான விரிசிகையை அணிந்திருக்கிறாள். 'ரத்ன கிங்கிணி மேகலா' என்பது லலிதா சகசிரநாமம் (312).

அம்பிகை தன் இடையில் செம்பட்டைத் தரித்திருக்கிறாள்; அருணாருண கௌஸும்ப வஸ்த்ர பாஸ்வத் கடிதடி' என்பது அன்னை திருநாமங்களில் ஒன்று (37) அவள் கடிதடத்தின்மேல் செம்பட்டு ஒளிர்கிறதாம்.

**விட அரவின்**

**பைக்கே அணிவது பன்மணிக் கோவையும்**
**பட்டும்.**

அம்பிகை செம்பட்டு அணிந்திருப்பதை இந்த நூலில் பின்னும், ''ஒல்குசெம் பட்டுடையாளை'' (84) என்று சொல்வார்.

"சாத்துவன கோசிகமோ" (தக்கயாகப்பரணி, 117) என்பது ஒட்டக்கூத்தர் பாடல்.

"த்ரிபுரை செம்பட்டுக் கட்டு நுசுப்பிற் றிரு" என்பது திருப்புகழ்.

இந்த அலங்காரங்களை உடையவள் யார்? அபிராமி அம்மை. அவள் சிவபெருமானுடைய வாம பாகத்தில் இருந்து விளங்குகிறாள். இதைச் சொல்லும்போது, சிவபிரானை அடையாளங் காட்ட வருகிறார் ஆசிரியர். அம்மையின் பட்டுடையைச் சொல்லி முடித்தவுடன் ஐயனுடைய ஆடையே நினைவுக்கு வருகிறது. அவன் எட்டுத் திக்கையுமே ஆடையாக அணிந்திருக்கிறான் என்று சொல்கிறார். திகம்பரன் என்பது அவன் திருநாமம். அவனுடைய வாம பாகத்தைச் சேர்ந்திருப்பவள் பட்டுடை அணிந்த அபிராமி.

எட்டுத்

திக்கே அணியும் திருஉடையான் இடம் சேர்பவளே.

கையும் மெய்யும் இடையும் தரிசித்துப் பின் அர்த்த நாரீசுவரத் திருக்கோலத்தையும் தியானித்துப் பாட்டை முடிக்கிறார் பட்டர்.

கைக்கே அணிவது கன்னலும் பூவும்;
கமலம்அன்ன
மெய்க்கே அணிவது வெண்முத்து மாலை;
விடஅரவின்
பைக்கே அணிவது பன்மணிக் கோவையும்
பட்டும்; எட்டுத்
திக்கே அணியும் திருஉடை யானிடம்
சேர்பவளே.

[எட்டுத் திக்குகளையே தான் அணியும் அழகிய ஆடையாகக் கொண்ட இறைவனுடைய இடப்பாகத்தைச் சேர்ந்து எழுந்தருளியிருக்கும் அன்னை தன் கையில் அணிந்துகொண்டிருப்பவை கரும்பும் மலர்களும்; அப்பெரு மாட்டி தன் திருமேனியில் அணிந்திருப்பது தூய வெள்ளை யான முத்துமாலை; நஞ்சையுடைய பாம்பின் படம் போன்ற இரகசியத் தானத்தில் அணிபவை பலமணிக் கோவை களாலான மேகலையும் பட்டும் ஆகும்.

கைக்கே அணிவது, பைக்கே அணிவது என்னும் இரண்டிடங்களிலும் இரண்டிரண்டு பொருள்களைப் பின்னே சொல்வதனால் அணிவன என்று இருக்க வேண்டும்; அணிவது என்று ஒருமையாக இருப்பதைத் தொகுதி ஒருமை என்று கொள்ளவேண்டும். கன்னல்— கரும்பு. பை-படம். விட அரவின் பை என்றது அடை யடுத்த ஆகுபெயர்; அம்பிகையின் கடிதடத்தைக் குறித்தது. பன்மணிக்கோவை என்றது மேகலையை; இது அன்மொழித்தொகை. திரு உடை-அழகிய ஆடை. திருவை உடையான் என்று கொண்டு, எட்டுத் திக்குக் களையே ஆடையாக அணியும் செல்வச்சிறப்பை உடை யவன் என்றும் பொருள் கொள்ளலாம். செல்வர்கள் நீண்ட ஆடைகளை அணிவது வழக்கம். அளவு காணாத திசைகளையே ஆடையாக அணிவதனால் அவன் திருவுடை யானானன். சேர்பவளே: ஏகாரம் அசை, சேர்பவளே என்பதை விளியாகக் கொண்டு, ''நின் கையில் அணிவது'' என்று பொருள் கொள்வதும் ஒரு முறை.]

இது அபிராமி அந்தாதியின் 37-ஆவது பாட்டு.



# சிவபெருமான் பெற்ற தோல்வி

சிவபெருமான் போரிலே தோற்றுப்போனான். தன்னுடைய வீரப்பிரதாபத்தால் அட்ட வீரட்டம் என்ற எட்டுத் தலங்களை உலகம் போற்றக் கொண்ட மகா வீரனாகிய சிவபெருமான் தன்னோடு பொருதவருக்கு முன் நிற்கமாட்டாமல் துவண்டு குழைந்து தோல்வியுற்றான். இந்தத் தோல்வியினால் அவன் துன்பம் அடையவில்லை; அவமானமும் அடையவில்லை. இதனால் உலகம் அவனை இழித்துப் பேசவில்லை. பக்தர்களும் இதைக் குறையாக எண்ணவில்லை; இதை ஒரு புகழாகவே கொண்டார்கள்.

இந்தத் தோல்வி அவனுக்குப் போர்க்களத்தில் உண்டாகவில்லை. பகைவர்களை எதிர்க்கும்போது உண்டாக வில்லை; சோர்வுற்றபோது உண்டாகவில்லை. அவனே விரும்பி இந்தத் தோல்வியை ஏற்றுக்கொண்டான். அதனால் அவனுக்கு ஆனந்தம் உண்டாயிற்று. இன்னும் அத்தகைய தோல்வியை அடைய அண்ணல் சித்தமாக இருக்கிறான்.

அப்படி அவனைத் தோல்வியுறச் செய்தவர் யார்? அவனுடைய அந்தரங்கம் முழுவதும் உளவறிந்த ஒருவரே அவனைப் பொருது துவளச்செய்தார். அவனுடன் எப்போதும் பிரியாமல் உறவுகொண்ட அவர் இந்தத் தோல்விக்கு ஏதுவாக இருக்கிறார்.

எம்பெருமாட்டி, மகாமாதா, அபிராமிதான் அவனுக்கு அந்தத் தோல்வியை விளைவித்தாள். புறத்திலே நாலுபேர் காணும் இடத்தில் நிகழும் போரிலன்றி அகத்திலே வீட்டுக்குள்ளே நிகழும் போரில் அவன் துவண்டு அடிமை

யானுன். போர் என்ருல் அதற்குப் படைகள் வேண்டும். அம்பிகை தன்னுடைய படைத்தலைவர் இருவரை அனுப்பி அந்தப் பெருமானேடு பொரச்செய்தாள். அந்தப் படைத் தலைவருக்குத் துணையாக இருவர் சென்றனர். வெற்றி கிட்டியது.

ஆம்; அந்தப் படைத் தலைவர்கள் எம்பெருமாட்டியின் தனபாரங்களே. துணையாக நின்றவர்கள் யார்? அவை அன்னையின் செய்ய வாயும் புன்னகையும். செவ்வாயையும் புன்முறுவலையும் முன்னிட்டுக்கொண்டு துணைநகில்கள் சங்கரனைத் துவளும்படி பொருதனவாம். இப்படி அபிராமி பட்டர் பாடுகிருர்.

எட்டுத் திக்கையும் ஆடையாக அணிந்த சிவபிரானிடம் ஒன்றியிருப்பவள் என்று முன்பு சொன்னவர். இந்தப் பாட்டில் இந்த இன்பப் போரைச் சொல்கிருர்.

அன்னை அபிராமியின் செய்ய வாய் பவளம்போல இருக்கிறது. நன்ருக முற்றி விளைந்த பவளக் கொடி போல மேலும் கீழும் சிவந்த இதழ்கள் விளங்குகின்றன. அந்த வாய் எம்பெருமானுடைய உள்ளத்தில் எழுச்சியை உண்டாக்குகிறது; வேறு செயலைச் செய்ய முந்திஞல் அதிலே செல்ல விடாதபடி போராடி மயக்குகிறது. அவன் அந்தத் திருவாயையே பார்த்துக் கொண்டிருக்கிருன். அதைப் பார்க்கப் பார்க்க இறைவன் மற்றவற்றை ஒவ்வொன்ருக மறந்து வருகிருன். அந்த இதழே போதும், அவனைச் செயலிழந்து அடிமையாக்கிவிட ஆனுல் இப்போது மற்ருெரு படையும் முந்துகிறது.

இறைவன் பார்த்துக்கொண்டே இருக்கும்போது பவளக் கொடி இரண்டு ஒட்டினுற்போல இருந்த இதழ்கள் பிரிகின்றன. இடையே மெல்ல ஒரு வெண்ணிற அழகுப் பொருள் தோன்றுகிறது. அது தோன்றும்போதே அவனுடைய உள்ளத்தைக் குளிர்விக்கிறது. அந்தச் செய்ய வாயி

னிடையே தோன்றிய புன்முறுவலே, தண்ணிய புன்னகையே, அப்படிச் செய்கிறது. இனிவேறு ஒன்று வேண்டிய அவசியமே இல்லை. புன்னகையாகிய நிலவு வலைபோலப் பரந்து சங்கரனைக் கொள்ளைகொண்டு விடுகிறது. இது வரையில் வேறு ஒன்றும் செய்ய முயலாவிட்டாலும், செய்ய வேண்டிய செயலிலே எண்ணம் மட்டும் இருந்தது. இந்தப் புன்முறுவல் அதையும் போக்கிவிட்டது. அவன் அடிமையாகி விட்டான். இப்போது அவன் செயலிழந்து, உரையிழந்து, எண்ணம் இழந்து நிற்கிறான்.

அடுத்தபடி என்ன நடக்கிறது? அவன் நிலைகுலைந்து மெழுகு போலக் குழைந்து சமைந்து போகிறான். அம்பிகையின் தனபாரங்கள் அவனை அவ்வாறு பொருது துவளும்படி செய்து விடுகின்றன. முன்னணியில் சில வீரர்களை விட்டு எதிரியின் படை வலிமையைக் குறைத்துச் சமயம் பார்த்துப் பின் நின்ற படைத்தலைவர் பகைவரைச் சாய்ப்பது போல, தமக்குத் துணையாகப் பவளக் கொடிபோலப் பழுத்த செவ்வாயையும் பனிமுறுவல் அமைந்த தவளத்திரு நகையையும் கொண்டு சென்று சிவபிரான் மனத்திண்மையை மாற்றிப் பிறகு தாம் முன்னின்று அவனைத் துவளும்படி செய்து விடுகின்றன, அன்னையின் தனங்கள்.

அவை முன்பே தாம் இருந்த இடத்திலும் தம்முடைய ஆற்றலைக் காட்டிக்கொண்டிருந்தன. தம்முடைய பாரத்தினால் அம்பிகையின் இடையையே தளரச்செய்தன. தினவு தாங்காமல் உள்ளூரிலே குறும்பு செய்த படை வீரர்களுக்கு ஒரு போக்குக் காட்டினது போலே ஆயிற்று, இந்தக் காரியம். உடுக்கையைப் போன்று முன்பே மெலிந்திருக்கும் திருவிடையைச் சாய்க்கும் துணை நகில்கள், வாயையும் நகையையும் துணையாகக் கொண்டு இப்போது சங்கரனைத் துவளப் பொருது வென்றன.

பவளக் கொடியிற் பழுத்த செவ்வாயும்,
பனிமுறுவல்
தவளத் திருநகையும் துணையா எங்கள்
சங்கரனைத்
துவளப் பொருது துடிஇடை சாய்க்கும்
துணைமுலையாள்.

அம்பிகையின் வாயிதழ் பவளம்போல இருக்கிறதாம்; 'நவவித்ரும பிம்ப ஸ்ரீந்யக்காரி தசனச் சதா' (24) என்பது லலிதா சகசிரநாமம். அந்தத் திருநாமத்துக்கு, 'புதிய பவளம், கோவைப்பழம் ஆகியவற்றின் ஒளியை மழுங்கச் செய்கின்ற இதழ்களை உடையவள்' என்பது பொருள். பனிமுறுவலை யுடைய தவளத் திருநகை யென்றது, அன்னையின் பல் வரிசைகளை. அவை எப்போதும் குளிர்ச்சியான புன்னகையைப் பூத்துக்கொண்டு விளங்குகின்றன. பவளமும் முத்தும் வரிசை வரிசையாக வைத்தாற்போல் மேலே பவளம போன்ற இதழ், அதன்கீழ் முத்துப்போன்ற பல் வரிசை, அதன் கீழ் பவளம் போன்ற இதழ் அமைந்திருக்கின்றன.

அம்பிகையின் பல் வரிசையைச் சுத்தவித்தையின் மூளைகள் என்று கூறும் லலிதா சகசிரநாமம்; 'சுத்த வித்யாங்குராகார த்விஜ பங்க்தி த்வயோஜ்வலா' (25). இங்கே பவளச் செவ்வாயையும் திருநகையையும் ஒருங்கே அமைத்தது போலவே அந்த இரண்டையும் அடுத்தடுத்து வைத்து அந்தத் தோத்திரம் புகழ்கிறது. மற்றொரு திருநாமம் அன்னையின் புன்முறுவலைப் பற்றிச் சொல்கிறது. காமேசனாகிய இறைவன் அன்னையின் புன்முறுவலிலே தோன்றும் ஒளி வெள்ளத்தில் மூழ்கித் திணறலை அடைகிறானாம். 'மந்தஸ்மித ப்ரபாபூர மஜ்ஜத் காமேச மாநஸா' (28)என்பது அந்தத் திருநாமம். அம்பிகையின் புன்னகையைச் சிறப்பிக்கும் மற்றொரு திருநாமம் 'சாருஹாஸா' (242) என்பது.

அழகுப் புன்னகையை உடையவள் அவள். அதனை நூறு பாடல்களால் 'மந்தஸ்மித சதக'த்தில் பாடியிருக்கிறார் மூககவி.

காதலன் காதலியின் மொழிக்காக ஏங்கி அவள் வாயையே பார்த்துக்கொண்டிருக்க, அவள் மெல்ல முறுவல் பூக்க, அந்த முறுவலிலே உறவுக்குறிப்புத் தோன்றுவதை உணர்ந்து மகிழ்ந்து அவளை அணுகுவான். அகப்பொருள் நூல்களில் 'முறுவற்குறிப்புணர்தல்' என்று ஒரு துறை உண்டு. சிவபெருமான் அவ்வாறு முறுவற்குறிப்புணர்ந்து அணுகி அம்மையோடு ஒன்றுபடுகிறான். அவளுடைய நகில்கள் அவனைக் குழைவிக்கின்றன.

''பாகன் அகம் குழைவித்த பவித்ர பயோதரி''

என்று தக்கயாகப்பரணியும்,

''எந்தை......திருமேனி குழையக் குழைத்திட்ட
அணிமணிக் கிம்புரிக் கோடு ஆகத்ததாக''

என்று மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழும் கூறுவதை முன்பு பார்த்தோம்.

அம்பிகையுடைய நகில்கள் யாரும் வாய்வைத்து அருந்தாத சிறப்புடையவை. கருணையும் ஞானமுமே அம்மையின் தனங்களாக உள்ளன. அவற்றிலிருந்து வரும் பால் கருணையையும் ஞானத்தையும் உண்டாக்குவன.

''ஆதி நாயகன் கருணையாய் அமலமாய்ப் பரம
போத நீரதாய் இருந்ததன் கொங்கையிற் பொழிபால்''

என்று கந்தபுராணம் கூறுவது இங்கே நினைப்பதற்கு உரியது.

திரிபுரசுந்தரியாகிய காமேசுவரி காமேசுவரனோடு ஒன்றுபடுவதனால் உலகமெல்லாம் இன்பம் பெற்று

வளர்ச்சி அடைகின்றது. காமேசுவரனைத் தன்வயப்படுத்தி நிற்கும் பெண்மை யெழிலுடையவள் அன்னை. அதையே இவ்வாறு பாடினார், அபிராமிபட்டர்.

உலகத்தில் மனிதனுக்கு மனம் உள்ளவரையில் ஆசையும் இருக்கும். ஒரு பொருளின்மேல் ஆசைப்பட்டு நுகர்ந்தவன் மறுபடியும் அதற்கு ஆசைப்படமாட்டான் என்று சொல்வதற்கில்லை. மீண்டும் மீண்டும் அதனை அநுபவித்துக்கொண்டே இருக்க வேண்டும் என்று விரும்புவான். மண்ணென்றும் பொன்னென்றும் பெண்ணென்றும் ஆசை வைத்து அவற்றால் வரும் போகத்தை நுகர விரும்புகிறான். நியாயமான முறையில் போகத்தை அநுபவிப்பதில் தவறு இல்லை. அதுவே முடிந்த முடிபாக எண்ணி மற்றவற்றை எண்ணாமல் இருப்பதுதான் தவறு. இந்த உலகத்தில் நாம் போகத்தைப் பெறுகிறோம். இதை விடச் சிறந்த போகத்தைத் தேவலோகத்தில் பெறலாம். மற்ற தேவர்கள் அடையும் போகத்தைவிடப் பன்மடங்கு சிறந்தது தேவ மன்னனாகிய இந்திரன் அநுபவிக்கும் போகம். இந்திர போகந்தான் போகத்தின் தலை எல்லை. பதவி, அதிகாரம், வரம் கொடுக்கும் தகுதி, இன்பம் நுகரும் வாய்ப்பு, பலவகைச் செல்வங்களைப் பெற்றிருத்தல், யாருக்கும் அஞ்சாத நிலைமை, முப்பத்து முக்கோடி தேவர்களுக்குத் தலைவனாக நிற்கும் பெருமை, உலகத்துக்கு வேண்டியதை அருளும் ஆற்றல், தவத்தினர் செய்யும் தவத்துக்குத் தடைபோடும் விறல் இப்படிப் பலபல சிறப்புக்களையுடையவன் இந்திரன்.

அம்பிகை முத்தி தருவாள் என்பது முக்காலும் உண்மை. அவள் போகத்தையும் தருவாள். இந்த உலகத்தில் இன்புற்று வாழும் வாழ்வை அவள் தருவாள் என்பது ஒரு பெருமை அன்று; போகத்தின் தலையெல்லையாகிய இந்திரனுடைய பதவியையே வழங்குவாள். தன்னை

விரும்பும் அன்பர்கள் வேண்டுமென்ருல் அமராவதியை ஆளும் உரிமையை அருள்வாள். பத்து ரூபாய்க்கும் ஐந்து ரூபாய்க்கும் யார் யாருக்கோ சலாம் போடுகிருேமே! இந்த அவலநிலே வேண்டாம். போகமெல்லாம் ஒருங்கே தருபவள் அம்பிகை. பரமசிவனுக்கே போகம் அருளும் எம்பெருமாட்டி அவள். அவளைப் பணிந்தால் இந்திர போகத்தையே தந்து விடுவாள். "நீங்கள் யார் யாரையோ போய் பணிகிறீர்களே! அமராவதிப் பட்டணத்தை ஆளவேண்டுமா? இந்திர பதவியை அடையவேண்டுமா? எல்லாப் போகங்களிலும் உயர்ந்த போகத்தைப் பெறவேண்டுமா? அவளைப் பணியுங்கள்!" என்று அபிராமி பட்டர் உபதேசம் செய்கிருர்.

பவளக் கொடியிற் பழுத்தசெவ் வாயும்
பனிமுறுவல்
தவளத் திருநகை யும்துணை யாளங்கள்
சங்கரனைத்
துவளப் பொருது துடியிடை சாய்க்கும்
துணைமுலையாள்
அவளைப் பணிமின்கண் டீர்! அம ராவதி
ஆளுகைக்கே.

[போகத்தை விரும்பி யார் யாரையோ கும்பிடும் மக்களே, எல்லாப் போகங்களிலும் சிறந்ததாகிய இந்திர போகத்தைப் பெற்றுத் தேவராஜாவாக இருந்து அமராவதியை ஆளும்பொருட்டுப் பவளக்கொடிபோலக் கனிந்த செவ்வாயும் குளிர்ச்சியையுடைய புன்னகை தோற்றும் வெண்மையான அழகிய பற்களும் தமக்குத் துணையாக இருக்க, எங்களுக்குச் சுவாமியாகிய சங்கரனைக் குழைந்து நெகிழும்படியாக மோதி, உடுக்கை போன்ற இடையைத் தளரச் செய்யும் இரண்டு தனங்களை உடைய

வளாகிய அந்த அபிராமியை வணங்குங்கள். இதுதான் பயனுள்ள செயல் என்பதை அறிவீர்கள்.

தவளத்திருநகை-வெண்மையான அழகிய பல்வரிசை. பொருது-எதிர்த்து மோதி. துணை முலையாளாகிய அவளை கண்டீர்: அசை. அமராவதி - இந்திரனது இராசதானி நகரம்.]

இந்திரனுக்குரிய ஆட்சியையே தருவாளென்றால் மற்ற வகையான இன்பவாழ்வைத் தருவது அவளுக்கு எளிது என்ற குறிப்பும் இதனால் புலப்படுகிறது.

இது அபிராமி அந்தாதியில் 38-ஆவது பாடல்.



# என் குறைதான்

மழை அருமையாகப் பெய்யும் பகுதி அது. அங்கே மழை பெய்தது. வீட்டுக்குள் சமையல் செய்துக்கொண் டிருந்தாள் வீட்டுக்கு உடையவள். மழை பெய்வதை அறிந்து தன் மகனை அழைத்தாள். ''அந்த அறையில் அரிக்குஞ் சட்டி வைத்திருக்கிறேன். அதை முற்றத்தில் கொண்டுபோய் வை'' என்று கூறினாள். பையன் அப்படியே செய்தான். பாத் திரம் சமீபத்தில் வாங்கிய புதுப்பாத்திரம்.

மழை இரண்டு மணி சடசடவென்று பெய்தது. அது நின்றவுடன் வீட்டுப் பெண்மணி தன் மகனை அழைத்துப் பாத்திரத்தை எடுத்துவரச் சொன்னாள். அவன் கொண்டு வந்தான். அவள் மிகவும் ஆவலோடு எதிர்பார்த்திருந்தபடி அதில் நீர் நிரம்பியிருக்கவில்லை; சிறிதளவு கூட இல்லை. பாத்திரம் ஓட்டை இல்லாதது என்பது நினைவில் இருக்க வேண்டும்.

ஏன் பாத்திரத்தில் நீர் இல்லை? மழை பெய்ததில் குறைவு இல்லை; பாத்திரத்திலும் குறைபாடு இல்லை. அப்படி யானால் ஏன் அதில் நீர் இல்லை?

உண்மை இதுதான். பையன் தாய் சொன்னபடியே செய்தான். ''உள்ளே பாத்திரம் இருக்கிறது; முற்றத்தில் கொண்டுபோய் வை'' என்றாள் தாய். உள்ளே பாத்திரத் தைக் கவிழ்த்து வைத்திருந்தாள் அன்னை. பையன் அதை அப்படியே கொண்டுவந்து முற்றத்தில் கவிழ்த்தே வைத்து விட்டான். நிமிர்த்து வைத்திருந்தாலல்லவா தண்ணீர் அதில் தேங்கும்?

நாமும் நம் மனத்தை அப்படித்தான் வைத்திருக்கிறோம். உலக மாதாவாகிய அன்னை எப்போதும் அருள் மழை பெய்துகொண்டே இருக்கிறாள். உலகத்தில் பெய்யும் மழை இன்ன காலத்தில்தான் பெய்யும், இன்ன இடத்தில்தான் பெய்யும் என்ற வரையறை உண்டு. அம்பிகையின் அருள் மழை இடைவிடாது பெய்து கொண்டே இருக்கிறது. அதைப் பெறவேண்டும் என்று ஏக்கம் பிடித்து மற்றவற்றை மறந்து நிற்கும் முமுக்ஷுக்களுக்கு அவளுடைய அருள் மழை கிடைக்கும். அவர்கள் உள்ளத்தே அது தேங்கும்.

நாமோ பையன் பாத்திரத்தைக் கவிழ்த்தது போல நம்முடைய மனத்தைப் பூமியை நோக்கிக் கவிழ்த்து வைத்திருக்கிறோம். பிரபஞ்ச வாசனையே இதில் அதிகமாக ஏறியிருக்கிறது. இது மலர்ந்து மேல்நோக்கியிருக்கவில்லை. அதோமுகப் பார்வையிலே திளைத்து நிற்கிறதேயன்றி, உயர் வானவற்றை எண்ணுவதில்லை; மேலே நோக்குவதில்லை. அதன் பயன் என்ன? அம்பிகையின் அருள் வெள்ளமாகப் பெய்தாலும் ஒரு சொட்டு நமக்குப் பயன்படுவதில்லை. அதற்குப் புறங்காட்டி நிற்கிறோம். கண் இருந்தும் குருடாக இருப்பதுபோல, காது இருந்தும் செவிடாக இருப்பது போல, மனம் இருந்தும் அதைப் பயனற்றதாக்கி மேலும் மேலும் கீழான எண்ணங்களையே வளர்த்து வருகிறோம்.

"எம்பெருமாட்டி எனக்கு அருளை செய்யவில்லை" என்று பல சமயங்களில் நாம் புலம்புகிறோம்; "தாயே, உனக்குக் கண் இல்லையா?" என்று கூடக் கேட்கிறோம்.

நாமே கண் இருந்தும் மூடிக்கொண்டிருக்கிறோம்; மனமிருந்தும் மலர்ச்சி பெறாமல் இருக்கிறோம். மலரும் மலரில் தான் மணமும் தேனும் இருக்கும். மேல் நோக்கி மலர்ந்த மனத்தில்தான் ஞானமணமும் அன்புத்தேனும்

பொதுளும். கீழ்நோக்கிக் குவிந்த மொட்டாக அல்லவா நாம் நம் மனத்தை வைத்திருக்கிறோம்? இதனை மேல் நோக்கித் திருப்பி மலரச் செய்தால் அப்போது அம்பிகை யின் தண்ணருள் வெள்ளம் தேங்கச் செய்யலாம்.

ஆகவே நாம் அமைதி பெற்று இன்புறுமல் இருப் பதற்குக் காரணம் அம்மையின் குற்றம் அன்று; நம்முடைய குற்றந்தான். அவளுடைய திருக்கோலத்தைத் தரிசிக்கக் கண்ணும், திருப்புகழைக் கேட்கக் காதும், பெருமையை உணர்ந்து தியானிக்க மனமும் இருக்கின்றன. அந்தக் கருவிகள் இருந்தும் நாம் அவற்றை அந்த வழியில் பயன்படுத்துவதில்லை. எதை எதையோ பார்த்து ஆசைப் படுகிறோம். எதை எதையோ கேட்டு மயங்குகிறோம். கருவி கரணங்கள் யாவும் அன்னையின் தொண்டிலே ஈடுபடுத்துவதற்காகக் கிடைத்தவை.

''உடம்பினைப் பெற்ற பயனுவ தெல்லாம்
உடம்பினில் உத்தமனைக் காண்''

என்றபடி இந்த உடம்பை அம்பிகையின் திருக்காட்சியைப் பெறப் பயன்படுத்திக்கொள்ள வேண்டும். அதை மறந்து வீணே வாழ்நாளைக் கழித்து விடுகிறோம்.

இது யார் குறை? அன்னையின் குறையா? இல்லை. இல்லை; நம் குறைதான். இதைச் சொல்லுகிறார் அபிராமி பட்டர்.

எம்பெருமாட்டி நம்மை ஆட்கொள்ளவேண்டுமென்று கரசரணுதி அவயவங்களுடன் காட்சி தருகிறாள். அவள் நம்மைக் காப்பாற்ற வேண்டுமென்றால் அவளிடம் புகல்புக வேண்டும். இன்ன காலம், இன்ன இடம் என்ற வரையறை யின்றி எங்கே எப்போது யார் சரணுகதி அடைந்தாலும் அவரைக் காப்பாற்றுவதே தன் கடமையாக ஏற்றுக் கொண்டிருக்கிறாள் அம்பிகை. அவளுடைய திருவடியைப்

பற்றி வாழ்கிறவர்கள் அடியார்கள். அடியார்கள் அவளுடன் இருக்கும் பிள்ளேகள். அன்னேயை விட்டுவேறு ஊர்களில் வாழும் பிள்ளேகளுக்குத் துன்பம் வந்தால் அன்னேக்குத் தெரியாது; உடனே அவளுடைய உதவி கிடைக்காது. ஆனால் இளங்குழந்தை அருகில் விளேயாடிக் கொண்டிருக்கும்போது அது அழுதால் அன்னே என்ன கைவேலே இருந்தாலும் ஓடிப்போய் அதைக் கவனிப்பாள். ஆருயிர்கள் அத்தனேயும் அன்னேயின் குழந்தைகளே. ஆனால் தம் மனேவியின் மயக்கத்தில் ஆழ்ந்த பிள்ளேகளாய், வியாபாரத்தில் ஈடுபட்டவர்களாய் உள்ள பெரிய பிள்ளே களேப்போல மற்றவர்கள் இருக்கிறார்கள். பக்தர்களோ அவளே ஒரு கணமும் பிரியமாட்டாத குழந்தைகளாக இருக்கிறார்கள். காலேக் கட்டிக்கொண்டு விளேயாடும் குழந்தைகள், துன்பம் வந்தால் காலேக் கட்டிக்கொண்டு அழும் குழந்தைகள், அவர்கள்.

உலகியலில் உடம்பு வளர வளர நாம் இந்த உடம்பைப் பெற்றெடுத்த அன்னேயை விட்டு விலகுகிறோம். முதலில் அவள் கருவில் இருக்கும்போது அவள் வேறு நாம் வேறாக இருப்பதில்லே. இருவரையும் ஒருவராகவே உலகம் பார்க்கிறது. கருவுற்றிருக்கும் பெண்மணிக்கு இரண்டு டிக்கட்டோ, ஒன்றரை டிக்கட்டோ வாங்குவ தில்லேயே!

குழந்தை பிறந்து இரண்டாக வேறுபட்டாலும் தாயின் அணிமையிலே இருக்கிறது. குழந்தை மெல்லத் தவழ் கிறது: தாயின் பார்வையெல்லேக்குள் அது விளேயாடு கிறது. நாளாக நாளாகத் தாயை விட்டு விலகிப் போகிறது. சில மக்கள் மனேவி வந்தவுடன் தாயைத் திரும்பியும் பார்க்காமல் பிரிந்துபோய் விடுகிறார்கள். இது உலகியல்.

அருளியலில் இதற்கு நேர்மாறான நிகழ்ச்சி நடைபெறு கிறது. அருளன்னேயை நினேக்காமல் பிரபஞ்ச வியாபாரத்

தில் ஈடுபட்டவன் அவளை நினைத்து அன்பு செய்யத் தொடங்கும்போது மெல்ல மெல்ல அவளை அணுகுகிறான். சிந்தையிலும் பேச்சிலும் செய்கையிலும் அவளை மறவாமல் வாழ்கிறான். மெல்ல மெல்ல அவள் அடியை அடைந்து புகல் புகுகிறான். அவன் உள்ளத்தினால் இளங்குழந்தை ஆகிக்கொண்டு வருகிறான். ஞானிகள் பாலர்போல ஆவதுதானே முறை? இப்போது பக்தன் தன் அன்னையின் துணையைக்கொண்டே எல்லாவற்றையும் ஆற்றுகிறான். கண நேரமும் அவளை உள்ளத்தில் பிரியாமல் அவள் காலைச் சுற்றிக்கொண்டே வாழ்கிறான். மீண்டும் பச்சைக் குழந்தை ஆகிறான். இப்போது அவன் நடப்பதில்லை; அவனைத் தூக்கிக்கொண்டு அன்னை நடக்கிறாள். அவள் உண்பதில்லை; அம்பிகை ஊட்டுகிறாள். தனக்கெனச் செயலற்ற நிலையை அவன் அடைகிறான். ஞானப்பால் உண்ணும் குழந்தை வேறு எப்படி இருக்கும்? பிறகு அன்னைக்குள்ளே ஐக்கியமாகிவிடுகிறான்; இரண்டறக் கலந்துவிடுகிறான். உயிரும் உயிரும் கலந்து இணையும் அத்துவித ஆனந்தக் கலப்பு இது.

அன்னையின் காலைப் பிடித்துக்கொண்டு வாழும் குழந்தைக்குக் கவலை எதற்கு? அதற்கு வேண்டியவற்றை யெல்லாம் அவள் பார்த்துக்கொள்கிறாள். கைக்குழந்தைக்கு நோய்வந்தால் அந்தக் குழந்தையா டாக்டரிடம் போகிறது? தாய்தானே தூக்கிக்கொண்டு ஓடுகிறாள்?

அன்னையின் அடியைப் பற்றிக்கொண்டவர்களுக்கு இந்த இளங்குழந்தை நிலை வரும். அவளுடைய அடித் தாமரையைப் பற்றிப் புகல் அடைந்து விட்டால் அப்பால் நமக்கு ஒரு பொறுப்பும் இல்லை. அவளே தன் ஆட்சியை நடத்துவாள். அந்த அருளாட்சியில் நாம் சேர்ந்து விடுவோம். இப்படி ஆளுகைக்கு என்ன செய்ய வேண்டும்? அவள் திருவடியைப் பற்றவேண்டும். நமக்குப்

புகல் தந்து அருளாட்சியில் புகுத்துவதற்கே திருவடித் தாமரைகளை அவள் கொண்டிருக்கிறாள்.

ஆளுகைக்கு உன்றன் அடித்தாமரைகள் உண்டு.

இந்த உலகத்தில் உண்டாகும் தாபத்திரயங்களைப் போக்கி மன அமைதியோடு வாழ வைப்பாள், அபிராமி அன்னை. அவளுடைய ஆட்சியிலே துன்பம் ஏது? அவளுடைய அடிநிழலில் வாழ்வாருக்கு மாயையின் துன்பம் எள்ளளவும் அணுகாது. ஞானமயமானது அது; அருள் ஊற்றாக விளங்குவது அது. ஆதலால் அதனைப் பற்றிக்கொண்டவருக்கு அஞ்ஞானம் இல்லை; மயக்கம் இல்லை. மெய்ஞ்ஞானம் வரும்; தெளிவுண்டாகும்.

சேற்றிலே கிடந்து உழன்ற வண்டு ஒன்று சிறகு நனைந்து உடம்பெல்லலாம் சேறாகிப் பறக்கவும் நகரவும் முடியாமல் திண்டாடுகிறது. எப்படியோ முயன்று முயன்று அந்தச் சேற்றிலே முளைத்த தாமரைக்கு அருகில் வந்து விடுகிறது. அதன் தண்டிலே உராய்ந்து உடம்பிலிருந்த சேற்றைப் போக்கிக்கொள்கிறது. பிறகு மெல்ல ஏறி இலையில் ஏறித் தன் உடம்பை சுத்தம் செய்துகொள்கிறது. அங்கிருந்து மலருக்குத் தாவி அதில் தங்கத் தொடங்கு கிறது. அதன் பின்பு அதற்குக் குறை ஏது? இன்னறுந் தேனை உண்டு சிறகை உலர்த்திக்கொண்டு இன்பத்திலே திளைத்து நிற்கும் அல்லவா?

பிரபஞ்சச் சேற்றிலே உழன்று கரணங்களில் அழுக்கை ஏற்றிக் கொண்டு வாழும் மனிதன் இங்கே வாழும்போதே அன்னையின் திருவடித் தாமரையைப் பற்றிக் கொண்டானானால் அப்பால் அவனுக்குச் சேற்றால் பயம் இல்லை. இன்ப வாழ்வு அமைந்துவிடும்.

இந்த உடம்போடு வாழும்போதே அம்பிகையின் திருவடி நிழலில் இருக்கும் வலிமையால் துன்பம் இன்றி வாழும் வகை கூடும். இந்த உடம்பு பிராரப்த வசத்தால்

வந்தது. இது நீங்கும் காலம் ஒன்று உண்டல்லவா? அப்போது நம் காலக் கணக்கை வைத்திருக்கும் யமன் உடம்பினின்றும் உயிரைப் பிரித்துக்கொண்டு போக வருவானே! இங்கே எவ்வளவு இன்பமாக வாழ்ந்தாலும் இறுதியில் யம வாதனைக்கு உட்பட்டுத்தானே வேண்டும்?— இப்படி ஒரு கேள்வி எழலாம். அந்த அச்சமும் வேண்டிய தில்லை என்கிறார் அபிராமிபட்டர்.

திருக்கடவூரில் நடந்த பழைய கதை நமக்குத் தெரியும். மார்க்கண்டேயனைப் பற்றுவதற்கு யமன் வந்தான். அவன் மேல் பாசத்தையும் வீசிவிட்டான். அப்போது கால காலனாகிய இறைவன் தன் காலால் உதைத்து யமனை வீழ்த்தினான். யமனுக்கு மரணம் உண்டான தலத்தில்தான் அபிராமியம்மை எழுந்தருளியிருக்கிறாள். முன்பு பட்ட சூடு யமனுக்கு மறந்து போகுமா? ஒருகால் அவன் வந்தால் அம்பிகை என்ன செய்வாள்? அவள் தன் திருவடியைத் தூக்கி உதைக்க வேண்டிய அவசியம் இல்லை. தன் கடைக் கண்ணால் அவனை ஒரு பார்வை பார்த்தால் போதும். அவன் அலறியடித்துக் கொண்டு ஓடிவிடுவான். வாள் வீச்சுப்போலே அது அவனுடைய பலத்தையெல்லாம் குலைத்துவிடும். ஒருகால் அவன் தவறிப் பக்தனைச் சிறிது அழைத்துச் சென்றாலும் அம்பிகையின் திருக்கடைக்கண் பார்வை அவனிடத்திலிருந்து மீட்டுவிடும்.

காலனிடம் செல்லாமல் மீள்வதற்கு எம்பிராட்டியின் கடைவிழிப் பார்வை துணையாக இருக்கிறது.

அந்தகன்பால்
மீளுகைக்கு உன்றன்விழியின்
கடை உண்டு.

[யமனிடம் செல்லாமல் இன்ப நிலையை அடைவதற்கு உன்னுடைய கடைக்கண் பார்வை இருக்கிறது.]

வாழ்வில் இன்பம் பெற்று இம்மையில் நலம் பெற வேண்டுமானால் அவளுடைய திருவடித் தாமரைகள் தமக்குத் துணை செய்யும்; யமனிடம் செல்லாமல் பேரானந் தப் பெருவாழ்வாகிய அம்மைநலம் பெறவேண்டுமானால் அவளுடைய கடாக்ஷ வீக்ஷண்யம் துணை செய்யும். இம்மைக் குக் காலும் அம்மைக்குக் கடைக்கண்ணும் உதவி செய்யக் காத்திருக்கின்றன.

அப்படியானால் நாம் ஏன் உய்யவில்லை? அது நம்முடைய குறை தான்; அம்பிகையின் குறையன்று.

''தெய்வம் காட்டும்; ஊட்டாது'' என்று ஒரு பழமொழி உண்டு. தாய்க்குக் குழந்தையினிடம் அன்பு உண்டு. பள்ளிக்கூடத்துக்குப் போகும் குழந்தைக்குச் சிறு பாத்திரத் தில் உணவு வைத்துக் கொடுத்தனுப்புகிறாள். அவன் எடுத்துப் போக மறந்துவிட்டால் தானே பாத்திரத்தை எடுத்துக்கொண்டு சென்று கொடுத்து வருகிறாள். வீட்டில் விளையாடும் குழந்தைக்கு இலைபோட்டுப் பரிமாறுகிறாள்; பிசைந்து வைக்கிறாள். இளங்குழந்தைக்குத் தானே பிசைந்து வாயில் ஊட்டுகிறாள். அவளுடைய கருணை இப்படிப் பல வழியில் செயல் புரிகிறது. குழந்தைக்குச் சோறூட்டும் வரையில்தான் அந்தக் கருணை செல்லமுடியும். அதற்குமேல் போகமுடியாது. குழந்தைக்காக அவளே உணவை உண்ணமுடியாது. குழந்தையே அதை விழுங்க வேண்டும். அதுபோல அம்பிகை நமக்கு அருள் செய்யக் காத்திருக்கிறாள். நாம் அதனைப் பெற அவளை அணுக வேண்டும். ஆற்றில் நிறைய நீர் போகிறது. அதில் துளைந்து விளையாடவேண்டுமானால் ஆற்றையே நம் வீட்டுக்குத் திருப்பிவிட முடியுமா? நாமே ஆற்றுக்குச் சென்று நீராடவேண்டும்.

ஆகவே நாமும் முயற்சி செய்யவேண்டும். அம்பிகை யின் திருவடியைப் பற்றிக்கொள்ளவேண்டும். அவள்

திருமுன் நின்று அவளுடைய கருணைப்பார்வையிலே முழுக வேண்டும். அவளுடைய கடைக்கண் பார்வைக்கு இரண்டு வேறு தன்மைகள் உண்டு. அன்பர்களைப் பார்க்கும்போது அமுதமாகி நின்று வெப்பத்தைப்போக்கும். அன்பர்களுக்குத் துன்பம் செய்பவர்களைப் பார்க்கும்போது கனலாக இருக்கும். அடிபற்றிய அன்பர்களைத் தன் கடைக் கண்ணாற் பார்த்துப் பார்த்து இன்ப வாழ்வு பெறச் செய்வாள்.

அம்பிகைக்கு மீனாட்சி என்று ஒரு திருநாமம் உண்டு. அவள் திருவிழி மீனைப் போன்ற வடிவுடையதாகையால் அந்தத் திருநாமம் வந்தது; அதுமாத்திரம் அன்று; தன்மை யாலும் அது மீனை ஒத்திருப்பது. மீன் முட்டையிட்டுத் தன் கண்ணால் பார்த்த அளவில் முட்டைகளிலிருந்து குஞ்சுகள் வெளியாகும். அதுபோல் உயிர்க் கூட்டங்களைத் தன் பார்வையினால் காப்பாற்றி வாழ்வளிக்கிறவள் மீனாட்சி.

எனவே அம்பிகையின் கடைக்கண் பார்வை தன் ஆட்சியில் வந்து புகுந்து அன்பர்களுக்கு உரமும் இன்பமும் உதவும்; யமன் வரும்போது அவனை ஓட்டிவிடும். தன் குஞ்சுகளை அழைத்துத் தழுவிக் கொள்ளும்போது தாய்க் கோழி அவற்றைத் தன் சிறகுக்குள் அடக்கிக் காக்கிறது. அயற்கோழி வந்தால் அந்தச் சிறகினாலேயே புடைத்து ஓட்டுகிறது. மகாமாதாவாகிய அபிராமியின் கடைக்கண் பார்வை அன்பர்களுக்கு வாழ்வும் அந்தகனுக்கு வீழ்வும் தரும் வல்லமை உள்ளது.

ஆகவே அவள் திருவடி நிழலை அடைந்து அவள் பார்வைக்குப் பொருளாக வாழவேண்டும். அவள் திருக்கோலம் கொண்டு திருவடித் தாமரையும் திருவிழித் தாமரையும் விளங்க நிற்கிறாள். அவளால் குறையில்லை; நம்மால்தான் குறை.

மேல் இவற்றின்

மூலநைக்கு என் குறை; நின் குறையே அன்று.

இனி அம்பிகையின் பெருமையைச் சொல்ல வருகிறார். சிவபிரான் அன்று முப்புரங்களை எரித்தான். பின்னால் முறுவலால் எரித்தாலும் போருக்கு ஆயத்தம் செய்வது போல வில், அம்பு எல்லாவற்றையும் எடுத்துச் சென்றான். மேருவை வில்லாகவும் ஆதிசேஷனை நாணாகவும் வைத்துத் திருமாலையே அம்பாகத் தொடுத்தான். முப்புரங்களையும் அழிக்கலாம் என்ற தைரியம் அவனுக்கு உண்டானதற்கு காரணம் தன் சக்தியில் அவனுக்கு இருந்த நம்பிக்கை தான். அவன் பங்கில் பராசக்தியாகிய அம்பிகை இருக்கிறாள். எந்தக் காரியத்தை அவன் செய்யப் புகுந்தாலும் அவனுக்கு மனம் உவந்து துணை செய்ய அவள் நிற்கிறாள். தன் கணவன் ஒன்றைச் செய்ய முன் வந்தால் அவனுடன் இருந்து அதை நிறைவேற்ற மனமின்றி வாடியிருக்கும் மனைவியா அவள்? அவனுக்குத் துணையாக நிற்பாள்; அவன் செய்யும் காரியத்துக்கு உவகையுடன் துணை செய்வாள் என்பதை அவள் முகத்தில் உள்ள மலர்ச்சியே காட்டும். அந்த முகம் வாடாமல் வதங்காமல் பளபள வென்று ஒளிவிடும்; வாள் நுதல் அந்த மகிழ்ச்சியைத்தானே காட்டுகிறது?

முப்புரங்கள்

மாளுகைக்கு அம்பு தொடுத்த வில்லான்
பங்கில் வாள் நுதலே!

ஆம்; அம்பிகை இறைவன் பங்கில் இருக்கிறாள்; அவனுடைய திருமேனியில் ஒரு பங்கில் இருப்பது மட்டும் அன்று. அவன் எந்தக் காரியம் செய்தாலும் அவன் பங்கில் நின்று மலர்ந்து ஒளி பெற்ற நெற்றியுடன் சக்தியை வழங்கும் பத்தினி அவள். அவள் தன் பங்கில் இருக்கும் தைரியத் தினால்தான் அவன் பிறரால் செய்ய முடியாத பராக்கிரமச் யல்களையெல்லாம் செய்கிறான்.

திரிபுராந்தகனுக்கே துணை நின்று அசுரர்களை மாய்க்க வலிமையருளும் பெருமாட்டி எனக்கு வரும் துன்பத்தை நீக்கி நன்மை செய்வது பெரிய காரியம் அன்று என்று தோன்றும்படி இதனைக் கூறினார்.

ஆளுகைக்கு உன்றன் அடித்தா
மரைகள் உண்டு; அந்தகன்பால்
மீளுகைக்கு உன்றன் விழியின்
கடை உண்டு; மேல்இவற்றின்
மூளுகைக்கு என்குறை; நின்குறை
யே அன்று; முப்புரங்கள்
மாளுகைக்கு அம்பு தொடுத்தவில்
லான்பங்கில் வாள்நுதலே!

[திரிபுரங்களும் அழிவதற்காகத் திருமாலாகிய அம்பைத் தொடுத்த மேருமலையாகிய வில்லையுடைய சிவபெருமானது வாமபாகத்தில் எழுந்தருளியிருக்கும் ஒளி படர்ந்த நெற்றியை உடைய அபிராமி அம்மையே! அடியேனை ஆட்கொள்ளுவதற்கு நின் திருவடித்தாமரை மலர்கள் இருக்கின்றன; காலனிடம் செல்லாமல் மீண்டும் உய்வதற்கு உதவியாக நின் கடைக்கண் பார்வை இருக்கிறது. இவற்றோடு தொடர்பு பெற்றுக்கொள்வதற்கு முடியாமல் இருப்பது என் குறைதான்; நின் திருவருட் குறையே அன்று.

அந்தகன் - யமன். அந்தகன்பால் செல்லாமல் மீளுகைக்கு என்று விரிக்கவேண்டும். விழியின் கடை என்றது ஆகுபெயராய்க் கடைக்கண் பார்வையைக் குறித்தது. இவற்றில் மூளுகைக்கு முடியாமல் நிற்றற்குக் காரணம் என் குறை என்று கொள்ளவேண்டும். பங்கு - வாமபாகம், வாள் - ஒளி.]

அம்பிகை தன்னை அண்டுபவருக்கு அருள் செய்யக் காத்து நிற்கிறாள் என்பது கருத்து.

இது அபிராமி அந்தாதியில் 39- ஆவது பாடல்.

# முன் செய் புண்ணியம்

அன்னையின் திருவருளைப் பெறுமல் இருப்பவர்களில் இரண்டு வகையினர் உண்டு. அவள் அருளைப் பற்றிச் சிந்திக்காமல் அப்படி ஒன்று தமக்கு வேண்டும் என்ற எண்ணமே இல்லாமல் வாழ்கிறவர்கள் ஒருவகை. அவள் திருவருள் கிடைக்கவில்லையே என்று ஏங்கி வாடுபவர்கள் ஒரு வகை. எம்பெருமாட்டியின் திருவருள் கிடைக்கவில்லையே என்று ஏங்குவதும், உன் திருவருளை வழங்க வேண்டும் என்று விண்ணப்பித்துக் கொள்வதும், அதற்காக வேண்டிய முயற்சிகளைச் செய்வதும் பக்தியின் கூறுபாடுகள். தன் காதலனைக் கண்டு குலாவுவதும், காணுமல் பிரிவிஞல் வருந்துவதும் காதலின் வகைகளே. அத்தகையனவே பக்தியிஞல் உண்டாகும் உணர்ச்சிகளும்.

அம்பிகையின் திருமேனியைத் தரிசிக்கவும், அவளுடைய திருவுருவைப் பூசிக்கவும், அவளுடைய பிரபாவங்களைப் பேசவும், அவளுடைய அடியார்களுடன் கூடியிருக்கவும் நாம் பேறு பெற்ருேமே என்று எண்ணி மகிழ்வது பக்தர்களுக்கு இயல்பு; சிறந்த பக்தராகவில்லையே, அன்னையின் சுடருருவத்தை உண்முகத்தே தரிசிக்கக் கொடுத்துவைக்கவில்லையே, நம்மை மறந்து அவளுடைய தியானத்தில் ஈடுபடவில்லையே என்று குறைப்படுவதும் பக்தர்களுக்கு இயல்பே. கிடைத்ததை எண்ணி மகிழ்வது ஒரு மன நிலையாஞல், கிடைக்காததை எண்ணி ஏங்கி மருகுவது மற்ருெரு நிலை. இரண்டும் மாறி மாறிப் பக்தர்களுக்கு உண்டாவது உண்டு. தம்மினும் தாழ்ந்தவரைக் கண்டும், உலகியலில் உழல்பவரைக் கண்டும் தாம்

அவ்வாறு இல்லாமல் அன்னையை எண்ணி வாழும் வாழ்க்கையை அப்பெருமாட்டி அருளினாளே என்று பெருமிதம் அடைவது பக்தர்களுக்கு இயல்பு. தம்மினும் சிறந்த அநுபூதிமான்களைக் கண்டு, நமக்கு அந்த நிலை வாய்க்கவில்லையே என்று ஏங்குவதும் அவர்களுக்கு இயல்பே.

சென்ற பாட்டில் தம் குறையை எண்ணி வருந்திய அபிராமி பட்டர் இந்தப் பாட்டில் தமக்குக் கிடைத்த புண்ணியப் பயனை எண்ணிப் பெருமிதம் அடைகிறார்.

அவளை வணங்காமலும் பூசை செய்யாமலும் தியானிக்காமலும் புகழாமலும் இருந்தாலும், அவளிடம் பக்தி செய்ய வேண்டும், அவளுடைய திவ்ய தரிசனத்தைப் பெற வேண்டும் என்று எண்ணியிருப்பதே புண்ணியம் என்கிறார். உலகியலில் அகப்பட்டவர்களுக்கு இறைவியை நினைக்க நேரம் ஏது? தெய்வம் என்பதோர் சித்தம் உண்டாவதற்கு எத்தனையோ தடைகளை நீங்கி, வரவேண்டும் என்று மணிவாசகர் அடுக்குகிறார். நமக்கெல்லாம் தாயாக ஒருத்தி இருக்கிறாள், அவள் திருவருளைப் பெறுவதே நம் லட்சியம் என்பதை உள்ளத்தால் உணர்வது எளிய காரியம் அன்று. வாயினால் சொல்லிக்கொண்டிருக்கலாம். ஆனால் உள்ளமோ உலகியல் இன்பத்தில் ஆழ்ந்து அதையே பெரிதாகப் பாவித்து அதனூடே துளைவதையே விரும்பி நிற்கும். பிறருக்குப் போதிக்கத் தெரிந்த பலர் தம்மளவில் அதைச் செய்வதில்லை. ஆகவே உள்ளுணர்விலே தாகம் உண்டாகி அன்னையின் அருளைப் பெற வேண்டும் என்ற ஏக்கம் உண்டாவதே பெரிது. முக்தியை விரும்பும் இச்சையாகிய முமுக்ஷுத்துவமே அதுதான். அந்த நிலை வரவேண்டுமானால் முற்பிறவியில் புண்ணியம் பண்ணியிருக்கவேண்டும்.

"தவமும் தவமுடையார்க் காகும், அவமதனை
அஃதிலார் மேற்கொள் வது"

என்பது குறள். முன்னைத் தவம் இருந்தாலன்றி இப்போது தவம் செய்யும் ஆசை பிறவாது. ஆதலின் அம்பிகையைத் தரிசிக்க வேண்டும் என்ற ஆவல் உள்ளத்தே ஒருவருக்கு எழுமானால் அது முன் செய்த புண்ணியத்தின் பயனென்றே சொல்லவேண்டும். 'வலஞ்சுழி வாணனை வாயாரப், பன்னி ஆதரித்து ஏத்தியும் பாடியும் வழிபடும் அதனாலே, என்ன புண்ணியஞ் செய்தனை நெஞ்சமே?' என்று கேட்கிறார் திருஞானசம்பந்தர். அபிராமிபட்டர், 'அன்னையைக் காணவேண்டும்; அதற்குரிய அன்பைப் பூணவேண்டும்' என்று எண்ணும் எண்ணமே புண்ணியப் பயன் என்று சொல்கிறார்.

கன்னியைக் காணும் அன்பு
பூணுதற்கு எண்ணிய எண்ணம் அன்றோ முன்செய்
புண்ணியமே?

மனம் அன்பு பூணுதற்கு எண்ணுகிறது; அன்னையைத் தரிசிப்பதற்கு ஏற்ற வகையில் அன்பு பூணவேண்டும் என்று எண்ணுகிறது. அந்த எண்ணம் முற் பிறவியிலே செய்த நற்செயல்களின் பயனாகிய புண்ணியத்தின் விளைவாம்.

முதலில் எண்ண வேண்டும்; அதன்பின் அன்பு பூண வேண்டும்; அதன் பயனாகக் கன்னியைக் காணவேண்டும். எல்லாவற்றிற்கும் மூலம் மனத்தினால் எண்ணுதல். எந்தக் காரியம் செய்தாலும் மனத்தினால் விரும்பிச் செய்யா விட்டால் அது பயன்தராது.

"மனத்துக்கண் மாசில னாதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற"

என்பது எல்லாக் கடமைகளுக்கும் பொதுவான விதி. அம்மையை வழிபடுவதற்கு முதல் நியதி நம் உள்ளத்தில் அதற்குரிய எண்ணம் தோன்ற வேண்டும். இந்தப் பிறவியில் அந்த எண்ணம் தோன்றுவதற்கு முற்பிறவியிலே புண்ணியம் செய்திருக்கவேண்டும். சென்ற ஆண்டு அவரைக்கொடி போட்டு நெற்றெடுத்து வைத்திருந்தால் இந்த ஆண்டில் விதையை நடலாம்; அதைப் பந்தலில் படரச் செய்யலாம்; பிறகு காயைப் பறிக்கலாம். அவ்வண்ணமே போன பிறப்பில் புண்ணியச் செயல் புரிந்திருந்தால் இந்தப் பிறப்பில் எண்ணலாம்; எண்ணி அன்பு பூணலாம்; அதன்பின் அம்பிகையைக் காணலாம். வித்து முற்பிறவியிலே எடுப்பது; விளைவு இந்தப் பிறவியிலே.

'அன்பு பூணுதற்கு எண்ணிய எண்ணம்' என்கிறார். மனம் இப்போது எத்தனையோ சுமைகளைச் சுமந்து கொண்டிருக்கிறது. பைத்தியம் பிடித்தவன் ஓட்டை உடைசல்களைச் சுமந்து கொண்டிருப்பதைப் போல, உலகப் பித்து பிடித்த மனம் வேண்டாதவற்றையெல்லாம் சுமந்து கொண்டிருக்கிறது. அழகற்று அழுக்குற்று நிற்கிறது. இது தூயதாகி அணியும் பூண வேண்டும். தம்மை அலங்கரித்துக் கொள்ளும் மகளிர் நீராடித் தூய உடை உடுத்து நல்ல அணிகலன்களை அணிந்து கொண்டால் பார்க்க அழகாக இருக்கும். மனமும் பிரபஞ்சப்பற்று என்னும் அழுக்கைப் போக்கி நல்ல எண்ணத்தை உடுத்து அன்பைப் பூணவேண்டும். அன்பையன்றி உள்ளத்துக்கு வேறு அணிகலன் இல்லை. ஆதலின் 'அன்பு பூணுதற்கு' என்கிறார். தேவியைக் காண அன்பு பூணவேண்டும் என்கிறார். அந்தத் தேவியை வருணிக்கிறார்.

தேவி மூன்று கண்களை உடையவள். சந்திரன், சூரியன், அக்கினி என்னும் முச்சுடர்களும் அவள் திருவிழிகளாக இருக்கின்றன. அம்பிகை கண் விழித்தால்தான்

உலகம் ஒளி பெறும். அவள் இமையாத முக்கண்ணுடைய வளாதலின் உலகம் ஏதேனும் ஒரு சுடரையாவது எப்போதும் பெற்றிருக்கிறது.

நெற்றியிலே அக்கினிக்கண் இருக்கிறது. அது ஞானக் கண். சிவபெருமானுக்கு எப்படி ஞான நேத்திரம் உண்டோ அவ்வாறே எம்பெருமாட்டிக்கும் உண்டு; "ஒன்றோடிரண்டு நயனங்களே", "முக்கண்ணியை" (73, 101) என்று பின்னே பாடுவார் இவ்வந்தாதியின் ஆசிரியர். த்ரிநயனா, த்ரிலோசனா, த்ரியம்பகா என்ற திருநாமங்கள் அம்பிகை நெற்றிக்கண்ணோடு சேர்ந்த மூன்று திருவிழிகளை உடையாள் என்பதை உணர்த்துகின்றன. ஒளிபொருந்திய நெற்றியின் நடுவிலே கண்ணை உடையவள் அபிராமி.

வாள்நுதற் கண்ணியை

அம்பிகை தேவர்களுக்கு எத்தனையோ உபகாரங்களைச் செய்திருக்கிறாள். பண்டாசுரன், மகிஷாசுரன் முதலிய அவுணர்களை அழித்து அவர்களுக்கு அருளியிருக்கிறாள். தேவர்களுக்கு நலம் தரும் செயல்களைச் செய்வதில் ஊக்கமுடையவள் அன்னையென்பதை 'தேவகார்ய ஸமுத்யதா' என்ற அவள் திருநாமம் புலப்படுத்தும். ஆதலின் தேவர்கள் எப்போதும் அம்பிகையை வழிபடும் எண்ணத்தோடு இருக்கிறார்கள். முன்பு அவளால் அடைந்த நலன்களை மனத்தில் இருத்தி இனியும் அத்தகைய இடையூறுகள் வந்தால் போக்கிக் காப்பாற்றுதற்கு அவளையன்றி வேறு துணை இல்லை என்பதையும் உணர்ந்து, தேவர்கள் அவளை அணுகுகிறார்கள்; வணங்குகிறார்கள்; தம் அன்பு புலப்பட வழிபாடு செய்கிறார்கள். தேவராஜனாகிய இந்திரன் முதல் எல்லாத் தேவர்களும் அம்பிகையின் அடியார்களாக நின்று வழிபடுகிறார்கள்.

விண்ணவர் யாவரும் வந்து இறைஞ்சிப்
பேணுதற்கு எண்ணிய எம்பெருமாட்டியை,

'எங்களுக்குத் தெய்வமாகிய பிராட்டி தேவர் வணங்கும் பெரியவள்' என்று சொல்லிப் பெருமைப்படுகிருர் பட்டர்.

தேவர்கள் பேணும் பிராட்டியாகவும், எம்பெருமாட்டி, யாகவும் இருப்பதைக் கொண்டு அவள் எல்லோருக்கும் எளியள் என்று சொல்லலாமா? இல்லை இல்லை. ''புறத்தார்க்குச் சேயோன்றன் பூங்கழல்கள் வெல்க'' என்று பாடுவார் மணிவாசகர். அறியாமை இருள் படர்ந்து நெஞ்சில் அன்பில்லாமல் இருப்பவர்களுக்கு அன்னை எளியாள் அல்லள். அந்த நெஞ்சில் அவளைக் காண இயலாது. ''அகந்தைக் கிழங்கை அகழ்ந்தெடுக்கும் தொழும்பர் உளக் கோயிற்கு ஏற்றும் விளக்கு'' அவள். பேதமையிருள் படர்ந்த பேய் மனத்தில் அவளைக் காண ஒண்ணுது. அதற்கும் அவளுக்கும் நெடுந்தூரம்.

பேதை நெஞ்சில்
காணுதற்கு அண்ணியள் அல்லாத கன்னியை.

காணுதற்கு நெருங்கியவளல்லாத கன்னியென்றது, நெடுந்தூரத்தில் இருப்பவள் என்பதையே வேறு வகையிலே சொன்னபடி. உலகமெல்லாம் ஈன்றும் இன்னும் அவள் கன்னியாகவே, புதுமைப் பொலிவு மாருமலே இருக்கிருள்.

'தேவர்களுக்கும் பக்தர்களுக்கும் உரிய பிராட்டியை அறியாமையை உடையவர்கள் அணுகவொண்ணுமல் சேய்மையில் நிற்கும் கன்னியை, காணவேண்டும் அதற்குரிய அன்பு பூணவேண்டும் என்று எண்ணிய எண்ணம் புண்ணியத்தின் பயனுல் தோன்றுவது; அந்தப் புண்ணியம் நமக்கு இருக்கிறது' என்று பெருமிதம் அடைகிருர்.

வாணுதல் கண்ணியை விண்ணவர்
யாவரும் வந்துஇறைஞ்சிப்

பேணுதற்கு எண்ணிய எம்பெரு
மாட்டியைப் பேதைநெஞ்சில்
காணுதற்கு அண்ணியள் அல்லாத
கன்னியைக் காணும்அன்பு
பூணுதற்கு எண்ணிய எண்ணம்அன்
றோமுன்செய் புண்ணியமே?

*[ஒளி பொருந்திய நெற்றியில் ஞானத் திருவிழியுடையவளை, தேவர்கள் எல்லோரும் தேடிவந்து பணிந்து விரும்பி வழிபடுவதற்கு எண்ணிய எம்முடைய தலைவியை, அறியாமையையுடைய மனத்தில் காணுவதற்கு நெருங்கியவள் அல்லாத கன்னியை, தரிசிக்கும் அன்பு அடைவதற்கு எண்ணிய எண்ணம், முற்பிறவியில் நாம் செய்த புண்ணியச் செயலின் பயனன்றோ?*

*வாள் - ஒளி. பேணுதல் - விரும்பி வழிபடுதல். பேதையாகிய நெஞ்சில் என்றும் கூறலாம். புண்ணியம் : காரியத்தைக் காரணமாக உபசரித்தது.]*

*முன் செய்த புண்ணியம் இருந்தால்தான் இறைவியின்பால் பக்தி உண்டாகும் என்பது கருத்து.*

*அபிராமி அந்தாதியில் 40- ஆவது பாடல் இது.*



# அடியார் உறவு

மனிதனைச் சமுதாய விலங்கு (Social animal) என்று சொல்வார்கள். தனி மனிதனாக வாழ அஞ்சுபவன் மனிதன். கூட்டம் கூட்டமாக இணைந்து வாழும் இயல்புடையவன். வீடு சிறு கூட்டம். வீதி அதைவிடப் பெரிய கூட்டம். ஊர், நாடு, உலகம் என்று அது அளவில் விரிந்து கொண்டே செல்கிறது.

கூடிக் கூடி வாழும் மனிதனுக்கு அந்தக் கூட்டத்தின் பொதுவான இயல்புகள் அவனை அறியாமலே வந்து படிந்து விடுகின்றன. ஒரு குடும்பத்தினர்களுக்குள் பொதுவான சில பழக்க வழக்கம் இருக்கும்; ஓர் ஊரினருக்குச் சில சிறப்பான இயல்புகள் இருக்கும். ஒரு பிரதேசத்தினருடைய பழக்க வழக்கங்களில் சில சிறப்பான அமைதிகள் இருக்கும். நடை, உடை, பாவனை, பேச்சு இவற்றில் இந்தச் சிறப்பியல்பைக் காணலாம்.

இவ்வாறு சமுதாயத்தில் வளரும் மனிதன் ஒரு குழுவை விட்டு மற்றொரு குழுவைச் சாரும்போது புதிதாகச் சேர்ந்த குழுவின் இயல்பு மெல்ல மெல்ல அவனிடம் சாரும். நெருக்கமாகப் பல காலம் சார்ந்தால் அந்த இயல்புகள் தாமே அவனிடம் புகுந்து நிலைகொள்ளும்.

> ''நிலத்தியல்பால் நீர்திரிந் தற்றாகும் மாந்தர்க்
> கினத்தியல்ப தாகும் அறிவு''

என்று திருவள்ளுவர் கூறுவார். தனக்கென்று நிறமும் மணமும் சுவையும் இல்லாத நீர் தான் சாரும் நிலத்தின் தன்மையால் அதற்குரிய நிறம் முதலியவற்றை ஏற்றுக் கொள்ளும். அவ்வாறே மக்கள் தாம் சாரும் இனத்தின்

இயல்புகளை அடைவார்கள். ஒரு குறிப்பிட்ட பழக்கம் மேற்கொள்வதற்கு அரியதுபோலத் தோன்றலாம். ஆனால் அந்தப் பழக்கத்தை உடையவர்களிடையே நெருங்கிப் பழகினால் அது எளிதில் வந்துவிடும்.

விடியற்காலையில் எழுவதற்குச் சோம்புகிறான் ஒருவன். அவன் தன் வீட்டில் இருக்கும்போது காலையில் எட்டு மணிக்குத்தான் எழுவான். அந்த வீட்டிலுள்ள யாவருமே நேரம் கழித்து எழுபவர்கள். அவன் என்னதான் விடியற் காலையில் எழவேண்டுமென்று விரும்பினாலும் சூழ்நிலை அவனுக்கு எதிராக இருப்பதனால் அவனால் எழமுடியாது. அசாதாரணமான மனோபலம் உடையவனாக இருந்தால் தான் சூழ்நிலைக்கு எதிர் நின்று வெல்லமுடியும்.

அவன் வேறு ஓர் ஊருக்குப்போய் வாழத் தலைப்படு கிறான். ஒரு குழுவோடு வாழும்படி நேர்கிறது. பத்துப் பதினைந்து பேர் வாழும் ஓரிடத்தில் அவன் தங்கியிருக்கிறான். அத்தனை பேரும் விடியற்காலையில் எழுந்து நீராடி ஜபம் செய்து பிறகு பஜனை செய்கிறார்கள். எல்லாம் ஏழுமணிக் குள் முடிந்து விடுகின்றன.

முதலில் தன்னுடைய தூக்கத்துக்கு இவைகளெல்லாம் தடையாக இருக்கின்றன என்று எண்ணி அவன் முணு முணுப்பான். மிகவும் ஆழமான உறக்கத்தில் அவன் விடியற்காலத்தில் இன்பம் காணுகிறவன். சில நாட்களில்; எல்லாரும் விழித்துக்கொண்டு தம் தம் வேலையைப் பார்க்கும்போது, நாம் மட்டும் படுக்கையை விரித்துப் படுத்துக் கிடப்பது நாகரிகம் அன்று என்று தோன்றும். எங்கேயாவது மூலையில் சென்று படுப்பான். அங்கும் தூக்கம் வராது. எழுந்து உட்கார்ந்து கொள்வான். பிறகு பல் தேய்த்துக் கொண்டுவந்து படுக்கையில் அமர்வான். இப்படியே அவனுள்ளே அங்கிருக்கும் சூழ்நிலை புகுந்து வேலை செய்யத் தொடங்கும். கடைசியில் அவனும்

மற்றவர்களைப்போல் விடியற்காலையில் எழுவதும், நீராடுவதும், ஜபம் செய்வதும், பஜனை செய்வதுமாகியவற்றைச் செய்வான். அவற்றைச் செய்வதில் அவனுக்குச் சிறிதும் சிரமமே இராது. அவற்றைச் செய்யாமல் இருந்தால்தான் மிகவும் தொல்லையாக இருக்கும். காற்று வீசும் போக்கிலே இலேசான பொருள் பறப்பது போலவும், நீரோட்டத்தினூடே கட்டை மிதத்து செல்வது போலவும் அவனுடைய போக்கு மாறிவிடும்.

இது சூழ்நிலையினால் உண்டாகும் மாற்றம்; இனத்தினால் ஏற்படும் இயக்கம்.

இறைவியினிடம் நமக்கு அன்பு உண்டாகவேண்டும்; அன்னையின் திருநாமத்தை அடிக்கடி கூறவேண்டும்; அப்பெருமாட்டியின் புகழைச் சொல்லவேண்டும்; அவளைப் பணிந்து வணங்கவேண்டும்; தியானிக்கவேண்டும். இப்படிச் செய்தால் நன்மை உண்டு. இது அநேகமாக யாவருக்குமே தெரிந்ததுதான். ஆனால் இவ்வாறு செய்வது என்பதுதான் அரிதாக இருக்கிறது. மனிதனுக்கு அறிவு இருப்பதனால், இவ்வாறு செய்தல் நல்லது என்று தெரிகிறது. இவ்வாறு செய்கிறவர்களைப் போற்றி வாழ்த்தவும் தயாராக இருக்கிறான். ஆனால் தான் அப்படிச் செய்ய முனைவதென்பதுதான் எளிதாக இல்லை.

அப்போது அவன் என்ன செய்யவேண்டும்? அந்த நல்ல செயல்களைச் செய்பவர்கள் சங்கத்தில் சேர்ந்து கொண்டால், அவன் எதை நல்லதென்று இதுவரையில் நினைத்து வந்தானோ அதைச் செய்கையிலும் காட்ட முற்படுவான். சங்கம் அல்லது சார்பினால் உண்டாகும் நன்மை இது. அதனால்தான் பெரியவர்கள் நல்லோர் இணக்கம் வேண்டும் என்று அடிக்கடி சொல்கிறார்கள். "சான்றோர் இனத்திரு" என்று ஔவைப்பாட்டி போதித்தாள்.

பெருங்கூட்டத்தில் அகப்பட்டுக்கொண்டவன், தானாக நடக்க முயலாவிட்டாலும் அந்தக் கூட்டமே அவனைத் தள்ளிக்கொண்டு போய்விடும். இது எப்படி உடம்பைப் பொறுத்தவரையில் உண்மையோ, அப்படியே நல்ல எண்ணங்களை உடையவர்களின் கூட்டத்தில் சார்ந்தால் நம் மனத்தில் நல்ல எண்ணங்கள் தோன்றும்.

அடியார்களின் நடுவில் இருந்து நலம் பெறுவது எல்லாருக்கும் கிடைக்கும் பேறு அன்று. அதற்குப் புண்ணியம் செய்திருக்க வேண்டும். இறைவன் திருவருளால் சத்சங்கத்தில் சேரும் வாய்ப்புக் கிடைக்கும். 'அன்பர்களுடன் கூடி அவர்களுக்குப் பணி செய்யும் பாக்கியம் எனக்குக் கிடைத்துவிட்டால் போதும். நான் மோட்சத்தைத் தேடிக் கொண்டு போகவேண்டிய அவசியம் இல்லை. அதுவே என்னைத் தேடிக்கொண்டு வந்துவிடும்' என்று தாயுமானவர் பாடுகிறார்.

> "அன்பர்பணி செய்யஎனை ஆளாக்கி விட்டுவிட்டால்
> இன்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே!"

மாணிக்கவாசகரும் இப்படிச் சொல்கிறார். 'உன்னிடையே அம்பிகை இருக்கிறாள். அவளூடே நீ இருக்கிறாய். நீங்கள் இருவரும் என் உள்ளத்தே எழுந்தருள வேண்டும். நான் தனியாக இருந்தால் அந்தப் பேறு எனக்குக் கிடைக்காது. நான் அடியார்கள் நடுவுள் இருந்தால் நீங்கள் என்னுள் இருப்பீர்கள். ஆகவே அடியேன் உன் அடியார் நடுவில் இருக்கின்ற அருளை வழங்கவேண்டும்' என்று இறைவனை வேண்டுகிறார்.

> "உடையாள் உன்றன் நடுஇருக்கும்;
> உடையாள் நடுவுள் நீ இருத்தி;
> அடியேன் நடுவுள் இருவீரும்
> இருப்பதானால், அடியேன் உன்

அடியார் நடுவுள் இருக்கும்அரு
 ளைப்புரி யாய்பொன் னம்பலத்தெம்
முடியா முதலே, என்கருத்து
 முடியும் வண்ணம் முன்னின்றே.''

இவற்றையெல்லாம் நன்கு அறிந்தவர் அபிராமி பட்டர். அவர் முன் பிறவியில் செய்த புண்ணியத்தின் பயனாக அம்பிகையை உபாசிக்கும் பேறு கிடைத்ததை முன் பாட்டில் சொன்னார். அந்தப் புண்ணியம் எப்படிப் பலித்தது என்பதை இப்போது எண்ணிப் பார்க்கிறார். குழந்தைக்கு நலம் செய்யவேண்டுமென்று எண்ணிய தாய் தந்தையர் இருவரும் ஒருங்கே வந்து அருள்வதுபோல அம்பிகையின் திருவருள் விளைந்ததாம்.

தம் அருளை வழங்குவதற்கு முன் அன்னையும் அப்பனும் தம் பக்தனுக்கு அடியார்களின் நடுவில் இருக்கும் நிலையை உண்டாக்குகிறார்கள்; தண்ணீரைத் தேக்குவதற்கு முன் வரப்புகளை அமைப்பது போலச் சத்சங்கத்தில் கூடி நிற்கப் பண்ணுகிறார்கள். முன்னே அன்புமட்டும் இருந்தது. இப் போது அதற்குரிய செயல்கள் நிரம்பின. சிறிதளவு உள்ள குற்றமும் போய்விட்டது, 'இவனுக்கு நாம் தரும் செல்வம் அருமையானது. அதை இவன் தனியே இருக்கையில் கொடுத்தால் அது திருட்டுப் போனாலும் போகலாம். ஆதலால் பாதுகாப்பான இடத்தில் இவனை வைத்துப் பிறகு அந்தச் செல்வத்தை அளிக்கலாம்' என்று எண்ணுவாரைப் போல அன்னையும் அப்பனும் செய்கிறார்கள்.

அன்பனுடைய மனத்துக்குக் கோசரமாகும்படி அழகிய திருவுருவம் அவ்விருவரும் கொண்டு வருகிறார்கள். பொறி களுக்கு எட்டாமல், மனத்துக்கும் வாக்குக்கும் தட்டுப்படா மல் நிற்கும் பரம இரகசியப்பொருள், கருணையினால் அன்பன் இருக்கிற இடத்துக்கு வருகிறது, அன்னையாகவும்

அவளுக்குத் துணையாக வரும் கணவராகவும் வடிவெடுத்து வருகிறது. அவன் மனதில் தியானப்பொருளாக எழுந்தருளு கிறது. அப்போது அன்னையின் கண்ணில் அருள் கொப்புளிக் கிறது. அப்போதுதான் அலர்ந்த நீலோற்பல மலரைப்போல அது விளங்குகிறது. அன்னையின் அருகில் உள்ள அப்பன் செம்மை நிறத்தோடு கண்ணைக் கவரும் அழகனாக எழுந் தருளுகிறான். இவ்வாறெல்லாம் கோலம் பூண்டு வருவது, அன்பர்கள் தியானம் செய்வதற்குரிய வடிவு கொள்ளவேண் டும் என்பதற்காக. அடியார்களுக்காக, அவர்கள் காரண மாகவே, அவர்கள் மயாமயமான இந்தப் பிரபஞ்சத்தில் இறங்கி மனதில் புகுகிறார்கள்.

புதுப் பூங்குவளைக்
கண்ணியும் செய்ய கணவரும்
கூடி நம் காரணத்தால்
நண்ணி இங்கே வந்து.

இவ்வாறு வந்தவர்கள் தம் அன்பன் தலைமேல் தம் பத்ம பாதத்தைப் பதித்து இன்பம் தர விரும்புகிறார்கள்; ஆனந்த அநுபூதியை வழங்கத் திருவுள்ளம் கொள்கிறார்கள். ஆனால் அதற்கு ஏற்ற பக்குவம் அவனுக்கு வேண்டுமே! அதற்காக அந்த நிலையைப் பாதுகாக்க வேண்டுமே! அதற்காக அவனை ஒரு கோட்டைக்குள் கொண்டுபோய் வைத்துப் பிறகு அந்தச் சிறப்பைத் தந்தால் பறிபோகாமல் காக்க முடியும்.

இதனை எண்ணி அடியார்களின் கூட்டமாகிய கோட் டைக்கு நடுவே அன்பனை இருக்கும்படி பண்ணுகிறார்களாம். அதாவது சத்சங்கமே இறைவியின் திருவருளால்தான் ஏற் படுகிறதாம். ஒரு பொருளை ஒருவருக்கு வழங்குபவர்கள், அதை வாங்கிக்கொள்கிறவர் நன்றாக அநுபவிக்கத்தக்க வகையையெல்லாம் செய்வது சிறப்பு.

ஆதலால் அன்னையும் அப்பனும் உரிய பாதுகாப்பான இடம் இதுவென்று அவனை அடியார்கள் நடுவில் இருக்கப் பண்ணி, அப்பால் அவன் தலைமேல் தம் பத்மபாதத்தைப் பதிக்கிறார்கள்.

இறைவன் திருவருளால் நல்லோர் இணக்கம் அமைந்து, அந்தச் சார்பினால் இறைவன் திருவருட்பதிவும் அதனால் ஆனந்த அநுபவமும் ஒருவனுக்கு உண்டாக வேண்டும். இதையே அழகாக அபிராமிபட்டர் சொல்கிறார்.

"குவளைக்கண்ணியும் அவளுடைய செய்ய கணவரும் ஒருங்கே நம்பொருட்டால் இங்கே வடிவுகொண்டு எழுந்தருளினார்கள். நம்மை அடியார்கள் நடுவிருக்கப் பண்ணினார்கள். பிறகு தம் பத்மபாதத்தை நம் சென்னியின்மேல் பதித்தார்கள். இதற்கு எத்தனை புண்ணியம் செய்திருக்க வேண்டும்! என் நெஞ்சமே, நாம் அந்தப் புண்ணியத்தைச் செய்திருக்கிறோம்". என்று பெருமைப்படுகிறார்.

புண்ணியம் செய்தன மே,மன
மே,புதுப் பூங்குவளைக்
கண்ணியும் செய்ய கணவரும்
கூடி,நம் காரணத்தால்
நண்ணிஇங் கேவந்து தம்அடி
யார்கள் நடுஇருக்கப்
பண்ணிநம் சென்னியின் மேற்பத்ம
பாதம் பதித்திடவே.

[மனமே, அப்போது மலர்ந்த புதிய குவளைப் பூவைப் போன்ற திருக்கண்களையுடைய அபிராமியன்னையும், அவ்வன்னையின் செம்மை வண்ணமுடைய கணவராகிய சிவபிரானும் சேர்ந்து, நம்மை ஆட்கொள்ளவேண்டும் என்ற காரணத்தினால், நாம் இருக்கும் பிரபஞ்சத்தை

அடைந்து இங்கே வந்து நம்மைத் தம்முடைய அடியார் களிடையே இருக்கும்படி செய்து, நம் தலைமேலே தம் திருவடித் தாமரைகளைப் பதிப்பதற்குத் தக்கபடி நல்ல புண்ணியச் செயல்களை முன்பே செய்திருக்கிறோம். என்ன வியப்பு!

குவளை - நீலோற்பலம்; ''குவளைக் கண்ணி கூறன் காண்க'' (திருவாசகம்). செய்ய கணவர்: ''பவளம் போல் மேனியில்'' (தேவாரம்); ''சிவனெனு நாமம் தனக்கே உடையசெம் மேனிஎம்மான்'' (தேவாரம்). நம் காரணத் தால்-நம் பொருட்டாக. மனத்தையும் உளப்படுத்திக் கூறுவதனால் பன்மையாகச் சொன்னார்; முன்னிலையையும் உளப்படுத்திய உளப்பாட்டுப்பன்மை.]

அன்னையையும் அப்பனையும் தியானிக்கும் அநுபவம் உடையராதலின், அந்த இரகசியத்தை அறிந்த மனத்துடன் உரையாடுகிறார்.

அடியார்களுடன் ஒன்றும் கூட்டுறவு இறைவன் திருவருளால் அமைவது என்றும், அதன் பயனாக இறைவ னுடைய அருளநுபவம் கைவரும் என்றும் இப்பாட்டால் அறியலாம். இறைவன் திருவருள் ஏதுவாக நின்று சத்சங் கத்தைக் கூட்டுவிக்கும். சத்சங்கம் ஏதுவாக நின்று அநுபூதியைக் கூட்டுவிக்கும்.

இது, அபிராமி அந்தாதியில் 41-ஆம் பாட்டு.



# நடம் கொண்ட நாயகி

கடவுளைத் துதித்து வழிபடும் அன்பர்கள் அவருடைய திருவுருவத் தியானத்தை இடைவிடாது செய்வார்கள். பல காலம் தியானம் செய்வதனுல் அவர்களுடைய நெஞ்சமே எம்பெருமானைப் பிரதிஷ்டை பண்ணிய திருக் கோயிலாகிவிடும். தம்மை மறந்து அந்தத் தியானத்தில் ஈடு பட்டு இன்புறுவார்கள்.

அபிராமிபட்டர் அம்பிகையின் திருமேனி லாவண்யத் தைப் பலபடியாகப் பாராட்டிப் போற்றிப் பணிபவர். மகா மாதாவின் அங்கங்களைத் தனித்தனியே தரிசித்து, அவற்றின் தத்துவங்களில் ஈடுபடுகிறவர். தெய்விகத் திருவுருவத்தை நினைக்கும்போது உலகத்தில் உள்ள பாஞ்சபௌதிக சரீரங்களை எண்ணுவதுபோல எண்ணக் கூடாது. தெய்விக உணர்ச்சியுடன் தியானத்தில் புகும்போது நம்முடைய எண்ணமே இல்லாமல் போய்விடும். தாயாகிய பிராட்டி சர்வாங்க சுந்தரியாக நிற்கும்போது சமுத்திரத்தில் கரைந்த மண்ணுங்கட்டியைப்போல நம்முடைய மனம் கரைந்து விடும். அந்த நிலையில் உலகியல் கடந்த ஆனந்த அநுப் வத்தைத் தவிர, வேறு எந்த விதமான உணர்ச்சியும் இராது.

இளம் பருவத்தில் தளர்நடை போட்டு நடக்கும் தன் பெண் குழந்தையைத் தகப்பன் பார்க்கிருன். குழந்தை ஆடையின்றிப் பேரழகுடன் பிறந்த திருமேனியோடு நிற் கிறது. அந்தக் குழந்தையைக் கண்ட தகப்பனின் கண்களில் மாசுடைய பார்வை இராது. ஆடை அணியாத பெண்ணைப் பார்க்கிறேம் என்ற எண்ணமே இராது. இது

காட்சிக்குரிய பொருள் குழந்தையாக இருப்பதனால் விளையும் விளைவு.

காணும் கண்கள் குழந்தையின் கண்களாக இருந்தால் பருவம் நிறைந்த மங்கையையும் விகாரமின்றிப் பார்க்கும் நிலை வரும். மிகச் சின்னஞ் சிறிய குழந்தை தன்னுடைய தாய் ஆடையின்றி நீராடும்போது பார்த்தால் அதற்கு எந்த விதமான விகார உணர்ச்சியும் தோன்றுவதில்லை. தன்னுடைய தாயின் திருவுருவத்தை ஆர்வமுடனும் அன்புடனும் கவனித்தாலும் அந்தக் குழந்தையின் மனத்தில் இம்மியளவும் வேறுபட்ட எண்ணமே எழாது.

இத்தகைய குழந்தையின் நிலையில் இருக்கிறார் அபிராமிபட்டர். அறிவிலே சிறந்து நின்றாலும் அம்பிகையை எண்ணும்போது குழந்தை ஆகிவிடுகிறார்.

மங்கையரின் அவயவங்களில் ஆடவரின் மனத்தைக் கவருவன இரண்டு. இரகசிய ஸ்தானமும், நகில்களுமாகிய இரண்டும் ஆடவர்களின் மனத்தில் காமவிகாரத்தை ஊட்டுவன. அதனால் அந்த இரண்டையும் மறைப்பது நாகரிகம் என்று எண்ணுகின்றனர், ஆனால் விவேகிகளுக்கு அவை மயலை உண்டுபண்ணுவதில்லை. காணும் மங்கையைத் தாயாக உள்ளத்தில் எண்ணினால், எவை காமத்தை உண்டாக்குகின்றனவோ அவையே தாய்த்தன்மையின் அடையாளங்களாக இருப்பதை உணரமுடியும். உலகில் விலங்கினங்களிடமும் இந்த அங்கங்கள் இருக்கின்றன. குழந்தையைப் பெறுவதற்கும் வளர்ப்பதற்குமாக அமைந்தவை அவை. ஆதலின் விலங்கினங்களும் அவற்றைப் பெற்றிருக்கின்றன. நாம் பிறந்த இடமும், நம்மை வளர்க்கப் பால் கறந்த இடமும் அவை என்று எண்ணினால் இரண்டும் தாய்த் தன்மையை நினைப்பூட்டுகின்றன அல்லவா?

> ''பிறந்திடத்தை நாடுதே பேதைமட நெஞ்சம்
> கறந்திடத்தை நாடுதே கண்''

என்ற பட்டினத்தார் பாடலில் இந்தக் குறிப்பைக் காண்கிறோம். ஞானியர் எப்படிப் பார்க்கிறார்கள் என்பதை இது தெளிவாகச் சொல்கிறது.

அம்பிகை எல்லா உயிர்களுக்கும் தாய்; எல்லா உயிர்களும் வாழ்ந்து வரும்படி அருள்புரியும் அன்னை. அவளுடைய அங்கங்கள் யாவும் அவளுடைய தாய்த் தன்மையை நினைப்பூட்டுவன. தாய் என்னும் பிழம்பில் ஒவ்வோர் அங்கமும் தாய்த்தன்மையைத் தாங்கி நிற்கிறது.

பக்தர்கள் அன்னையை வருணிக்கும்போது இன்ன அங்கத்தைச் சொல்லவேண்டும், இன்ன அங்கத்தைச் சொல்லக்கூடாது என்று வேறுபடுத்திப் பார்க்கிறதில்லை. அவர்களுடைய திருப்பாடல்களைப் படிக்கும்போது அவர்களுடைய நிலையிலிருந்து பார்க்கவேண்டும். அப்போதுதான் குழந்தைக்கும் தாய்க்கும் உள்ள உறவின் தூய்மையும், கடவுளை அன்னையாக வழிபடும் நெறியிலுள்ள உள்ளத் தூய்மையும் புலனாகும்.

அபிராமிபட்டர் தாய்மைக்குரிய சின்னமான இரண்டு அங்கங்களையும் வருணிக்கிறார். முதலில் அன்னையின் நகில்களைச் சொல்கிறார். ஞானப்பால் தரும் கிண்ணங்கள் அவை. அவை பரமேசுவரனுடைய உள்ளத்தைக் குழைவிக்கும் தன்மை உடையவை. சங்காரத்தில் ஈடுபடும் அப்பெருமானுக்குச் சில சமயங்களில் வன்மையான நெஞ்சம் உடையவரோ என்று நினைக்கும்படி செயலும் தோற்றமும் இருக்கும். தர்மத்தை நிலை நிறுத்துபவர்களுக்குப் பொல்லாதவர்களைத் தண்டிக்கும்போது மனத்தைக் கல்லாக்கிக்கொள்ள வேண்டிய அவசியம் உண்டாகும். சிவபெருமானுக்கு அந்த நிலை உண்டு, அவருடைய வலிய நெஞ்சை இளகச் செய்யும் ஆற்றல் எம்பெருமாட்டியின் திருத்தனங்களுக்கு இருக்கிறது. இதை இந்த அடியார் சொல்கிறார்.

இறைவன் தன் திருவுள்ளப்படி எல்லாரையும் ஆட்டி வைப்பவன். அந்தப் பெருமானுடைய திருவுள்ளம் எம்பெருமாட்டியின் திருவுள்ளப்படி ஆடுகிறதாம். அவனுடைய உள்ளத்தை ஆட்டி வைப்பதற்கு உரிய கருவியாக அன்னையின் நகில்கள் இருக்கின்றனவாம்.

அம்பிகையின் நகில்கள் பரந்து படர்ந்து இருக்கின்றன. நன்ருகப் பூரித்து இரண்டும் ஒரேமாதிரியான அமைப்புடையனவாய் விளங்குகின்றன. அன்பினுல் குழைகின்றன. அழகான முத்துமாலையை அம்பிகை அணிந்திருக்கிருள். தனங்களாகிய மலையைக் கொண்டு சிவபெருமானுடைய வன்மையான நெஞ்சைத் தான் நினைத்தபடி எல்லாம் நடனம் செய்யும்படி செய்கிருள் அம்பிகை. தன்னுடைய விருப்பப்படி தன் பதியை ஆட்டிவைப்பதே அம்பிகையின் விரதம். அம்மை போடும் தாளத்துக்கு ஏற்ப ஐயன் அம்பலத்தில் ஆடுவான் என்று கூறுவதுண்டு. சக்தி இல்லாவிட்டால் சிவபெருமானுக்கு விளக்கம் இல்லை. சிவமெனும் நிர்க்குண மூர்த்தியின் இயக்கமே சக்தி என்று சொல்லி விடலாம்.

எல்லாரையும் அசைத்துத் தான் அசையாமல் அசஞ்சலனுக இருப்பதனுல் சிவபெருமானுக்குத் தாணு என்ற பெயர் வந்தது. உலகத்தை எல்லாம் தன்னுடைய வலைக்குள் அகப்படுத்தும் காமன் சிவபெருமானை ஒன்றும் செய்ய முடியவில்லை. அத்தகைய வலிய நெஞ்சை உடையவன் சிவபிரான். அப்பெருமானைக் கொங்கை மலை கொண்டு நடம் கொள்கிருள் எம்பெருமாட்டி.

இடம்கொண்டு விம்மி இணைகொண்டு
  இறுகி இளகி முத்து
வடம் கொண்ட கொங்கை
  இறைவர் வலிய நெஞ்சை
நடம்கொண்ட கொள்கை நலம் கொண்ட நாயகி.

[பரந்த இடத்தைக் கொண்டு, பருத்து ஒன்றோடு ஒன்று ஒக்க வளர்ந்து, தளர்ச்சியின்றிச் செறிந்து, மெத்தெனக் குழைந்து முத்து மாலையை அணியாகக் கொண்ட தனம் என்னும் மலையைக் கொண்டு சிவபிரானது வன்மை பெற்ற நெஞ்சைத் தான் நினைத்தவாறு எல்லாம் ஆட்டி வைக்கும் விரதத்தையும் அதற்கு ஏற்ற அழகையும் உடைய தேவி.

இணைகொண்டு - இரண்டும் ஒத்து அமைந்து, கொள்கை - விரதம்; பதிவிரதம். நலம் - அழகு.]

அம்பிகையின் திருமார்பில் முத்துமாலை விளங்குவதை "திருத்தன பாரமும் ஆரமும்" என்றும், "மெய்க்கே அணிவது வெண்முத்து மாலை" (9, 37) என்றும் முன்பு குறிப்பிட்டார். சிவபெருமான் அம்பிகையின் தனம் கண்டு வசப்படுவதை.

"அத்தர் சித்தமெல்லாம்,
குழைக்கும் களபக் குவிமுலை
யாமளைக் கோமளமே" (33)

என்பதிலும் சொன்னார்.

எம்பெருமாட்டியின் கடிதடம் அரவின் படம்போல அமைந்திருக்கிறது. அந்தப் பெருமாட்டியின் மொழி மிக மிகக் குளிர்ச்சியாக இருக்கிறது. கேட்போருடைய காது வழியே சென்று உள்ளத்தில் இனிதாகப் பொருள் தரும் மொழிகள் அவை. ஒலியால் செவிக்கும் பொருளால் கருத்துக்கும் குளிர்ச்சியாக இருப்பவை.

அம்பிகையின் திருவடியில் வேதமே சிலம்பாக அமைந்திருக்கிறது. எம்பெருமாட்டி நடந்தால் அந்த வேதம் ஒலிக்கும். அம்பிகை செயலற்று இருந்தால் வேதமும் ஒலியின்றி அடங்கிக் கிடக்கும். அப்பெருமாட்டியின் அருள் விளையாடலினால் வேதங்கள் ஒலி சிறந்து நின்று பயன் தருகின்றன.

சிலம்பு திருவடியைச் சுற்றியிருக்கும். வேதம் அம்பிகையின் திருவடியைச் சூழ்ந்து அரற்றுகின்றது. சிலம்புக்குள் பரல்கள் மறைவாக இருக்கும். அதுபோல வேதத்துக்குள் பல பொருள்கள் இரகசியமாக இருக்கின்றன. அதனால் மறை என்ற பேர் அமைந்தது. அம்பிகை நடந்து வந்தால் அவளுடைய சிலம்பொலி பிறவற்றிற்கு இல்லாத ஒலியைக் காட்டி அம்பிகை வருகிறாள் என்பதைப் புலப்படுத்தும். வேதமோ அம்பிகையின் பெருமையை ஒலித்துத் தெரிவிக்கின்றது. இந்த மூன்றையும் அடுத்தபடி சொல்கிறார் அபிராமிபட்டர்.

நல் அரவின்
படம்கொண்ட அல்குல் பனிமொழி வேதப் பரிபுரையே.

[நல்ல பாம்பின் படத்தை ஒத்த கடிதடத்தையும் குளிர்ச்சியையுடைய வாய்மொழிகளையும் வேதமாகிய சிலம்பையும் உடையவள்.

பனி. குளிர்ச்சி. பரிபுரம் - சிலம்பு. பரிபுரை - சிலம்பை அணிந்தவள்.]

அம்பிகை வேதத்தையே சிலம்பாக அணிந்துகொண்டிருக்கிறாள் என்பதைப் பின்வரும் நூற்பகுதிகள் காட்டும்.

''அடிச்சூட்டு நூபுரமோ ஆரணங்கள் அனைத்துமே''
(தக்க. 119)

''ஆரண நூ புரஞ்சிலம்பும் அடிகள் போற்றி''
(திருவிளையாடல், காப்பு)

''வேதங்கள் ஒருநான்கும் மெல்லடிமேல் வியன்சிலம்போ''
(பாசவதைப்பரணி, 192)

இறைவர் வலிய நெஞ்சை நடம்கொண்டது கொங்கை மலை என்று வெளிப்படையாகச் சொன்னாலும், மற்றவையும் அப்பெருமானை ஆட்படுத்தின என்பது குறிப்பால் பெறப்

பட்டது. 'வேதப்பரிபுரை, நலங்கொண்ட நாயகி' என்று கூட்டிப் பொருள் செய்யவேண்டும்.

அருளே வடிவாகிய எம்பெருமாட்டியின் வசப்பட்டு இறைவன் ஆடுகிறான் என்றது, பராசக்தியின் இயக்கத்தால் சிவம் எனும் பொருள் இயங்குவதைக் குறிப்பது.

சிருஷ்டி முதலிய பஞ்சகிருத்தியங்களும் சிவபெருமானுடைய அருளின் இயக்கத்தால் நிகழ்வன என்ற கருத்தையே இது காட்டுகிறது.

> இடம்கொண்டு விம்மி இணைகொண் டிறுகி
> இளகிமுத்து
> வடம்கொண்ட கொங்கை மலைகொண்டு இறைவர்
> வலியநெஞ்சை
> நடம்கொண்ட கொள்கை நலம்கொண்ட நாயகி,
> நல்லரவின்
> படம்கொண்ட அல்குற் பனிமொழி வேதப்
> பரிபுரையே

இது அபிராமி அந்தாதியின் 42-ஆம் பாட்டு.

# இறைவர் பாகத்தில் இருந்தவள்

சிவபெருமானுடைய மனத்தை மயக்கும் பேரழகு உடைய அம்பிகையின் அங்க நலங்களைச் சொல்லி, அவளுடைய திருவடிமேல் கிடந்து அலம்பும் வேதச் சிலம்பினைக் கூறிமுடித்தார் முற்பாட்டில். இப்போது தொடர்ந்து அந்தச் சிலம்பை அணிந்த பாதத்தைத் தொட்டுக்கொண்டு அன்னையின் திருக்கரங்களையும், சிந்துர மேனியையும் உள்ளத்தில் வைத்துத் தியானம் செய்து, சொல்லினால் கோலம் செய்யப் புகுகிறார் அபிராமி பட்டர்.

எம்பெருமாட்டியின் திருவடி சிறியது. ஆதார வஸ்துவாக இருக்கிற உருவம் நுட்பமாக இருக்கும். சிலம்பு அணிந்த திருவடியை மட்டும் நினைத்துப் பார்க்கிறார் அபிராமிபட்டர். தேவி அடியார்களுக்கு அருள் செய்யத் தன் சிறிய அடியை மெத்தென வைத்து வருகிறாள். அவள் எழுந்தருளுவதை அவள் நடக்கும் நடை காட்டாது. மென்மையாக நடக்கும் இயல்பினள் ஆதலின் அவள் வருகையை அடியின் ஒலி புலப்படுத்தாது. அவள் எங்கே நடந்தாலும் அதிர நடக்கமாட்டாள். ஆதலின் அவள் வருகையைப் புலப்படுத்துவதற்கு அவள் திருவடியில் உள்ள சிலம்புகள் பயன்படுகின்றன. யானை வரும் பின்னே, மணியோசை வரும் முன்னே என்றபடி, அன்னை திருவடி எடுத்து நடந்து வருகிறாள் என்பதை அவள் திருவடியைச் சூழ்ந்திருக்கும் சிலம்பு ஒலித்துக் காட்டுகிறது. வேதம் தன் மந்திரங்களால் அம்பிகையின் தத்துவங்களை எடுத்துச் சொல்வதுபோல் அந்தச் சிலம்பு எம்பெருமாட்டியின் வருகையைச் சொல்கிறது. வேதமும் சிலம்பும் ஒன்று தானே?

அம்பிகை தன்னுடைய சிறிய அடியைப் பெயர்த்துச் சிலம்பு ஒலிக்க வந்து நின்று அருள் செய்யப் புகும்போது, அந்தப் பெருமாட்டியின் திருக்கரங்களைப் பக்தன் பார்க்கிறான். ஒரு கரத்தில் பாசம் இருக்கிறது. மற்றொரு கரத்தில் அங்குசம் இருக்கிறது. பின்னும் ஒரு கையில் ஐந்து மலர்களாகிய பாணங்கள் இருக்கின்றன. பிறரைக் கட்டுகின்ற பாசத்தைத் தன் கையில் கொண்டு விளங்குகின்ற பெருமாட்டி, பாசத்தைக் கட்டும் இயல்பு உடையவள் என்பதைக் காட்டுகிறது. பாசமும், அங்குசமும் அகங்காரம் என்னும் யானையை அடக்கக் கையில் ஏந்தியிருக்கும் ஆயுதங்கள். மனிதன் ஆணவ முனைப்பினால் நான் நான் எனத் திரிந்து பல செயல்களைச் செய்து மேலும் மேலும் பிறவிகளில் வீழ்ந்து அலைகிறான். எல்லாவற்றுக்கும் மூலமாகிய மலம் ஆணவம். அதற்கு யானையை உவமை கூறுவது வழக்கம். அகங்காரம் என்னும் மத யானையை அடக்குவதற்கு நம்மால் இயலாது. எம்பெருமாட்டியின் திருவருள் இருந்தால்தான் அந்தக் காரியத்தைச் செய்யலாம். மதயானையை அடக்குவதற்குரிய கயிற்றையும், அங்குசத்தையும் அம்பிகை தன் கையில் வைத்திருக்கிறாள். நம்முடைய ஆணவ மலத்தை அடக்கி, இன்பம் தருவதற்குரிய ஆற்றல் அம்பிகையிடம் இருப்பதை அந்த இரண்டு ஆயுதங்களும் காட்டுகின்றன.

> ''ஆணவ அழுக்கடையும் ஆவியை விளக்கிஅநு
> பூதிஅடைவித்ததொரு பார்வைக்காரனும்''

என்பது திருவகுப்பு.

லலிதா சகசிரநாமம் பாசத்தை ஆசையின் வடிவு என்றும், அங்குசத்தைக் குரோதத்தின் வடிவு என்றும், கரும்பு வில்லை மனத்தின் வடிவு என்றும், பாணங்களைப் பஞ்ச தன்மாத்திரையின் வடிவு என்றும் கூறும். எம்பெரு

மாட்டியின் திருக்கரத்தில் கரும்பு வில்லும் பஞ்ச பாணமும் இருத்தல், மன்மதனுக்கு ஆயுதங்களாகிய அவற்றால் காம மோகிதர்களாக உள்ள மனிதர்கள் அந்தக் காம வலையினின்றும் விடுபடச் செய்யும் ஆற்றல் அம்பிகையிடம் உள்ளதைக் காட்டுகிறது. எனவே பாசம் முதலிய நான்கும் தேவி தன் திருவருளால் அகங்காரத்தையும், காமத்தையும் தன்னை அண்டும் அடியார்களிடமிருந்து போக்குவாள் என்பதைக் குறிக்கும் அடையாளங்கள் என்று சொல்வதில் தவறு இல்லை.

பரிபுரச் சீறடிப் பாசாங்குசை பஞ்ச பாணி.

தேவியின் புகழைப் பேசும் வேதத்தையும் உபநிடதத்தையும் தெரிந்துகொண்டவர்கள் அவற்றின் வாயிலாக அப்பெருமாட்டியின் திருவடியைப் பற்றிக்கொள்கிறார்கள். அந்தத் திருவடியை உள்ளத்தில் வைத்துத் தியானம் செய்யும்போது அன்னை தன்னுடைய திருமேனி லாவண்யத்தை அவர்களுக்குக் காட்டுகிறாள். அப்போது அவர்கள் உள்ளத்தில் உள்ள அகந்தையும், காமமும் ஒழிகின்றன. இந்த வகையில் முதலில் திருவடி தரிசனம் செய்து, பின்பு திருக்கரங்களையும் அதில் உள்ள ஆயுதங்களையும் அடியார்கள் தரிசிக்கிறார்கள். பல காலம் மாயைக்குள் அகப்பட்டு, பிரபஞ்ச வாசனையில் ஈடுபட்டு, மூன்று வகையான தாபங்களைப் பெற்று அல்லற்பட்ட ஆருயிர்களுக்கு இந்தத் தூய தியானத்தினால் ஒரு வகையில் அமைதி கிடைக்கிறது. அன்னையின் திருவுருவத்தைக் கண்டவுடன் பேரார்வம் பொங்கி வந்தாலும் இதுகாறும் பட்ட தொல்லையினால் இனியும் அது தொடர்ந்து இருக்குமோ என்ற அச்சம் உள்ளே இருக்கிறது. பசித்த குழந்தை தன் தாயைக் கண்டவுடன் ஒருவாறு பசியை மறந்திருந்தாலும் அந்தப் பசி போவதில்லை. தாய் குழந்தையை எடுத்து அணைத்துப் பால் கொடுத்த பிறகே அது போகிறது. அதுபோல் எம்பெரு

மாட்டியின் திவ்யதரிசனத்தைக் கண்டமாத்திரத்தில் ஓரளவு அச்சம் போகுமேயொழியப் பலகாலமும் தொடர்ந்து வரும் துன்பங்கள் போவதில்லை. அதற்கு மாற்ருக, "இனி உனக்குத் துன்பமே இல்லை; நீ என் குழந்தை; இனி அச்சமின்றி இரு" என்று தன்னுடைய இனிய ஒலியால் அம்பிகை அடியார்களுடைய உள்ளத்தைக் குளிர்விக்கிருள். பசிக்கு அஞ்சின குழந்தைக்குத் தாயைக் கண்டவுடன் அச்சம் போகும். பிறகு அவள் பால் கொடுத்தவுடன் பசி போகும். நல்ல மருத்துவரைக் கண்ட நோயாளிக்கு அந்த நோயினுல் துன்பப்படுகிருேமே என்று இருந்த அச்சம் அவரைக் கண்ட ஞான்றே ஒழியும். பிறகு அவர் தரும் மருந்திஞல் நோய் போகும். நோய் வேறு, நோய் வந்து விட்டதே என்ற கவலை வேறு. நோயைவிட நோய் வந்து விட்டதே என்ற கவலை மிகக்கொடியது. மருத்துவரைக் கண்டபோது அந்தக் கவலை தீருவதும், அவர் தந்த மருந்தை உண்டபோது நோய் தீருவதும் உலக இயல்பு. அதே வகையில் எம்பெருமாட்டியின் அடியைப் பற்றிக்கொண்டு அவளுடைய திருக்கரங்களையும், அழகிய திருமேனியையும் கண்ட அடியார்களுக்கு, இனி நமக்குத் துன்பம் இல்லை என்ற தைரியம் முகிழ்க்கிறது. ஆனுல் அநாதியாக இருக்கிற வாசனைகள் உள்ளே புதைந்து கிடக்கின்றன. அவற்றை எல்லாம் போக்குவதற்கு அம்பிகை தன்னுடைய இனிய மொழியை அருள்கிருள். அதைக் கேட்டபோது அம்பிகையின் உண்மையான தத்துவம் தோன்றுகிறது. அவள் எல்லா மும்மைகளுக்கும் தலைவி, திரிபுரசுந்தரி என்பதும் தோன்றுகிறது. அவள் திருமேனி முழுவதும் செம்மையாக, சிந்துர வண்ணம் உடையதாக இருப்பதையும் அவன் அறிந்துகொள்கிருன். எல்லாம் அவள் மயமாகக் கண்டு அநாதி காலமாகத் தன்னிடம் இருந்த பாசம் மாய, அந்தச் செவ்வொளியில் தன்னைக் கரைத்துக்கொண்டு நிற்கிருன்.

இப்படிப் படிப்படியாக அநுபவமுறையைத் தெரிவிப் பாரைப் போல வருணனைகளை அமைக்கிறார், இந்த ஆசிரியர். முதலில் சீறடியையும், பின்பு பாசாங்குசத்தை யும், பஞ்ச பாணத்தையும், அப்பால் இனிய சொல்லையும் கூறிப் பிறகு திரிபுரசுந்தரி என்றும், சிந்துர மேனியள் என்றும் நினைவுறுத்துகிறார். தாம் அநுபவித்த முறைப் படியே சொல்கிறவர் ஆதலின், பக்தி செய்து பயத்தைப் போக்கி, இன்ப உணர்வைப் பெற்ற முறையை இந்த வருணனை குறிக்கிறது.

> பரிபுரச் சீறடிப் பாசாங்குசை பஞ்ச பாணி இன்சொல்
> திரிபுரசுந்தரி சிந்துர மேனியள்.

அன்னையாகிய எம்பெருமாட்டியின் திருவுருவத்தை இப்படிப் பாடியவர் அடுத்தபடி அப்பனாகிய எம்பெருமானை நினைக்கிறார். அப்பனுக்குப் பெருமை பெருமாட்டியைத் தன் பக்கத்தில் வைத்திருப்பதே. இருவருக்கும் வேறுபாடு இல்லை. அவனுக்கு எத்தனை பெருமை உண்டோ அத்தனை பெருமை அன்னைக்கும் உண்டு. இதனை அவனுடைய திருமேனியில் சரிபாதியைத் தான் ஆக்கிரமித் துக் கொண்டிருப்பதனால் அம்பிகை உணர்த்துகிறாள். பிரமனுடைய நாவில் மாத்திரம் கலைமகள் இருக்கிறாள். திருமால் திருமேனியில் மார்பில் மாத்திரம் திருமகள் இருக்கிறாள். சிவபெருமானுடைய திருமேனியிலோ சரிபாதி யில் அம்பிகை எழுந்தருளியிக்கிறாள். மற்றவர்களுடைய சக்திகள் அவர்களிடம் ஓர் அம்சத்தில் மாத்திரம் இருக்க, சிவபெருமானுடைய சக்தி நூற்றுக்கு நூறாக அமைந்திருக் கிற உண்மையை இந்தத் தோற்றம் புலப்படுத்துகிறது. ''இறைவன் செம்பாகத்தில் இருக்கும் பிராட்டி'' என்று சொல்ல வருகிறார். அந்த இறைவனைப் பற்றியும் சொல்கிறார்.

அன்னை எப்படி அகந்தை முதலியவற்றை மாய்க்கும் பேராற்றல் உடையவளோ அப்படியே சிவபெருமானும் மும்மலங்களை அடியோடு அழிக்கும் பேரருள் உடையவன். திரிபுர சங்காரம் இந்த தத்துவத்தைச் சொல்கிறது. ஆணவம், மாயை, கர்மம் என்று சொல்லும் மூன்று மலங் களும் ஞானத்தினால் மாய்ந்துவிடும். திரிபுரங்களைத் தன்னுடைய புன்னகையால் எரித்தவன் இறைவன். திரிபுரங்களுக்குத் தலைவர் ஆகிய மூன்று அசுரர்கள் பறக்கும் தங்கள் கோட்டைகளைத் திடீர் திடீரென்று எங்காவது இறங்கச் செய்து அங்குள்ள உயிர்க் கூட்டங் களை அழித்து வந்தார்கள். அதனால் அல்லலுற்ற தேவர் களும், பிறரும் இறைவனிடம் முறையிட இறைவன் திரிபுரங்களைச் சங்காரம் செய்வதற்குப் புறப்பட்டான்; மேருவை வில்லாகவும், ஆதிசேஷனை நாணாகவும், திருமாலை அம்பாகவும் கொண்டு புறப்பட்டான். அப்போது திருமால் முதலியவர்கள் நம்மால்தான் திரிபுர சங்காரம் ஆகப் போகிறது என்று அகங்கரித்தார்கள். அதனைக் கண்டு நகைப்பவனைப்போல இறைவன் புன்னகை பூத்தான். அந்தப் புன்னகையினால் மூன்று புரங்களும் எரிந்தன. திருமால் முதலியவர்களுடைய அகந்தையும் அழிந்தது. சிவபெருமான் மூன்று மலங்களையும் அழித்தருளும் பேரரு ளாளன் என்பதைத் திரிபுர சங்காரம் காட்டும். இந்த உண்மையைத் திருமூலர் சொல்கிறார்.

> "அப்பணி செஞ்சடை ஆதி புராதனன்
> முப்புரஞ் செற்றான் என்பர்கள் மூடர்கள்;
> முப்புர மாவது மும்மல காரியம்;
> அப்புரம் எய்தமை யாரறி வாரே."

பிறருக்குத் தீமை புரியவேண்டுமென்று தீர்மானித்துக் கொண்டு அதனையே தம்முடைய தொழிலாகச் செய்து வந்த வஞ்சகர்கள் திரிபுரங்களுக்குத் தலைவர்களாகிய

அசுரர்கள். அவர்கள் யாருக்கும் அஞ்சுவது இல்லை. அத்தகையவர்களையும் அஞ்சும்படி செய்தான் இறைவன். திரிபுர சங்காரம் செய்யவேண்டுமென்ற வியாஜத்தில் மேரு மலையை வளைத்து வில்லாகக் கையில் கொண்டான். அவனுடைய மேனி செக்கச்செவேல் என்று இருக்கிறது. எரிபுரை மேனி என்கிறார். எல்லாவற்றையும் சுட்டுத் தூய்மை செய்வது அக்கினிக்கு இயல்பு. அது எப்போதும் மேலே நோக்கும். செம்மையான வடிவம் உடைய இறைவனே மேல் நோக்கும் ஞானத்தையே வடிவாக உடையவன்; தீமையைச் சுட்டு எரிக்கும் அருளாளன். எரி புரை மேனி இறைவனாக இருக்கும் கோலம் அவற்றைச் சுட்டிக் காட்டுகிறது. அத்தகைய ஞான மூர்த்தியின் சரி பாதியில் இருந்து நலம் செய்கிறவள் அம்பிகை. இதனை அடுத்தபடி சொல்கிறார்.

தீமை நெஞ்சில்
பரி புர வஞ்சரை அஞ்சக் குனி பொருப்புச் சிலைக்கை
எரிபுரை மேனி இறைவர் செம்பாகத்து இருந்தவளே.

அம்பிகையின் திருவடியில் சிலம்பு புலம்புவதை, 'சிஞ்ஞான மணி மஞ்ஜீர மண்டித ஸ்ரீபதாம்புஜா' (46) என்கிற லலிதா சகசிரநாமம் குறிக்கும். அம்பிகையின் பாசத்தையும், பஞ்சபாணத்தையும் பல இடங்களில் அபிராமிபட்டர் சொல்கிறார். இங்கே சொன்னபடி, "பாசாங் குசை பஞ்சபாணி வஞ்சர், உயிர் ஆவி உண்ணும் உயர் சண்டி" என்று 76-ஆம் பாடலிலும் சொல்கிறார். முன்னைப் பாட்டில் பனிமொழி என்று கூறினவர் இங்கே அந்த மதுர வாசகத்தை இன்சொல் என்று சொன்னார். திரிபுரசுந்தரி என்பதன் விளக்கத்தை 2-ஆம் பாட்டின் உரையில் காண லாம். அம்பிகையின் திருமேனி சிந்தூர வண்ணம் உடையது என்பதை, "சிந்துர வண்ணப் பெண்ணே" (6), "சிந்துர

வண்ணத்தினுள்'' (8) என்பவற்றிலும் காணலாம். இறைவனுடைய செம்பாகத்தில் அம்பிகை இருப்பதை,

''தம்பிரான் திருமேனியில், செம்பாதி யுங்கொண்ட
தையனுயகி''

என்று குமரகுருபரரும் கூறினர்.

அம்பிகையின் உருவத்தியானத்தினுல் அநாதியாக வருகிற மலங்கள் கெட்டு இன்பம் உண்டாகும் என்பதை இந்தப் பாட்டுக் குறிப்பிக்கிறது.

பரிபுரச் சீறடிப் பாசாங் குசைபஞ்ச பாணி
இன்சொல்
திரிபுர சுந்தரி சிந்துர மேனியன் தீமைநெஞ்சில்
புரிபுர வஞ்சரை அஞ்சக் குனிபொருப் புச்சிலைக்கை
எரிபுரை மேனி இறைவர்செம் பாகத் திருந்தவளே.

[சிலம்பை அணிந்த சிறிய திருவடிகளையும் பாசாங்குசத்தையும் உடையவள், ஐந்து மலர் அம்புகளை ஏந்தியவள், இனிய சொல்லையுடைய திரிபுரசுந்தரி, சிந்துரம்போலச் சிவந்த திருமேனியை உடையவள், மனத்தினுல் உலகுக்குத் தீமை செய்யவேண்டுமென்று நினைந்து அவ்வாறு செய்த திரிபுரத்தில் இருந்த வஞ்சகர்களாகிய அசுரர்களும் அஞ்சும்படியாக வளைத்த மேருமலையாகிய வில்லைத் திருக்கரத்தில் பெற்றவரும், நெருப்பை ஒத்த திருமேனியை உடையவருமாகிய சிவபெருமானது சரிபாதியில் எழுந்தருளி இருந்தவள் ஆகும்.

மேனியள் இருந்தவள் என்று கூட்டவேண்டும், பரிபுரம்- சிலம்பு. சீறடி-சிறிய அடி. நெஞ்சில் புரி-மனத்தில் எண்ணுகின்ற. குனித்தல்-வளைத்தல். சிலை-வில் செம்பாகம்- சரிபாகம்.]

இது அபிராமி அந்தாதியில் 43-ஆவது பாடல்.

# யாவரினும் மேலானவள்

சிவபெருமானுடைய வாம பாகத்தில் இருந்தவள் என்று அம்பிகையைத் துதித்த அபிராமிபட்டர் அவனுக்கும் அவளுக்கும் உள்ள உறவை எண்ணிப் பார்க்கிறார். அந்த உறவு மிகவும் விசித்திரமானது. ஒரு சமயம் அவனை அடைய அவள் தவம் செய்கிறாள். மற்றொரு சமயம் அவளை அடைய அவன் தவம் செய்கிறான். அவனுடைய திருமேனியில் சரிபாதியை ஆக்கிரமித்துக்கொண்டு முழு உரிமையோடு சமானமாக எழுந்தருளியிருக்கிறாள். வேறு சமயத்தில் அவளே தலைவியாக இருக்க அவன் அவளுக்கு அடியவனாக இருக்கிறான்; வணங்குகிறான். சில சமயங்களில் அவனுக்கு அடங்கிய நாயகியாக, பணிந்தொழுகும் பத்தினியாக, அவள் விளங்குகிறாள். இவ்வாறெல்லாம் நாடகம் நடித்தாலும் அவர்கள் இருவரும் ஒருவரே. சிவன் வேறு சக்தி வேறு அல்லர்.

இந்த விசித்திரமான உறவை நினைத்து வேறு ஒரு வகையில் அதனைச் சொல்கிறார்.

இந்த ஆசிரியர் அம்பிகையைத் தம்முடைய உள்ளமாகிய சிங்காதனத்தில் இருத்திக்கொண்டவர். தமக்கு நெருங்கிய துணையாகப் பெற்றவர். வேதம்கூட அவன் என்றும் அவள் என்றும் அது என்றும் சேய்மைச் சுட்டாகக் கடவுளைச் சொல்கிறது. பக்தர்களோ இறைவனுடன் நெருங்கி அருளநுபவத்தில் இணைந்தவர்களாதலின் அணிமைச் சுட்டினால் இவன் என்று சொல்வார்கள். திருஞானசம்பந்தர்,

"பீடுடைய பிரமாபுரம் மேவிய பெம்மான்
இவன் அன்றே"

என்று பாடுகிறார். அபிராமி பட்டரும் உள்ளத்தினால் அம்பிகையின் அணுக்கத் தொண்டராகும் பேறு பெற்றமை யால் அன்னையை அணிமைச் சுட்டினால் 'இவள்' என்கிறார். 'என்னுடைய உள்ளத்திற்கு அணிமையில் எழுந்தருளி என் தியானப் பொருளாக நின்றருளும் பிராட்டி' என்று பொருள் கொள்ளவேண்டும். என்னுடைய தாயாகிய இவள் இப்படியெல்லாம் எம்பிரானுடன் இணைந்த உறவுடையவள் என்று சொல்ல வருகிறார்.

'இந்தப் பிராட்டி உமாதேவியாகத் தனியே பிரிந்திருந்து பரமேசுவரனை அடைய வேண்டுமென்று இமாசலத்தில் தவம் இருந்தவள்' என்று தொடங்குகிறார். விரிவாகச் சொல்லாமல் சுருக்கமாகத் தவம் செய்தவள் என்கிறார்.

தவளே இவள்.

''மாத்தவளே என்று 13-ஆம் பாடலிலும் சொன்னார். தனியே இமவான் மகளாகப் பிறந்து சிவபெருமானை அடைய வேண்டும் என்ற பேரார்வத்தினால் அதன் பொருட்டு மகா யோகினியாகிப் பொறி புலன்களை அடக்கித் தவம் செய்தாள். அதன் பயனாகப் பரமேசுவரனை மணந்தாள். அவனுடைய மனைக்கு மங்கலமாக, அவனுடைய வாழ்க்கைக்கு உறுதுணையாக ஆனாள், எல்லாருக்கும் இன்பத்தை உண்டாக்கும் சிவபெருமானுடைய வாழ்க்கையில் மங்கலத்தை உண்டாக்கினாள். சிவம் என்ற சொல்லுக்கே மங்கலம் என்ற பொருள் உண்டு. அம்பிகையைப் பிரிந்திருந்தால் அந்த வாழ்வில் மங்கலம் இராது. அவளோடு சேர்ந்திருந்தால்தான் அவன் வாழ்வு மங்கலமுடையதாகும்; அவன் மனைமங்கலமாக இருப்பவள் அன்னை.

எங்கள் சங்கரனார் மனைமங்கலமாம் அவளே.

''மங்கலம் என்ப மனைமாட்சி'' என்பது திருக்குறள். இல்லறம் செய்பவனுக்கு மனைவியினால் வரும் மாட்சியே

மங்கலம். இங்கே மாண்புடைய பத்தினியாக அம்பிகை இருத்தலின் சங்கரனுருடைய மனைக்கு அவள் மங்கலமாயினுள். லலிதா சகசிரநாமத்தில் மங்கலாகிருதி, ஸுமங்கலி என்ற திருநாமங்கள் வருவது இங்கே நினைப்பதற்குரியது. ''மழுவார்திரு நெடுமங்கல மகளே'' (328) என்பது தக்கயாகப்பரணி.

அம்பிகையின் பக்தராகிய இவர் அம்பிகையின் கணவராகிய சங்கரனை, 'எங்கள் சங்கரனார்' என்று உரிமையுடன் சொல்கிறார்.

சிவபெருமானை மணக்கவேண்டுமென்று தவம் புரிந்து அப்பெருமானுடைய மனைக்கு மங்கலமாகிய துணைவியாக எழுந்தருளியிருக்கும் அவள் அவனுக்குத் தாயாகவும் இருக்கிறாளாம். இது உலகத்தில் இல்லாத அதிசயம். இதையே வேறு விதமாகச் சொல்வார் மணிவாசகர். சிவபெருமான் அம்பிகைக்கு மணாளனாகவும் இருக்கிறான்; மகனாகவும் இருக்கிறான்.

''இமவான் மகட்குத் தன்னுடைக் கேள்வன் மகன்'' என்று திருவாசகத்திலும் (பொற்சுண்ணம், 13),

''தவளத்த நீறணி யும்தடம் தோளண்ணல் தன்னொருபால்
அவள் அத்த னும்மக னும்தில்லையான்'' (112)

என்று திருச்சிற்றம்பலக் கோவையிலும் பாடுகிறார் குமரகுருபரரோ,

''தனிமுதல் யாம்என்பார்க் கம்மனை யாய்அவர்
தம்மனை யானவள்''

என்று மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழிலும் (அம்மானை. 9),

''அனக நாட கற்கெம் மன்னை, மனைவி தாய்''

என்று சிதம்பரச் செய்யுட் கோவையிலும் (33) பாடுகிறார். சிவஞான சித்தியார், ''சத்திதான் சிவத்தை யீன்றும்'' என்று கூறுகிறது. தத்துவங்கள் ஒன்றினின்று ஒன்று தோன்றும் முறையில் இந்த உறவு தெளியப்பெறும். சிவ தத்துவத்தினின்றும் சக்தி தத்துவம் தோன்றுகிறது. அப்போது சிவனுக்குச் சக்தி மகள் முறை ஆகிறாள். மீண்டும் அந்தச் சக்தி தத்துவத்தினின்றும் சதாசிவ தத்துவம் தோன்றுகிறது. சக்திக்குச் சதாசிவம் மகனாகிறான். இந்தத் தொடர்பை எண்ணியே இங்கே, 'அவர் தமக்கு அன்னையும் ஆயினள்' என்றார்.

> **தவளே இவள்; எங்கள் சங்கரனார் மனைமங்கலமாம்**
> **அவளே அவர்தமக்கு அன்னையும் ஆயினள்.**

எல்லாரினும் சிறந்தவனும் பெருந்தலைவனுமாக இருப்பவன் பரமசிவன். அவன் தேவர்கோ அறியாத தேவதேவன்; மகாதேவன். அவனுக்கும் அன்னையாகும் நிலையில் அபிராமி இருக்கிறாள். அவளைப் பராம்பிகை யென்றும் பரதேவதை யென்றும் சொல்வார்கள். எல்லாரினும் உயர்ந்த தெய்வம் பரமேசுவரன்; அவனுக்கும் மேலானவள் அம்பிகையென்றால் அவளினும் சிறந்தவர் யாரும் இல்லை என்பது புலனாகும். எல்லாத் தேவர்களுக்கும் மேலாக, யாவரையும் தன் கீழ் இருக்கச்செய்து உயர்ந்து நிற்கிறவள் இந்தப் பெருமாட்டியே.

> **ஆகையினால் இவளே கடவுளர் யாவர்க்கும் மேலை**
> **இறைவியும் ஆம்.**

இத்தகைய பரதேவதையை உபாசனை புரிந்து அவளுடைய அருளைப் பெற்றவர்களுக்கு மற்றவர்கள் எம்மாத்திரம்? மற்றத் தெய்வங்கள் தமக்கு ஏதேனும் ஒரு குறை உண்டானால் வாடி வருந்தித் தம்மினும் உயர்ந்த தெய்வத்தை நாடி அடைந்து துணை வேண்டும்.

அவர்களே குறையுடையவர்களென்றால் அவர்களை அண்டு பவர்களுக்கு எவ்வாறு குறை தீரும்? தாங்கள் பற்றிக் கொண்ட பற்றுக்கோடே தளருமானால் அவர்களும் தளர வேண்டியதுதானே?

எனவே, எதனாலும் தளராத நிலை வர வேண்டுமானால் எதற்கும் தளராமல் எல்லாருடைய தளர்ச்சியையும் போக்கும் ஒருவரை அடையவேண்டும். அப்படி உள்ள தலைவி அம்பிகை. அவளைப் புகலாகப் புகுந்து அவளுடைய அருளைப் பெற்றவர்களுக்கு மற்றத் தெய்வங்களை நாட வேண்டிய அவசியம் இல்லை. அம்பிகையைவிட வேறு தெய்வம் இல்லை என்பதை உணர்ந்தவர் அபிராமிபட்டர். தம்முடைய தொண்டுகளையெல்லாம் அவளுக்கே அர்ப் பணம் செய்தவர். சிவபிரானுக்கே அன்னையாக நிற்கும் பரமேசுவரியைப் பற்றிக்கொண்ட பிறகு வேறு யாருக்குத் தொண்டு செய்வது? அப்படித் தொண்டு செய்தால் அவர்கள் தளர்ச்சி அடையும்போது அவரும் தளரவேண்டி யிருக்குமே! ஆகவே அவர், 'எவர்க்கும் மேலான தெய்வ மாகிய உன்னைப் புகலாக அடைந்து உன் திருவடிக்குத் தொண்டு செய்யும் அடியேன் வேறு ஒரு தெய்வம் இருப்பதாக எண்ணி ஏமாந்து போகமாட்டேன்; அவ்வாறு எண்ணி வழிபாடு செய்தல் முதலிய தொண்டுகளை மெய்யினால் செய்யமாட்டேன்; அப்படிச் செய்வதனால் அவர்களால் எனக்கு வரும் துன்பத்தை நீக்கமுடியாது என்பதை அறிந்து, நான் தளர்ச்சி அடைய மாட்டேன்' என்று உறுதியாகச் சொல்கிறார்.

துவளேன் இனி ஒரு தெய்வம் உண்டாக
மெய்த் தொண்டு செய்தே.

முன்பும் ஒரு பாடலில், ''மாத்தவளே உன்னை அன்றி மற்றோர் தெய்வம் வந்திப்பதே?'' (13) என்று பாடினார்.

மனம், வாக்கு, காயம் என்னும் மூன்று கரணங்களி ுைலும் இறைவியையே தியானித்து வாழ்த்தித் தொண்டு புரிகிறவர் இந்தப் பக்தர். தனி உரிமையாக அம்பிகையே அவற்றைப் பெற்றிருக்கிருள். அப்படி இருக்கையில் மெய்யினுல் செய்யும் தொண்டை வேறு ஒருவரைத் தெய்வ மென்று கருதி அர்ப்பணம் செய்வாரா? அப்படிச் செய்தால் அதனுல் தளர்ச்சிதான் உண்டாகும் என்பது அவருக்கு நன்ருகத் தெரியும்.

தவளே இவள்; எங்கள் சங்கர
ஞர்மனை மங்கலமாம்
அவளே அவர்தமக் கன்னையும்
ஆயினள்; ஆகையினுல்
இவளே கடவுளர் யாவர்க்கும்
மேலை இறைவியுமாம்;
துவளேன் இனிஒரு தெய்வம்உண்
டாகமெய்த் தொண்டுசெய்தே.

[என் நெஞ்சிற்கு அணிமையான தியானப் பொருளாக உள்ள இவ்வம்பிகை இறைவரை மணந்துகொள்ள வேண்டுமென்று தவஞ் செய்த உமாதேவியே; எங்கள் தந்தையாகிய சங்கரனுருடைய மனை வாழ்வுக்கு மங்கலமாக விளங்கும் இப்பெருமாட்டியே அவருக்கு ஒரு திறத்தில் அன்னையும் ஆனுள், ஆகையினுல் இவளே தேவர் யாவருக்கும் மேலான தலைவி ஆவாள்; இவளைத் தெய்வ மாகக் கொண்டு தொண்டு செய்வதையன்றி, வேறு ஒரு தெய்வம் உண்டென்பதாக எண்ணி, மெய்யினுல் அவருக் குத் தொழும்பு செய்து அதனுல் தளர்ச்சியை அடையேன்.

தவள் - தவம் செய்பவள்; தவத்தினள் என வரவேண்டியது சாரியையின்றி வந்தது. மேலை: ஐ,

சாரியை; மேல் - மேலான. துவளேன் - தளரேன். மெய்த் தொண்டு - உண்மையான தொண்டு என்னலும் ஆம்; அப்படி ஏதேனும் தவறித் தொண்டு செய்யும்படி நேர்ந் தால் அது மெய்யான தொண்டாக இராது, போலியாகத் தான் அமையும் என்பது குறிப்பு.]

இது அபிராமி அந்தாதியில் 44-ஆவது பாடல்.

---

# செய்தவமும் கைதவமும்

ஒரு நாள் தாயுமானவர் இறைவனைப் பூசிக்கவேண்டுமென்று எண்ணி, ஒரு பிம்பத்தை எடுத்து வைத்துக் கொண்டார். அதற்கு மலரிட்டு அருச்சனை செய்யலாம் என்று நந்தவனம் சென்று பூக்கொய்ய எண்ணினார். வெள்ளை வெளேரென்று பூத்திருக்கும் நந்தியாவட்டைக்குமுன் நின்றார். அப்போது அவருடைய பக்குவம் உயர்ந்து நின்றது. சகுணமூர்த்தியில் இறைவனை வழிபடும் நிலைக்கு மேலே, எதையும் கடவுளாகப் பார்க்கும் நிலையை அடைந்தார். அப்போது எதிரே இருந்த மலரிலும் இறைவனைக் கண்டார். அந்த மலரில் இருந்த இறைவன் அவரைப் பார்த்துச் சிரித்தான்; "என்னைப் பறித்து எனக்கே அருச்சனை செய்யப் போகிறாயோ?" என்று சொல்கிறமாதிரி இருந்தது. அதனால் மலரைப் பறிக்க எண்ணியவர் பறிக்காமல் சும்மா இருந்துவிட்டார்.

இப்போது அந்த மலரே அவருக்கு இறைவனாகத் தோன்றியது. இறைவனைக் கண்டால் கையெடுத்துக் கும்பிட வேண்டும் அல்லவா? இருகைகளையும் கூப்பி அஞ்சலி செய்ய நினைத்தார், அப்போது பின்னும் மேம்பட்ட நிலையை அடைந்தார். புறத்தே இருந்த மலரில் இறைவன் இருத்தலைப் பார்த்ததுபோலத் தம்முடைய இதய மலரிலும் அவன் இருத்தலை உணர்ந்தார். முன்னே இருந்த இறைவனைக் கும்பிட்டால் உள்ளத்தில் இருந்த இறைவனைக் கும்பிடமுடியாது. முன்னும் பின்னுமாக உள்ள இரண்டு இடங்களிலும் எழுந்தருளியிருக்கும் அவனை இருமருங்கும் சுண்டுவிரல் அமைந்த கைஇருந்தால் ஒருங்கே கும்பிடலாம். நம்முடைய கை அமைப்பு அவ்வாறு இல்லையே! முன் இருந்த மலரில் உள்ள

இறைவனை மட்டும் கும்பிட்டால் உள்ளமாகிய மலரில் உள்ள இறைவனைக் கும்பிடுவது ஆகாது. இரு மலர்களிலும் உள்ள இறைவன் திருவுருவங்களைக் கும்பிட்டால்தான் முழுக்கும்பிடு ஆகும். அப்படியின்றி முன்னுள்ள மலரில் ஒளிரும் இறைவனை மாத்திரம் கும்பிட்டால் அது அரைக் கும்பிடே ஆகும். ஆகவே மலரைப் பறிக்காமல் நின்ற அவர் இப்போது கும்பிடுவதையும் விட்டுவிட்டார். முன்னும் பின்னும், மேலும் கீழும், உள்ளும் புறமும் இறைவனையே காணும் காட்சி அவருக்கு இப்போது சித்தித்தது. ஆகவே அவர் பூவைப் பறிக்கவும் இல்லை; பூசை செய்யவும் இல்லை; கும்பிடவும் இல்லை. இதை ஒரு பாட்டில் அவரே சொல்கிறார்.

''பண்ணேன் உனக்கான பூசையொரு வடிவிலே
பாவித் திறைஞ்சஆங்கே
பார்க்கின்ற மலரூடு நீயேஇருத்தியப்
பனிமலர் எடுக்கமனமும்
நண்ணேன் அலாமலிரு கைதான் குவிக்கவெனில்
நாணுமென் உளம்நிற்றிநீ
நான்கும் பிடும்போ தரைக்கும்பி டாதலால்
நான்பூசை செய்தல்முறையோ?''

இறைவனுடைய திருக்கோயிலை வலம் வருதல், அவன் திருமுன் வணங்குதல் முதலியவை சரியை என்னும் சோபானம் ஆகும். இறைவனைத் திருவுருவத்தில் அமைத்துப் பூசை செய்து வழிபடுதல் முதலியவை கிரியை ஆகும். அவனை உள்ளத்திலே வைத்துத் தியானம் செய்து நிஷ்டை கூடுதல் யோகம் ஆகும். மெய்யுணர்வு பெற்று என்றும் மாறாத நடுநிலையில் நின்று சுகதுக்கங்களைச் சமமாகப் பாவிக்கும் பயிற்சி ஞானம் ஆகும். இந்த நான்கு படிகளையும் கடந்து அநுபூதிமான்களாக நிற்பவர்களுக்குச் சரியை முதலியவற்றால் யாதொரு பயனும் இல்லை. காற்று

இல்லாத இடத்தில் விசிறியை வைத்துக்கொண்டு விசிறிக் கொள்வார்கள். காற்றுள்ள இடத்தில் விசிறிக்கு வேலை இல்லை.

ஞானத்தின் முதிர்ச்சியால் சமாதி நிலை பெற்று அதிலும் முதிர்ந்து சகஜ சமாதி நிலையில் வாழும் முக்தர்கள் எது செய்தாலும் அதுவே தவமாக இருக்கும். அவர்கள் நடப்பதே சரியை. அவர்கள் செய்வதே கிரியை. அவர்கள் மூச்சு விடுவதே யோகம். அவர்கள் தூங்குவதே சமாதிநிலை. அவர்கள் செய்வது சதா காலபூஜை. இதையும் தாயுமான வர் சொல்கிறார்.

''துள்ளுமறி யாமனது பலிகொடுத் தேன்கர்ம
துட்டதே வதைகள்இல்லை
துரியநிறை சாந்ததே வதையாம் உனக்கே
தொழும்பனன் பபிடேகநீர்
உள்ளுறையில் என்ஆவி நைவேத்தி யம்பிராணன்
ஓங்குமதி தூபதீபம்
ஒருகால மன்றிது சதாகால பூசையா ஒப்புவித்தேன்.''

இத்தகைய சதாநிஷ்டர்களின் நிலையை அபிராமி பட்டர் நினைக்கிறார். பராம்பிகையின் கிருபையினால் சரியை முதலிய சோபானங்களைக் கடந்து ஆத்மாராமர்களாக விளங்கும் முக்தர்கள் பூசை முதலிய தொண்டுகளைச் செய்வதில்லை. அம்பிகையின் திருவடியில் விழுந்து வணங்குவதில்லை. தம்முடைய இச்சையின்படி எதை எதையோ செய்வதைப்போலத் தோன்றுவார்கள். இதற்குக் காரணம், அவர்கள் முன்பே செய்ய வேண்டிய வற்றை எல்லாம் செய்து முடித்ததுதான். வீட்டில் அம்பாரம் அம்பாரமாக நெல்லைக் குவித்து வைத்திருக்கிறான் ஒரு செல்வன். அவன் கால்மேல் கால் போட்டுக்கொண்டு வருவாரை யெல்லாம் வரவேற்று விருந்து வழங்கி இன்புறுகிறான். விவசாயம் இன்னதென்று தெரியாத

ஒருவன், ''இவனுக்கு எப்படி இந்த நிலை வந்தது?'' என்று அதிசயிக்கிறன். ''ஒரு வேலையும் செய்யாமல் சாப்பிடு கிறனே!'' என்றும் நினைக்கிறன். நெல் அறுவடையாவ தற்கு முன்பு அந்தச் செல்வனைப் பார்த்திருந்தால், அவன் உழைத்த உழைப்புத் தெரியும். அவ்வாறே பல பிறவி களில் பல்வேறு வகையில் உபாசனை செய்து அம்பிகையின் அருள் பெற்று இப்போது ஜீவன் முக்த தசையில் இருக் கிறர்கள் அன்பர்கள். ''அவர்கள் தொண்டு ஏதும் செய்வதில்லையே! அம்பிகையின் பாதத்தைத் தொழுவ தில்லையே! மனம் போனபடி நடக்கிறர்களே!'' என்று சிலருக்குத் தோன்றலாம்.

> ''சித்தம் சிவமாக்கிச் செய்தனவே தவமாக்கும்
> அத்தன்...''

என்று திருவாசகமும்,

> ''தேறும் மோனமா ஞான போதனர்
> செய்த செய்கையே செய்யும் மாதவம்
> கூறும் வாசகம் யாவும் மந்திரம்
> கொண்ட கோலமே கோல மாகுமால்''

என்று பாசவதைப் பரணியும் கூறுகின்றன. அத்தகையவர் களின் நிலையை அபிராமிபட்டர் இப்போது நினைக்கிறர். ''அவ்வாறு பலர் பழங்காலத்தில் இருந்தார்கள் அல்லவா?'' என்று கேட்கிறர்.

> **தொண்டு செய்யாது நின் பாதம் தொழாது**
> **துணிந்து இச்சையே**
> **பண்டு செய்தார் உளரோ இலரோ?**

''அவர்கள் அவ்வாறு இருப்பது சரியானல் நானும் ஏன் அப்படி இருக்கக்கூடாது?'' என்று கேட்கிறர்.

அப்பரிசு அடியேன்

கண்டு செய்தால் அது கைதவமோ, அன்றிச்

செய்தவமோ?

இப்படி அவர் கேட்பது உண்மையில் ஒன்றும் செய்யாமல் இருப்பதற்காக அல்ல. ''தாயே நான் உன்னை வணங்குவதில்லை. உன் தொண்டு செய்வதில்லை. அதனால் என்னை வெறுக்கக்கூடாது. அவற்றைச் செய்யாதவர்களை உயர்ந்த அநுபூதி நிலையில் நீ வைத்திருக்கவில்லையா?'' என்று வேடிக்கையாகக் கேட்கிறார். பெரியவர்கள் ஒன்றும் செய்யாமல் இருப்பது கண்டு நாமும் அப்படி இருக்கலாம் என்று சிலர் சொல்வதுண்டு. பரீட்சைக்கு நன்றாகப் படித்து எழுதவேண்டியவற்றையெல்லாம் எழுதி, அதில் தேர்ச்சி பெற்றவர்கள், தாம் படித்த அடிப்படைப் புத்தகங்களை மறுபடியும் படிப்பதில்லை. கற்று மேல் போன அவர்களுக்கு அந்தப் புத்தகங்களால் பயன் ஒன்றும் இல்லை. அதைக்கண்டு கல்லாத ஒருவன், 'அவரும் அதைப் படிக்கிற தில்லை; நானும் அதைப் படிக்கமாட்டேன்' என்று சொல்லலாமா? தாயுமானவரைப்போல நாமும், ''மலர் பறித்து இறைவனுக்கு அருச்சனை செய்யமாட்டோம். இறைவனைக் கும்பிடமாட்டோம்'' என்று சொல்லலாமா? எதிரில் நின்ற மலரிலும் இதய கமலத்திலும் இறைவனைக் காணும் உயர்ந்த பக்குவத்தில் நின்று அவர் பேசினார். நமக்கும் அந்தப் பக்குவம் வந்தால் பூசை முதலியன செய்யவேண்டியதில்லை. அநுபவ இன்பத்தில் புகுந்தவர் களுக்குச் சாதனங்களாகிய செய்கைகள் தாமே நழுவி விடும். அவை தாமே நழுவுவது வேறு, நாமாகச் செய்யாமல் சும்மா இருப்பது வேறு. முன்னவர் நிலை செயலற்ற நிலை; பின்னவர் நிலை சோம்பல் நிலை. இரண்டும் ஒன்றாகுமா?

''பண்டு தங்கள் இச்சைபோல் நடந்து யாதும் செய்யாமல் பலர் இருந்தார்களே; நானும் அப்படி இருக்கக் கூடாதா?'' என்று கேட்டவர் சோம்பேறிகள் சொல்லுவதை நினைத்தே அப்படிச் சொன்னார். ஏனெனில், உயர்ந்த அநுபூதிமான்கள் எப்படியிருக்கிறார்களோ அப்படி நாமும் இருக்கலாம் என்று எண்ணுவது தவறு என்பதை இவர் நன்கு அறிந்தவர்.

அபிராமிபட்டர், ''நானும் அந்த ஞானிகளைப்போலச் செய்யக்கூடாதா?'' என்று கேட்டவர் பின்பு, ''தாயே, நான் எது செய்தாலும் என்னைப் பொறுத்தருள வேண்டும். வெறுக்கக்கூடாது. எனக்கு உன்னையன்றிப் புகல் வேறு இல்லை'' என்கிறார்.

மிண்டு செய்தாலும் பொறுக்கை நன்றே; பின்
வெறுக்கை அன்றே.

கல்லூரியில் படித்துப் பரீட்சை எழுதிய இளைஞன் ஒருவன் தன் வீட்டுக்கு வந்திருக்கிறான். அப்போது வீட்டில் இருக்கிற சிறு பையனுக்குப் பரீட்சை நடக்கப் போகிற காலம். அம்மா அவனைப் பார்த்து, ''இன்னும் ஒரு வாரத்தில் பரீட்சை வருகிறது; நீ படிக்கவேண்டும்'' என்று சொல்லுகிறாள். பையன் தாயினிடம் உள்ள உரிமையினால், ''போ அம்மா; அண்ணா படிக்கிறானா? நான் மட்டும் ஏன் படிக்கவேண்டும்?'' என்று கெஞ்சிக்கொண்டே கேட்கிறான். அப்போதைக்கு அவன் அப்படி வேடிக்கையாகக் கேட்டாலும் அவன் நல்ல பையனானதால் பின்பு புத்தகத்தைப் படிக்க ஆரம்பிக்கிறான். அபிராமிபட்டரும் தாயிடம் நெருங்கிக்கொஞ்சும் குழந்தையாதலால், முதலில், ''நானும் அவர்கள் மாதிரி செய்யக்கூடாதா?'' என்று சொல்லிவிட்டு, ''அம்மா, என் குற்றங்களையெல்லாம் பொறுத்துக் காள்'' என்று விண்ணப்பித்துக்கொள்கிறார்,

தொண்டுசெய் யாதுநின் பாதம் தொழாது
துணிந்திச்சையே
பண்டுசெய் தார்உள ரோஇல ரோ? அப்
பரிசடியேன்?
கண்டுசெய் தால்அது கைதவ
மோஅன்றிச் செய்தவமோ?
மிண்டுசெய் தாலும் பொறுக்கைநன் றேபின்
வெறுக்கைஅன்றே.

*[தாயே, நின் திருவடிக்குக் கைங்கரியம் செய்யாமலும் நின் பாதத்தை வணங்காமலும் உண்மையான பொருள் இன்னதென்று உறுதியாகத் தெளிந்து, தம் மனம் விரும்பியவற்றையே செய்தவர்கள் பழங்காலத்தில் இருந்தார்களோ இல்லையோ? (அப்படி மெய்ஞ்ஞானியர் உன்னுடைய திருவருள் அநுபவத்தால் இருந்தார்களாதலால்) அவ்வண்ணமே அடியேனும் அவர்களைப் பார்த்து என் இச்சைக்குரிய செயல்களைச் செய்தால் அது வஞ்சகமாகுமா? அப்படியன்றி அவர்களுடைய செய்கைகள் எல்லாம் தவமாவது போல என் செய்கைகளும் தவமாகுமா? அடியேன் மாறுபட்ட செயல்களைச் செய்தாலும் நான் உன் குழந்தை என்ற உண்மை கருதி என்னைப் பொறுப்பது நன்மையாகும், அப்படியின்றி என்னை வெறுத்துப் புறக்கணித்தல் நன்று அன்று.*

*கைதவம் - வஞ்சனை. மிண்டு - மாறுபாடான செயல் கொடிய செயல் என்பது மாகும்.]*

*இது அபிராமி அந்தாதியில் 45-ஆம் பாட்டு.*

# அன்னையின் கருணை

உலகில் பெரியவர்களாகப் போற்றுதற்குரியவர்களிடம் உள்ள பெருங்குணங்களில் மிகச்சிறந்தது கருணை. அதனால் அவர்கள் எல்லா உயிர்களிடத்தும் அன்பு பூண்டு விளங்குவார்கள். பிறர் ஏதேனும் துன்பம் இழைத்தால் அதைப் பொறுத்துக்கொண்டு அவர்களிடத்திலும் அன்பு பாலிப்பதை மிகச் சிறந்த பண்பாகக் கொள்வர் பெரியர்.

''இன்னாசெய் தார்க்கும் இனியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு''

என்று திருக்குறள் கூறுகிறது.

மக்களில் சிறந்த சான்றோர்களுக்குப் பிறர் குற்றம் பொறுத்து அருளுவது சிறந்த இலக்கணம் என்றால், எல்லாக் குணங்களும் நிரம்பியவனென்று போற்றும் இறைவனுக்கு உள்ள கருணையை அளவெடுத்துச் சொல்ல முடியாது. அவனை அருட்கடல் என்று பெரியவர்கள் போற்றுகிறார்கள். கடல் தன்னிடம் வந்து சேரும் எல்லாவற்றையும் ஏற்றுக்கொண்டு தன் இயல்பு மாறாமல் இருப்பது போல, இறைவன் தன்னைப் போற்றினாலும் தூற்றினாலும் கருணை மாறாத பேராளன். தனக்குத் தீங்கு இழைக்கிறார்களே என்ற சினம், சிறிய அறிவும் சிறிய ஆற்றலும் உடைய மனிதர்களுக்கு உண்டாவது இயல்பு. இறைவனுக்கோ யாராலும் தீங்கு இழைக்க முடியாது.

தாய் தன் பொல்லாத குழந்தைக்கு உணவு வழங்குகிறாள். பிள்ளை தன்னை வைது இழிவு செய்தாலும் அவன் நன்மை பெற வேண்டுமென்றே வேண்டுகிறாள். ''பெற்ற

மனம் பித்து, பிள்ளை மனம் கல்லு'' என்ற பழமொழி தாயின் அன்பை நன்கு எடுத்துக் காட்டுகிறது.

தெய்வம் கருணைக்கு இருப்பிடம், தாய் தயையின் நிலைக்களம்.

''தாயிற் சிறந்த தயாவான தத்துவனே''

என்று மாணிக்கவாசகர் பாடுவார். ''அன்னை தயையும்'' என்பது பழம்பாட்டு.

தெய்வமே தாயாக இருந்துவிட்டால் கருணை வெள்ளமாகப் பேருக்கெடுத்தோடும். அம்பிகை கருணையே வடிவானவள். சிவபெருமானுடைய திருவருளையே சக்தியாக வழிபடுவது மரபு. ''அருளது சத்தியாகும் அரன் றனக்கு'' என்று சாஸ்திரம் பேசுகிறது.

தெய்வம் அருளுடையதாக இருப்பதனுல்தான் நாம் உய்கிறேம். நாம் செய்யும் தீச்செயல்களுக்கெல்லாம் தக்கபடி தண்டனை கொடுப்பதானல் எந்தக் காலத்திலும் நாம் உய்யவே முடியாது. தெய்வம் தன் திருவருளால் நம்முடைய குறைகளை யெல்லாம் மறந்து நாம் சிறிதளவு அன்பு செய்தாலும் அதைப் பெரிதாகப் பாராட்டி அருள் புரிகிறது.

நல்லவர்களை நாம் அவமதித்திருக்கிறேம். பக்தர்களை வேஷதாரிகள் என்று இழித்திருக்கிறேம். கடவுளை வழிபட்டு வாழும் பலரை நாம் நிந்தித்திருக்கிறேம். இவற்றையெல்லாம் பெரிய குற்றமாக எண்ணி நமக்குத் தண்டனை தரப்புகுந்தால் நாம் இன்னும் பல்லூழி காலம் நரகத்தில் உழலவேண்டியதுதான். அம்பிகை அப்படிச் செய்கிறதில்லை.

சிறு குழந்தைகள் தங்களுக்குள் அடித்துக்கொண்டாலும், சில சமயங்களில் அன்னையை வைதாலும்

அவள் அவற்றையெல்லாம் பொருட்படுத்துவதில்லை. வேண்டிய உணவை உரிய காலத்தில் குழந்தைகளுக்கு ஊட்டுகிறாள். எப்போதாவது குழந்தையை அடித்து விட்டால் பிறகு அதற்காக வருந்தி இறுக அணைத்துக் கொள்கிறாள்.

அன்னை அபிராமி இந்தத் தாயைவிட ஆயிரம் மடங்கு கருணை உடையவள். நாம் திருந்தவேண்டுமென்றும், தன்னோடு இருந்து வாழவேண்டுமென்றும், தன் அரவணைப்பில் நல் வாழ்வு பெறவேண்டுமென்றும் திருவுள்ளம் கொண்டு பல பல நன்மைகளைச் செய்கிறாள். அத்தகையவளிடம் உண்மையான பக்தனுக்கு அச்சம் உண்டாகவே உண்டாகாது. ''உன்னுடைய தயை என்னைக் காப்பாற்றும்'' என்ற உறுதியோடு இருப்பான்.

இத்தகைய எண்ணம் காரணமாக மேலும் மேலும் பிழை பண்ணிக்கொண்டே இருப்பவன் பக்தன் ஆகமாட்டான். 'நம்மை அறியாமலே பல தவறுகள் செய்கிறோம். நம் மனம் அறிய எந்தப் பிழையும் செய்யலாகாது. ஆனால் நம்மை அறியாதபடி தவறு நேருமானால் அம்பிகை நம்மைப் பொறுத்தருளிக் காப்பாற்றுவாள்' என்றே உண்மைப் பக்தன் எண்ணுவான், ஆகையால் ஒவ்வொரு கணமும் மகா மாதாவை எண்ணி, யாருக்கும் துன்பம் இழைக்காமல் வாழ்வான்.

பாவங்களை யெல்லாம் மனம் அறியச் செய்துவிட்டு 'பல தீட்டுக்கு ஒரு முழுக்கு' என்று அம்பிகையினிடம் வந்து அவளைப் புகழ்ந்தால் அது உண்மையான பக்தி ஆகாது. பக்தன் மிகத் தூயவனாக இருந்தாலும் எங்கே அசுத்தம் நம்மைப் பற்றிவிடுமோ என்று அஞ்சுவான். சிறிய குற்றத்தைச் செய்தாலும் பெரிய குற்றத்தைச் செய்தவனைப் போல வருந்துவான். தன் குணங்களைச் சிறிதளவாகவும் குற்றங்களைப் பெரியனவாகவும் காண்பது சான்றோர்

இயல்பு. பக்தனும் அப்படித்தான் இருப்பான். பக்தியில் எவ்வளவு உயர்ந்தவனுக இருந்தாலும், ''தாயே, எனக்கு இன்னும் தக்கபடி பக்தி உண்டாகவில்லையே!'' என்று கதறுவான். ஆழ்வார்களும் நாயன்மார்களும் பாடிய பாடல் களில் இந்த நைச்சியாநுசந்தானத்தைக் காணலாம். தீங்கைக் கண்டால் இயல்பாகவே அருவருப்பு உண்டாகும் தன்மையைப் பயிர்ப்பு என்று சொல்வார்கள். அந்தப் பண்பு அவர்களிடம் மிகுதி.

அம்பிகையை ஒரு கணம் நினையாமல் இருந்தாலும் பல யுகம் மறந்தது போலத் துடித்துப்போவார்கள் அன்பர்கள். அபிராமிபட்டர் சிறந்த அன்பராக இருந்தாலும் அம்பிகை யின் கருணைக்கு முன்னர்த் தம்முடைய அன்பு எத்துணை அற்பமானது என்று எண்ணுகிறுர். தாம் எத்தனையோ அபசாரங்களைப் புரிபவரைப்போல நினைத்து மறுகுகிறுர். இது பிரேமையின் இயல்பு.

"தாயே, நான் குறைபாடு உடையவன். குற்றம் செய்வது என் இயல்பு. நீ தயையால் நிறைவுடையவள். என்னைப் பொறுத்தருள வேண்டும்'' என்று மன்றுடுகிறுர்.

முதலில் பொதுவாகப் பெரியவர்கள் இயல்பு குற்றம் செய்தவர்களைப் பொறுப்பது என்று கூறியவர், அப்பால் அம்பிகையை நோக்கித் தம் குறைகளைப் பொறுத்து ஆட் கொள்ள வேண்டும் என்று கூற வருகிறுர்.

வெறுப்பதற்குரிய செயல்களைத் தம்மைச் சார்ந்த அடியவர்கள் செய்தால், அவற்றைப் பெரியனவாகப் பாராட்டாமல், இவர்கள் நன்மையன்றி வேறு புகல் இல்லாதவர்கள் என்று எண்ணி, அவர்கள் குற்றங்களைப் பொறுக்கும் இயல்பு பெரியவர்களுக்கு உண்டு. இது இன்று நேற்று வந்த இயல்பு அன்று. நெடுங்காலமாகக் குணங் களால் மிக்கவர்களிடம் காணப்படும் சீரிய பண்பு இது. இதை முதலில் எடுத்துச் சொல்கிறுர்.

வெறுக்கும் தகைமைகள் செய்யினும்
தம் அடியாரை மிக்கோர்
பொறுக்கும் தகைமை புதியது
அன்றே?

[தம் அடியவர்கள் அவர்களை வெறுப்பதற்குரிய இயல்பையுடைய குற்றங்களைச் செய்தாலும் அவர்களைக் குணங்களால் மிக்க சான்றோர்கள் பொறுக்கும் இயல்பை மேற்கொண்டு செயல் செய்தல் புதியது அன்றே; இது நெடுங்காலமாக வந்த பழக்கம் அல்லவா?

தகைமைகள் - இயல்புடைய செய்கைகள்; பண்பாகு பெயர்.]

அபிராமிபட்டர் தம் தாழ்வைக் கூறுவதோடு ஒரு வகையில் அம்பிகையின் தயைக்குப் பாத்திரராவதற்குரிய உரிமை உண்டு என்பதையும் சொல்கிறார். அப்படிச் சொல்வதற்கு முன் அம்பிகையை விளிக்கிறார். தம்முடைய கருத்துக்கு அரண் செய்யும் வகையில் அம்பிகையை வருணிக்கிறார்.

அன்னை பரமசிவனுடைய வாமபாகத்தில் இணைந்திருக்கிறவள்; பொன்போன்றவள். அவளைப் பெற்றமையால் இறைவன் பொருள் படைத்த செல்வனைப்போலச் செம்மாந்து விளங்குகிறான். இறைவன் எத்தகையவன்? அவனுடைய கருணையை அவன் திருக்கழுத்துக் காட்டுகின்றது. எல்லாரும் அஞ்சும்படி வந்த ஆலகால விஷத்தை அவன் உண்டான். அதனால் அவன் கண்டம் கறுத்தது. ஆயினும் அதை அவன் ஏற்றுக்கொண்டான். கொடிய நஞ்சையும் ஏற்றுத் தன் கழுத்தில் அழகாக அமைத்துக் கொண்ட பெருமான் அவன்.

“உன்னுடைய கணவன் நஞ்சையும் ஏற்றுக்கொண்டவன் அல்லவா? அவனுடைய வாழ்வுக்குப் பொன்னாக அவனுடைய இடப்பாகத்தில் இணைந்து உறையும் தாயே! நீ

கொடியவனுகிய என்னை ஏற்றுக்கொள்ளக்கூடாதா?'' என்று சொல்லாமற் சொல்வதுபோல இந்த விளியை அமைக்கிறார்.

புது நஞ்சை உண்டு
கறுக்கும் திருமிடற்றான் இடப்பாகம்
கலந்த பொன்னே!

அப்பொழுதுதான் தோன்றிய நஞ்சாதலின் புது நஞ்சு என்றார். கொதிக்கக் கொதிக்க இருந்ததை அஞ்சாமல் அப்படியே விழுங்குபவனைப்போல உண்டான். அந்தக் கருணைச் செயலை அடையாளங் காட்டிக்கொண்டு விளங்கு கிறது அவனுடைய கறுத்த ஸ்ரீகண்டம். பொன்னே என்ப தற்குப் பொன் போன்றவளே என்றும், திருவே என்றும், பொன்னிறம் உடையவளே என்றும் பொருள் கொள்ளலாம்.

அம்பிகை பரமசிவனுடைய செல்வமாக இருப்பவள்; ஆதலின் பொன்னாக விளங்குகிறாள். லக்ஷ்மிக்கும் லக்ஷ்மீ கரம் தருகிறவள்; ஆதலின் திருவாகப் பொலிகிறாள். சுவாதிஷ்டானத்தில் காகினி என்னும் திருநாமத்தோடு அம்பிகை எழுந்தருளியிருக்கும்போது பொன்னிறம் உடைய வளாகக் காட்சி அளிக்கிறாள்; ''பீதவர்ணா'' என்பது லலிதா சகசிரநாமம்.

குற்றம் பொறுத்தல் பெரியோருக்கு இயல்பு என்று பொதுவாகக் கூறி, குறிப்பாகப் பரமசிவன் செய்தது போல நீயும் செய்யவேண்டும் என்று அம்பிகையை விளிக்கும் தொடரால் புலப்படுத்தி, இறுதியில் நான் உனக்குத் தவறு செய்தாலும் உன்னை மறவாமல் வாழ்த்துபவன் என்ற உரிமையைச் சொல்கிறார்.

''தாயே, நீ என்னை மறுப்பதற்குரிய அபசாரங்கள் பலவற்றைச் செய்கிறேன். ஆனாலும் உன்னையே நான்

வாழ்த்துகிறேன். புகல் புகுவதற்கு அயலிடம் உண்டு என்ற எண்ணம் எனக்கு இல்லை. எனவே நீ என்னை மன்னித்து எனக்கு அருள் செய்யவேண்டும்'' என்று தம் வேண்டு கோளைக் குறிப்பாகச் சொல்லுகிறார்.

மறுக்கும் தகைமைகள் செய்யினும்
யான் உன்னை வாழ்த்துவனே!

[அடியேனை நீ மறுப்பதற்குரிய இயல்பையுள்ள செயல் களைச் செய்தாலும் அடியேன் உன்னையே வாழ்த்துவேன்.]

'என் அறியாமையால் நீ வெறுப்பதற்குரியவற்றைச் செய்தாலும் உன்னை வாழ்த்திப் புகலடைகிறேன்' என்றார். 'நீ என்னை மறுக்கும் செயல்களைப் புரிந்தாலும் நான் உன்னை நீங்காமல் உன்னையே பற்றிக்கொண்டு வாழ்த்துவேன்' என்றும் பொருள் கொள்ளலாம். ''துடைக்கினும் போகேன்'' என்பது தேவாரம்.

''அரிசினத்தால் ஈன்றதாய் அகற்றிடினும் மற்றவள்தன்
அருள்நினைந்தே அழும்குழவி யதுவேபோல்
இருந்தேனே''

என்பது குலசேகரப்பெருமாள் திருவாக்கு.

குற்றம் சிறிதாக இருந்தாலும் அதைப் பெரிதாக எண்ணி மன்னிப்புக் கேட்கும் பக்தர் இயல்பும், அடியார் குறைகளை எண்ணாமல் அருள்புரியும் அம்பிகையின் இயல்பும் இந்தப் பாட்டினால் தெரியவருகின்றன.

வெறுக்கும் தகைமைகள் செய்யினும்
தம்அடி யாரைமிக்கோர்
பொறுக்கும் தகைமை புதிய
தன்றே?புது நஞ்சைஉண்டு
கறுக்கும் திருமிடற் றான்இடப்
பாகம் கலந்தபொன்னே!
மறுக்கும் தகைமைகள் செய்யினும்
யான் உன்னை வாழ்த்துவனே.

[புதிய ஆலகால விடத்தை நுகர்ந்து கறுத்த திருக் கழுத்தை உடைய சிவபிரானது வாம பாகத்தில் பொருந்திய பொன்னிறமேனிப் பெருமாட்டியே! தாம் வெறுப்பதற்குரிய இயல்பினவாகிய செயல்களைத் தம் அடியவர்கள் செய் தாலும் அவர்களை அறிவினால் மிக்க பெரியோர்கள் பொறுத்தருளும் இயல்பு இவ்வுலகத்தில் இன்று நேற்று வந்த புதிய வழக்கம் அன்றே; ஆதலால் நீ ஏற்றுக் கொள்ளாது விலக்கும் இயல்பையுடைய செயல்களை அடியேன் செய்தாலும் (அவற்றை நீ பொறுத்தருள்வாய் என்ற தைரியத்தால் மீட்டும்) நின்னை வாழ்த்தித் துதிப்பேன்.]

இது அபிராமி அந்தாதியில் 46-ஆவது பாடல்.

—ooꕥoo—

# இன்ப வாழ்வு

வாழ்வு என்பது யாது? இந்தக் கேள்விக்குப் பலர் பல வகையில் விடை கூறுவார்கள். யாரேனும் ஒருவர் உயிருடன் இருக்கிறாரா, இல்லையா என்ற ஐயம் உண்டாகிப் பின்பு அவர் வாழ்கிறார் என்று தெளியும்போது, வாழ்வு என்பது உடம்பும் உயிரும் ஒன்றியிருப்பது என்று பொருள்படும் இங்கே வாழ்வுக்கு எதிராக இருப்பது சாவு. உயிரோடு இருப்பது மட்டும் வாழ்வு என்று சொல்லும்போது சாவு இல்லை என்பதை மட்டும் தெரிந்து கொள்ளுகிறோம். ஆனால் ''முப்பது வருஷம் வாழ்ந்தாரும் இல்லை; முப்பது வருஷம் கெட்டாரும் இல்லை'' என்ற பழமொழி சொல்லும்போது வாழ்வு என்பது வேறு ஒன்றைக் குறிக்கிறது. கேடு அல்லது தாழ்வு இல்லாமல் வாழும் நிலையையே அது புலப்படுத்து கிறது. உடலும் உயிரும் சேர்ந்து வாழும் வாழ்வுக்கு மேலே, இன்பமாக வாழும் வாழ்க்கையையே அது குறிக்கிறது. ஆகவே இன்ப வாழ்வே வாழ்வு என்று சொல்வதற்குரியது. உயிருடன் வாழ்வது வாழ்வென்றால் இன்பமாக வாழ்வது வாழும் வாழ்வு என்றும், துன்பத்துடன் வாழ்வது வாழாத வாழ்வு என்றும் கூறலாம். துன்பம் நிரம்பிய வாழ்வை அவ்வாறு கூறுவது பொருந்தும் என்பதை,

''வாழ்கின்றாய் வாழாத நெஞ்சமே''

என்ற திருவாசகப் பகுதியிலிருந்து தெரிந்துகொள்ளலாம்.

இன்பவாழ்வு வாழும் மனிதன் வாழ்வுடையவன் என்பதிலும் ஒரு தடை வருகிறது. அந்த வாழ்வு எப்போதும் இருப்பதில்லை. ஏதோ ஒரு காலத்தில்

தொடங்கி மற்ருெரு காலத்தில் போய்விடுகிறது. சில காலத்துக்கு மட்டும் இன்பமாக வாழ்கிருன். அதைத் தானே, 'முப்பது வருஷம் வாழ்ந்தவரும் இல்லை' என்ற பழமொழி கூறுகிறது? மனிதனுடைய ஆயுள் நூருனால் முப்பது ஆண்டு வாழ்வு முப்பது சதவிகிதமாகிறது. இப்போதெல்லாம் பள்ளிக்கூடத் தேர்வில் நாற்பது சதவிகிதம் புள்ளி பெற்ருல்தான் தேர்ச்சி பெறலாம். ''அஞ்சுக்கு இரண்டு பழுதில்லை'' என்ற பழமொழியும் அதையே குறிக்கிறது. ஆகவே முப்பது சதவிகிதம் இன்ப வாழ்வாக இருந்தால், சோதனையில் வெற்றி உண்டாகாது. அதை வாழ்வு என்று சொல்வது பிழை. பெரும்பான்மையாக உள்ள எழுபது சதவிகிதத்தைக் கொண்டே வாழ்வின் இயல்பைத் தெரிந்துகொள்ளவேண்டும். அப்படிப் பார்த்தால் யாரும் இன்பவாழ்வு வாழ்ந்தவராகத் தோன்ருது. 'பிறந்தோர் உறுவது பெருகிய துன்பம்' என்று மணிமேகலை கூறுகிறது.

முப்பது ஆண்டு வாழும் இன்ப வாழ்வைப் பெரிதாக எண்ணலாம் என்று சொல்வதற்கு மற்ருெரு தடையும் உண்டு. முப்பது ஆண்டுகளும் ஒரே இன்பமாய் வாழ இயலாது. இன்பமும் துன்பமும் கலந்து கலந்தே அநுபவிக்கும்படி அமைந்தது மனிதனுடைய வாழ்வு. புண்ணியம் பாவம் என்னும் இரண்டும் கலந்த மிச்ர கர்மத்தின் பயனை அநுபவிக்கப் புகும் மனிதன் தனியான இன்பத்தையோ தனியான துன்பத்தையோ அநுபவிப்பது இல்லை. எது மிகுதியாக இருக்கிறதோ அதைக்கொண்டே இன்பம் அநுபவிக்கிருன் என்றும், துன்பப்படுகிருன் என்றும் சொல்கிருேம். தொடர்ந்து இடையீடில்லாத இன்ப வாழ்வு இவ்வுலகில் யாருக்கும் சித்திப்பதில்லை. ஆகவே, வாழ்வு என்பது இன்ப வாழ்வைக் குறிப்பதாகக் கொண்டால், உலகத்தில் யாருமே வாழவில்லையென்றும் யாவரும் போலி

வாழ்வே வாழ்கிறார்கள் என்றும் தெளிவாகும். அது கருதியே பெருமக்களெல்லாம், ''வாழ்வாவது மாயம் இது மண்ணாவது திண்ணம்'' என்றும், ''ஆதலால் பிறவி வேண்டேன் அரங்கமா நகரு ளானே'' என்றும் பாடினார்கள்.

அப்படியானால், என்றும் இன்பமாகவே வாழும் வாழ்க்கை ஏதும் இல்லையா? நாம் துன்பம் அடைவதற்குக் காரணம் நம் வினை. உடம்பு, மனம் முதலியவற்றின் தொடர்பு இருக்கும் வரையிலும் வினை இருக்கும்; துன்பமும் இருக்கும். இவை யாவும் நீங்கிக் கர்ம பந்தமற்றுச் செயலற்று வாழும் வாழ்வு ஒன்று உண்டானால் அதுவே என்றும் குன்றாத இன்ப வாழ்வாக இருக்கும். அந்த வாழ்வையே பேரின்ப வாழ்வென்றும், வீடென்றும், மோட்ச வாழ்வென்றும் சொல்வார்கள்.

கவலையும் துன்பமும் இல்லாமல் அமைதியும் இன்பமும் பெற்ற வாழ்வு ஒன்று உண்டென்றால் அதை எப்படிப் பெறுவது? அதற்குத் தக்க வழி எது? நம்முடைய முயற்சியினால் அதைப் பெற முடியுமா? அன்றி வேறு துணையினால் பெறக்கூடுமா? இத்தகைய கேள்விகளுக்கு விடை கூறுகிறார் அபிராமிபட்டர்.

வாழ முடியாதபடி தத்தளித்துப் பணத்தினால் வாழலாம் என்று எண்ணி அதைத் தேடுகிறான் ஒருவன். பணத்தை ஈட்டி வாழத் தலைப்படுகிறான். ஆனால் அவனுடைய வாழ்வில் அமைதி உண்டாவதில்லை. வாழ வகை செய்வது பணம் அன்று என்ற முடிவுக்கு வருகிறான். கல்வியிலே சிறந்து கூரிய அறிவுடையவனாக ஒருவன் விளங்குகிறான். பலரும் அவனைப் புகழ்கிறார்கள்; வேண்டியவற்றை அவனுக்கு வழங்குகிறார்கள். ஆனாலும் அவன் சாந்தியுடன் வாழ முடிவதில்லை. அறிவினாலும் இன்பவாழ்வு வாழமுடியாது என்று முடிவுகட்டுகிறான். இப்படியே உடல் வலிமையினாலும், மக்களுடைய துணையினாலும், பல்வகைப்

பண்டங்களை ஈட்டுவதனால் இன்பவாழ்வைப் பெற இயலாது என்ற முடிவுக்கே வரவேண்டி நேரும். துன்பத்துக்குக் காரணமான அறியாமை, கர்மம் ஆகிய வற்றைப் போக்கிப் பிறப்பு இறப்பு என்ற இரண்டு பெருந் துன்பங்களையும் வாராமற் செய்து காப்பாற்றும் ஆற்ற லுள்ள துணையொன்று கிடைத்தால் இன்பவாழ்வை அடையலாம்; வாழாத வாழ்வினின்றும் நீங்கி வாழும் வாழ்வைப் பெறலாம்.

'அவ்வாறு செய்தற்குரிய துணையை நான் கண்டு கொண்டேன்'' என்று துள்ளிக் குதிக்கிறார் அபிராமி பட்டர்.

வாழும்படி ஒன்று கண்டு கொண்டேன்

என்று தொடங்குகிறார். 'நான் என்றும் இன்பமாக வாழும் படியாக ஒரு துணையை, ஒரு பரம்பொருளைக் கண்டு கொண்டேன்'' என்கிறார். கண்டுகொண்டேன் என்பதைக் கண்டேன் என்ற பொருளை உடையதாக வைத்து உரை கூறுவதைவிட கண்டேன், பிறகு கொண்டேன் என்று இரு வேறு நிலையில் உள்ள செயல்களாக வைத்துப் பார்ப்பது சிறப்பு. காணுவது மெய்ஞ்ஞானத்தால் அறிவது; கொள்வது தனக்கு உரியதாகக் கொண்டு நுகர்வது.

> ''கந்தன்என் றென்றுற் றுனைநாளும்
> கண்டுகொண் டன்புற் றிடுவேனோ''

என்ற திருப்புகழில் காணுவதும் கொள்வதும் தனித் தனிச் செயலாக இருப்பதைப்போல இங்கும் கொள்ளவேண்டும்.

''இதுவரையில் வகை தெரியாமல் திகைத்த நான் இப்போது கண்டுவிட்டேன்; என் கைக்கு அகப்பட்டு விட்டது; அதை என்னுடையதாகவே அடைந்துவிட்டேன்'' என்று பொருள் விரிக்கும்படி இருக்கிறது இது. ''இதுவரை யில் வாழ்வதற்கு இது பயன்படும் என்று அறிவினால் அறிந்தவை, கைக்கொண்டபிறகு பயன்படாமல் ஒழிந்தன,

கண்டதோடு நின்றவை பல. கண்டு பிறகு கொண்டு அப்பால் கைவிட்டவை பல. இப்போதுதான் நிச்சயமாக இதுதான் வாழும் வகைக்கு உரியது என்று ஒன்றைக் கண்டேன்; அதைக் கொண்டேன்; விடாமல் கைப்பற்றிக் கொண்டேன்'' என்று சொல்வது போல இருக்கிறது.

காணாது திகைத்து வருந்தியவன் கண்டபோது அடையும் வியப்புணர்ச்சி தோன்றும்படியாக,

வாழும்படி ஒன்று கண்டு கொண்டேன்

என்கிறார். வாழ்வதற்குப் பல பல வேண்டுமென்று மக்கள் ஆசைப்பட்டுத் தேடிப் பலவற்றை ஈட்டுகிறார்கள். அவற்றால் அவர்கள் துன்பத்தையே அடைகிறார்கள்.

> ''யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
> அதனின் அதனின் இலன்''

என்ற உண்மை புலனாகிறது. அப்படிப் பலவற்றை நம்பிக் கைக்கொள்ளவில்லை அபிராமிபட்டர். ஒன்றே ஒன்றுதான் வாழும்படி செய்யும், அந்த ஒன்றையே கண்டு கொண்டேன் என்றார்.

> ''ஒன்றே நினைந்திருந்தேன்; ஒன்றே துணிந்தொழிந்தேன்;
> ஒன்றேஎன் உள்ளத்தின் உள்ளடைத்தேன்''

என்பது காரைக்காலம்மையார் திருவாக்கு. அந்த ஒன்றை மறந்துவிட்டு உலகெல்லாம் எதை எதையோ தேடி அலைகிறதனால் மனித வாழ்வு வீணாகிப் போகிறது.

''ஒன்று கண்டு கொண்டேன்'' என்றவர் அதை இன்னதென்று சொல்லவருகிறார். அது, இதோ பாருங்கள் என்று சுட்டிக்காட்ட முடியாதது; இன்ன இயல்புள்ளது என்று வருணிக்கமுடியாதது; இப்படி இருப்பது என்று

மனத்தால் பற்றித் தெரிந்துகொள்ள முடியாதது. மனத்தாலும் வாக்காலும் பற்ற முடியாத பரம்பொருள் அது. அவற்றுக்கு அகப்பட்டவற்றை நாம் கண்டு பெற்ற பயன் நமக்குத் தெரியுமே! இதுவோ மனத்தினுல் எவ்வளவு விரும்பினுலும் அணுகவொண்ணுதது; இத்தகையது என்று வாயினுல் எடுத்துச் சொல்ல முடியாதது.

> மனத்தே ஒருவர்
> வீழும்படி அன்று; விள்ளும்படி அன்று.

அபிராமிபட்டர் அம்பிகையைத்தான் இவ்வாறு கூறுகிருர். அப்பெருமாட்டியின் திருவருள் ஒன்றினுல்தான் என்றும் பொன்றுத நிரதிசய இன்ப வாழ்வு கிடைக்கும். ஆகவே அவர் வாழுவதற்குத் துணையாகக் கண்டுகொண்ட மெய்ப்பொருள் அம்பிகையே. அவள், 'அசிந்த்ய ரூபா' (லலிதா சகசிரநாமம், 554) என்று போற்றப் பெறுபவள். மனம் அணுகாத பரதேவதை அவள். மனம் மட்டுமா? வாக்கும் அவளை எட்டாது. 'மனோவாசாமகோசரா' (லலிதா. 415) என்பது அவள் ஆயிரம் திருநாமங்களில் ஒன்று. ஆதலின் அவளை, 'மனத்தினுல் ஒருவர் விரும்பித் தியானம் செய்யும் முறையில் உள்ளது அன்று; வாயினுல் இத்தகையது என்று சொல்லும் வண்ணம் அமைந்ததன்று' என்று கூடுகிருர்.

தனி மனிதன் தன்னுடைய மனத்தாலும் வாக்காலும் உணரவொண்ணுத பொருள் என்றபிறகு, பலர் கூடிப் பெரு முயற்சி செய்தால் கண்டுபிடித்துவிடலாமோ என்ற கேள்வி எழலாம். அதற்கு விடை கூறுவாரைப்போல, 'அந்தப் பொருள் பிரபஞ்சத்தின் அளவுக்குள் அமைந்தது. அன்று; பிரபஞ்சத்திலுள்ள உயர்ந்த பொருளுக்கும் பொருளாய் விரிந்த பொருளுக்கும் விரிந்த பொருளாய் ஆழ்ந்த பொருளுக்கும் ஆழ்ந்த பொருளாய்

இருப்பது' என்பதை உணர்த்த வருகிறார். அப்படிச் சொல்லாமல் அந்தக் கருத்துக் குறிப்பாகப் புலப்படும்படி, 'அது ஏழு கடலுக்கும் எட்டாதது; ஏழு உலகங்களுக்கும் கிட்டாதது; எட்டு மலைகளுக்கும் தட்டுப் படாதது' என்கிறார்.

வேலை நிலம் ஏழும் பருவரை எட்டும் எட்டாமல்

வேலை ஏழும், நிலம் ஏழும் என்று கூட்டவேண்டும். கடல்கள் ஏழு என்பர். உப்புக்கடல், தயிர்க்கடல், பாற் கடல், நன்னீர்க்கடல், கட்கடல், நெய்க்கடல், கருப்பஞ் சாற்றுக் கடல் என்பன அவை. கடல் கரையற்றது, ஆழ மானது. அவற்றிற்கே எட்டாதது என்பதனால் வரையறை யற்றது, எல்லாவற்றிலும் ஆழமானது என்பது பெறப் படும். ஏழு உலகம் என்பது ஒரு மரபு. உலகம் விரிவுடை யது. உலகங்களைவிட மிகவிரிவானது அந்தப் பொருள். உலகத்துக்கு எல்லையாய் அஷ்ட குலாசலங்கள் உண்டு என்பர். மலை உயரத்துக்கும் அளவின்மைக்கும் எடுத்துக் காட்டாக இருப்பது. அந்தப்பொருள் மலைகளைவிட உயர்ந் தது; அளவிடற்கரியது. அளவிடற்கரிய பொருள் என்று மக்கள் கூறும் கடல் முதலியவற்றுக்கும் எட்டாத பொருள் என்பதனால் அப்பொருள் எல்லா அளவுகளையும் கடந்தது என்பது பெறப்படும். அம்பிகைக்கு 'அப்பிரமேயா' என் பது ஒரு திருநாமம். அளவுகளையும் அளவைகளையும் கடந் தவள் அவள்.

தனிமனிதருடைய மனத்துக்கும் வாக்குக்கும் எட்டா மல், மனித சமுதாயத்தின் முயற்சிக்கும் அகப்படாமல், அளவிற் பெரியனவென்று நாம் அறிந்த எல்லாவற்றிற்கும் மேலே உள்ள பரம்பொருள் என்று பரதேவதையாகிய அபிராமியையே சொல்கிறார் அபிராமிபட்டர்.

இப்படி எதற்கும் தட்டுப்படாமல் இருக்கும் பொருள் என்று சொன்னவர், நாம் உணரும் வகையில் அது இருப்பதை இறுதியில் சொல்ல வருகிறார். 'இப்படி உள்ள் பொருள் உலகுக்குப் பயன்படாமல் எங்கோ மறைந்து நிற்கிறது' என்றால், 'அதைப்பற்றிப் பேசி பயன் என்ன?' என்ற எண்ணம் தோன்றுமே! அந்தப் பொருள் நமக்கு நன்மையைத் தந்து கொண்டிருக்கிறது என்பதைச் சொல்கிறார்,

உலகத்தை, ''இருள் தருமா ஞாலம்'' என்றும். ''மாயிருள் ஞாலம்'' என்றும் புலவர்கள் சொல்வார்கள், உலகத்துக்கு இருட்டுத்தான் உரிமையானது. அதனைப் போக்கக் கதிரவனும் திங்களும் உதவுகின்றன. நமக்குக் கண் இருந்தாலும் அந்தச் சுடர்கள் இல்லையானால் பொருள்கள் தெரிவதில்லை. உலகம் விளக்கம் பெறுவது கதிரவனாலும் சந்திரனாலும். கதிரவன் தோன்றும்போது பகல் தோன்றுகிறது. அவன் பகலை உண்டாக்குகிறான். ஆதலால் திவாகரன் என்ற பெயர் அவனுக்கு ஏற்பட்டது. சந்திரன் நிலவினால் இருட்டைப் போக்குகிறான், அவனை 'நிசாகரன்' என்று சொல்வதுண்டு. காலையைச் செய்பவன் கதிரவன் என்பதை, ''காலைசூழ் செங்கதிர்'' என்று தக்கயாகப்பரணி (279) கூறுகிறது. மதுரைக்காஞ்சி, ''பகற்செய்யும் செஞ்ஞாயிறும் இரவுச் செய்யும் வெண்டிங்களும்'' (7 - 8) என்று கூறுகிறது. பகலை உண்டாக்குவது ஞாயிறென்றும், இரவைச் செய்வது திங்களென்றும் அது குறிப்பிடுகிறது.

இவ்வாறு ஒளிதரும் இரண்டு சுடர்களின் இடையிலும் இருந்து அந்தப் பொருள் சுடர் வீசுகின்றதாம். ஒளிமயமாக இருக்கும் பரம்பொருளுக்குச் சோதியென்றும் சுடர் என்றும் பெயர் உண்டு. அம்பிகையே அந்தப் பரம்பொருள். அவர் சூரியனுக்கு நடுவே இருந்து அதை ஒளி வீசுவதாக்கிப் பகலை உண்டாக்கக் காரணமாகிறாள்; சந்திர

மண்டலத்தின் நடுவில் வீற்றிருந்து அமுதமயமான நிலவு வீசும்படி செய்கிறாள். 'பானுமண்டல மத்யஸ்தா' (275) என்றும், 'சந்த்ர மண்டல மத்யகா' (240) என்றும் லலிதா சகசிரநாமம் போற்றுகிறது. அபிராமிபட்டர் இதைச் சொல்கிறார்.

> இரவு பகல் சூழும் சுடர்க்கு நடுவே
> கிடந்து சுடர்கின்றதே.

''இரவையும் பகலையும் உண்டாக்கும் சந்திர சூரியர்களாகிய சுடர் இரண்டுக்கும் நடுவில் நிலையாக இருந்து ஒளி வீசுகின்றது'' என்பது இதன் பொருள்.

''பரிவொடு தான் போய் இருக்கும்...அலர்கதிர் ஞாயிறும் திங்களுமே'' (34) என்றும், ''உறைகின்ற நின் திருக்கோயில்...அமுதம் நிறைகின்ற வெண்திங்களோ'' (20) என்றும் இந்த ஆசிரியரே முன்பு பாடியிருக்கிறார்.

''வாக்கும் மனமும் கடந்து வையமும் கடலும் மலையும் கடந்து நிற்கும் பரம்பொருளாகிய அம்பிகை யாவரும் காணும் சூரிய சந்திரர்களுக்குள் இருந்து ஒளி வீசி உலகை விளக்குகிறாள்; அந்தப் பெருமாட்டியை நான் கண்டேன்; என்னுள்ளே தியானித்தேன்; எனக்குரிய பொருளாகப் பற்றிக்கொண்டேன். அதனால் என்றும் மாயாத இன்ப வாழ்வைப் பெறும் நிலையை அடைந்தேன்'' என்று அபிராமி பட்டர் இந்தப் பாட்டில் சொல்கிறார்.

> வாழும் படிஒன்று கண்டுகொண் டேன்:மனத்
> தேஒருவர்
> வீழும் படிஅன்று; விள்ளும் படிஅன்று;
> வேலைநிலம்
> ஏழும் பருவரை எட்டும்எட் டாமல்
> இரவுபகல்
> சூழும் சுடர்க்கு நடுவே கிடந்து
> சுடர்கின்றதே,

[அழிவற்ற இன்ப வாழ்வு வரழும்படியாக ஒரு பரம் பொருளைத் திருவருளால் பெற்ற ஞானத்தைக் கொண்டு அறிந்து கொண்டேன்; அது மனத்தில் ஒருவர் விரும்பித் தியானிக்குமாறு உள்ளதன்று; வாயினுல் இப்படி உள்ள தென்று உரைப்பதற்கும் உரியதன்று; கடல் ஏழும் உலகு ஏழும் பெரிய மலைகள் எட்டும் அணுகாமல், இரவையும் பகலையும் முறையே செய்யும் சுடர்களாகிய சந்திர சூரியர் களுக்கு நடுவே அமைந்து விளங்குகின்றது.

வாழும்படி உதவும் ஒன்று என்று பொருள் கொள்க. வீழும் - விரும்பும். படி அன்று என்பதைப் படியது அன்று என்று பொருள் கொள்ளவேண்டும்; குணியைக் குண மாகக் கூறிய உபசார வழக்கு இது. விள்ளுதல் - கூறுதல். வேலை ஏழும் நிலம் ஏழும் என்று தனித்தனியே கூட்டுக. வேலை - கடல். பருவரை - பருமையான மலை. சூழும் - செய்யும். சுடர் - சந்திர சூரியர். ஒன்று கண்டு கொண்டேன்; அது வீழும்படி அன்று; விள்ளும்படி அன்று; சுடர்கின்றது என்று எழுவாயை வருவித்துப் பொருள் செய்யவேண்டும்.]

ஒளிமயமான அம்பிகையைப் பற்றிக்கொண்டால் இன்ப வாழ்வு பெறலாம் என்பது கருத்து.

இது அபிராமி அந்தாதியின் 47-ஆம் பாடல்.



# பிறவாப் பேறு

அழகான மலை ஒன்று; அதன் மேல் பிறை சுடர் விடுகின்றது. அந்த மலையில் பச்சைப் பசேல் என்று ஒரு கொடி படருகிறது. அதன் இலையே மணக்கும். அதன் அருகில் சென்றாலே நறுமணம் வீசும். இவ்வாறு குன்றில் ஒன்றிப் படரும் பரிமளப் பச்சைக் கொடியைக் கண்டு வியந்து தம்முடைய மனத்தில் பதித்துக்கொண்டவர் அபிராமிபட்டர்.

நம்முடைய நெஞ்சில் பிறவிதோறும் அடர்ந்திருக்கும் வாசனைகள் பல. புண்ணிய பாவ வினைகளை அநுபவித்துத் தீர்ப்பதற்காகப் பிறவி எடுக்கிறோம். ஆனால் ஒரு பக்கத்தில் பழைய வினைப்பயன்களை அநுபவித்துத் தீர்த்துக்கொண்டே இருக்கும்போது மற்றொரு பக்கத்தில் புதிய செயல்களைச் செய்து புதிய புண்ணிய பாவங்களை ஈட்டுகிறோம், அதன் விளைவாக நம்முடைய பிறவித்தொடர் நீண்டுகொண்டே போகிறது. மனம் ஒவ்வொரு பிறவியிலும் வாசனைகளைத் தாங்கிப் பாறைபோல் இறுகி நிற்கிறது. அநுபவித்துக் கழித்துவிடுவதோடு நில்லாமல் மேலும் மேலும் வாசனைகளை ஏற்றிக் கொண்டிருக்கிறோம். இதற்கு மாற்று என்ன?

பெரியவர்கள் நாம் புண்ணியச் செயல்களைச் செய்ய வேண்டும் என்று சொல்கிறார்கள். புண்ணியமும் பிறவிக்குக் காரணமானதே. அப்படியிருக்க அதை ஈட்டுவதனால் துன்ப மன்றோ நேரிடும்? நாம் பாவச் செயல்களையே மிகுதியாகச் செய்கிறோம். அவற்றை மாற்றுவதற்குப் புண்ணியச் செயல் களை மிகுதியாகச் செய்யவேண்டும். அளவற்ற புண்ணியம் செய்தவன் அதன் பயனாகச் சொர்க்க பதவியை அடைந்து. பிறகு மோட்சத்தை அடைவான். அதிகமாகக் கடன்

வாங்கியவன் மிகுதியான பொருளை ஈட்டி அந்தக் கடனைத் தீர்ப்பது போன்றது இது. கெட்ட வாசனைகள் மிகுதியான மனத்தில் அவற்றின் விளைவுகள் உண்டாகாமல் இருக்க நல்ல வாசனைகளை ஏற்ற வேண்டும். பெரியவர்களோடு பழகுதலும் நல்ல பழக்க வழக்கங்களை மேற்கொள்ளுதலும் ஆகியவற்றால் நல்ல வாசனை படியும். இவற்றுக்கெல்லாம் மேலாக அம்பிகையின் திருவுருவத்தியானத்தால் உள்ளத்திலுள்ள அழுக்கு மாறி ஒளியும் ஞானமணமும் உண்டாகும். இதையே அபிராமிபட்டர் சொல்ல வருகிறார்.

எம்பெருமாட்டி பச்சைக் கொடியைப்போல இருக்கிறாள். ராஜ ராஜேசுவரியின் வண்ணம் சிவப்பு ஆனாலும் சிவபெருமானோடு ஒன்றியிருக்கும்போது அவள் உமாதேவியாகப் பச்சை வண்ணம் கொண்டவளாக விளங்குகிறாள். மென்மையும், தன்மையும், அன்பர்களுக்கு வேண்டியபடி வளைந்து கொடுக்கும் நெளிவும் இருப்பதால் அவளைக் கொடி என்று கூறுவர். பச்சைக்கொடியாகிய பெருமாட்டி சிவபெருமானைச் சார்ந்து விளங்குகிறாள். குன்றைப்போல் நிச்சலமாக இருக்கும் சிவனோடு கொடியைப்போல் படர்கிறாள். மலை உயரமாக இருந்தால் அதன் உச்சியிலே சந்திரன் தோன்றுவான். சிவபெருமானுடைய முடியிலும் கலைமதி விளங்குகிறது. பரமசிவனுடைய திருமுடியில் இருக்கும் பிறைக்கு ஒரு சிறப்பு உண்டு. வானத்தில் தோன்றும் சந்திரன் வளர்வதும் தேய்வதும் உடையவன். இறைவன் திருமுடியில் இருக்கும் பிறையோ அவ்விரண்டும் இல்லாமல் என்றும் தனக்குரிய கலைகளோடு ஒளிர்கிறது. சிவபெருமானாகிய குன்றுக்குக் காடு அடர்ந்த சிகரத்தைப் போலச் சடை அடர்ந்த திருமுடி இருக்கிறது. அதன்மேல் கலைமதி சுடர்கிறது. இத்தகைய சிவபெருமானாகிய குன்றத்தில் ஒன்றிப் படரும் பச்சைக்கொடியாக விளங்குகிறாள் எம்பெருமாட்டி. அவளுடைய திருமேனி நறுமணம்

வீசுகிறது. அதனால் 'பரிமளப் பச்சைக்கொடி' என்று புகழ்கிறார் அபிராமிபட்டர். அந்தப் பரிமளம் ஞானந்தான். அம்பிகைக்கு, 'திவ்ய கந்தாட்யா' (631) என்று ஒரு திரு நாமம் உண்டு.

இவ்வாறு உள்ள பரிமளப் பச்சைக்கொடியைத் தம்முடைய நெஞ்சில் பதித்து தியானம் செய்கிறார்கள் அன்பர்கள். காமம் முதலிய தீய குணங்கள் அறாத மனத்தில் அம்பிகையின், தியானம் ஏறும்போது, அந்தக் குணங்கள் யாவும் மெல்ல மெல்ல நழுவுகின்றன. அம்பிகையின் ஞானத் திருவுருவத்தின் தொடர்பால் மனம் ஞானமயமாக ஆகிறது. அப்போது அங்கே கவலே இராது; துன்ப உணர்ச்சி இராது; எத்தகைய இடருக்கும் அஞ்சாத சமநிலே அந்த உள்ளத்தில் அமைகிறது.

> ''தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
> மனக்கவலே மாற்றல் அரிது''

என்ற குறளின்படி அம்பிகையின் தாளே உள்ளத்தில் பதித்தவர்களுக்கு மனக்கவலே போய்விடுகிறது. ''ஏமாப் போம் பிணியறியோம் பணிவோ மல்லோம், இன்பமே எந்நாளும் துன்ப மில்லே'' என்று அப்பர் சுவாமிகள் சொல்லுவதுபோல ஒரு நன்னிலே உண்டாகிறது. முன் வந்த இடரின் நினேவும் இனி இடர் வரும் என்ற அச்சமும் இல்லாமல் மாசுமறுவற்ற வானம்போல அந்த நெஞ்சம் இருக்கும். அங்கே அம்பிகையின் எண்ணம் அல்லாமல் வேறு யாதும் இராது.

'தியான கம்யா' (641) என்பது அம்பிகையின் திருநாமங்களில் ஒன்று. தியானத்தினால் அறியக்கூடியவள் என்பது பொருள். 'ஞானவிக்ரகா' (644) என்பது மற்றொரு திருநாமம். அந்தப் பெருமாட்டியின் திருமேனி முழுவதும் ஞான மயமாக இருப்பது. ஆகவே அவளுடைய

தியானத்தால் மனம் ஞானம் நிறைந்து துன்பத்தை அகற்றி நிற்கும்.

அம்பிகையைத் தியானிப்பது எளிதான காரியம் அன்று. உடம்பினாலே பல செயல்களை முறைப்படி செய்யலாம்; உரையினாலும் திட்டமிட்டுப் பேசலாம். ஆனால் மனம் நாம் செய்யும் வரையறைக்குள் அடங்கி நிற்பதில்லை. பல காலம் செய்யும் பயிற்சியினால் அத்தகைய நிலை கைகூடி வர வேண்டும். நாம் செய்யும் செயல்களை நல்ல முறையில் வரையறுத்துக்கொண்டு செய்யவேண்டும். அதாவது நம்முடைய மனம் எந்த நிலையில் இருக்கவேண்டுமென்று விரும்புகிறோமோ அதற்கு உதவியான செயல்களையே செய்து பழகவேண்டும். அம்பிகையின் உருவத்தை உள்ளத்தில் நிறுத்தவேண்டுமானால் அந்தப் பெருமாட்டியின் உருவத்தைப் பலகாலும் கண்டு, அவளுடைய திருக்கோயிலை வலம் வந்து, அவளுடைய அர்ச்சா மூர்த்தியை மலர்களால் பூசித்துப் பழகவேண்டும். அவளுடைய அன்பர்களோடு இடையறாமல் நண்பு பூண்டு வாழவேண்டும். அவளுடைய திருநாமங்களையும் குணங்களையும் கருணைச் செயல்களையும் அடுத்தடுத்து வாயால் சொல்லிப் பழக வேண்டும். இப்படி உடம்பாலும் வாக்காலும் அம்பிகையோடு தொடர்புடைய செயல்களைச் செய்தும் சொற்களைப் பேசியும் பயின்றுவந்தால் நம்முடைய நெஞ்சம் அவளைப் பற்றிய எண்ணத்தில் ஈடுபடும். பழைய வாசனையினால் வேறு எண்ணங்கள் எழும்போது, அவற்றை அறிவினாலும் அம்பிகையின்பால் வைத்த பேரன்பினாலும் மாற்ற வேண்டும். இவ்வாறு இடைவிடாது செய்து வந்தால் அம்பிகையின் திருவுருவம் உள்ளத்தில் பதியும்.

ஒன்றை மேலெழுந்தவாரியாக நினைப்பது வேறு; அழுந்தப் பதிப்பது வேறு. நம்முடைய மனம் எப்போதும்

அலைந்துகொண்டே இருப்பதனால் எதனையும் அழுந்தப் பதித்துக்கொள்ளும் திறமை இல்லாமல் இருக்கிறது. நமக்கு மிகவும் விருப்பமான பொருளைக்கூடக் கண்ணை மூடினால் தெளிவாகக் காணும் இயல்பு நமக்கு இல்லை. நம்மோடு ஒட்டி உறவாடி அன்பு செய்து இன்பம் தந்து நகமும் சதையும் போல ஒன்றி வாழும் மனைவி ஊருக்குப் போயிருக்கிறாள். அப்போது கண்ணை மூடி அவளை நினைத்தால் அவளுடைய வடிவம் தெளிவாக நம்முடைய மனத்தில் தோன்றாது. மனத்தின் இயல்பே அதுதான் என்று சொல்லலாம். ஆனால் நாம் காணும் கனவில் வடிவங்கள் தெளிவாகத் தெரிகின்றன. ஆகவே, மனத்துக்கு உருவங்களைத் தெளிவாகக் காணும் இயல்பு உண்டென்று உணரலாம். நனவில் கண்ணை மூடியபோது அப்படித் தெரிவதில்லை. கனவில் நம்முடைய இந்திரியங்கள் எல்லாம் தொழில் செய்யாமல் அடங்கியிருப்பதனால் மனத்தில் தெளிவான உருவம் தோன்றுகிறது. நனவில் அப்படி இருப்பதில்லை. பகலில் சன்னல்களைத் திறந்து வைத்து உள்ளே விளக்கு ஏற்றினால் அதன் ஒளி தெளிவாகப் படர்வதில்லை. சன்னல்களையும் கதவுகளையும் மூடிவிட்டால் விளக்கின் ஒளி நன்றாகப் பிரகாசிக்கும். அப்படியே பொறிகளின் வாயிலாக மனம் செல்லாமல் உள்முகமாக நிற்கப் பழகினால் தியானப் பொருளைத் தெளிவாகக் காணலாம். இதையே நனவில் கனவுநிலை என்று சொல்வார்கள். இது ஒருவனுக்குச் சித்திக்குமானால் எந்தச் சமயத்திலும் தன் மனத்தை நிறுத்தும் ஆற்றல் பெறுவான். அப்போது பரிமளப் பச்சைக்கொடியாகிய அம்பிகையைப் பதித்து இடர் தவிர்ந்து இருக்கலாம். இவ்வாறு ஒரு கணப்போது இருந்தாலும் மிக்க பயன் உண்டு. ஒரு கணப்போது இருக்கப் பழகியவர்கள் தொடர்ந்து பல நேரம் இருக்கும் பழக்கத்தைப் பெறுவது எளிது.

எத்தகைய சித்தி பெற்றாலும் மனத்தை அடக்கும் சித்திக்கு நிகர் இல்லை;

> ''சினம்இறக்கக் கற்றாலும் சித்தியெல்லாம் பெற்றாலும்
> மனம் இறக்கக் கல்லார்க்கு வாய்ஏன் பராபரமே''

என்பார் தாயுமானவர். மனம் ஒன்றுபட்டுத் தியான சமாதி அடைந்தால் மனோலயம் ஏற்படுகிறது. அதில் முறுகி என்று நிஷ்டானுபூதிச் செல்வராக மாறினால் மனோ நாசம் உண்டாகிவிடும்.

அலைகின்ற மனத்துக்கு ஒரு பற்றுக்கோடாக இறைவியின் தியானத்தை வைத்துப் பழகவேண்டும். அவள் திருவுருவம் நன்றாகப் புதியும்போது மற்றன வெல்லாம் தோன்றாமல் மறையும். இந்தச் சமாதிநிலை யாருக்குக் கைகூடுகிறதோ அவருக்கு இனிப் பிறவி இல்லை. இப்போது உயிர் வாழ்கின்ற உடம்பாகிய குடிசை அசுத்தமயமானது. குடரும் நிணமும் குருதியும் சேர்ந்து அமைந்த அழுக்குக் குடிசை இது. இறைவியிடம் அன்பு செய்து வாழ்கிறவருக்கு இதனிடம் அருவருப்புத் தோன்றும். அவர்கள் இந்தக் குரம்பையில் வாழும் வாழ்வை விட்டு இறைவியின் திருவடியிலே வாழும் வாழ்வை விரும்புவார்கள். தியானம் செய்து செய்து நிஷ்டை கைகூடியவர்களாய் இடர் தவிர்த்து இப்பிறவியின் வாழ்நாளைப் போக்கிப் பிறகு என்றும் குன்றாத நிரதிசய இன்பத்தைப் பெறுவார்கள்; பேரின்ப வாழ்வாகிய வீட்டில் நிலவுவார்கள். மறுபடியும் தசையும் குருதியும் உள்ள அழுக்குடம்பில் புகமாட்டார்கள். பிறத்தலும் இறத்தலும் அவர்களுக்கு இல்லை.

இவற்றை எல்லாம் அபிராமிபட்டர் சொல்கிறார்,

சுடரும் கலைமதி துன்றும்
　　சடைமுடிக் குன்றில்ஒன்றிப்
படரும் பரிமளப் பச்சைக்
　　கொடியைப் பதித்துநெஞ்சில்
இடரும் தவிர்த்திமைப் போதிருப்
　　பார்பின்னும் எய்துவரோ
குடரும் கொழுவும் குருதியும்
　　தோயும் குரம்பையிலே?

*[ஒளிவிடும் கலைகளையுடைய பிறை பொருந்திய சடை என்னும் காட்டோடு கூடிய திருமுடியைப் பெற்ற மேருமலை போன்ற சிவபெருமானோடு இணைந்து பழகுகின்ற ஞானமணம் உள்ள பசுங்கொடியாகிய அபிராமவல்லியைத் தம்முடைய நெஞ்சில் பதித்துத் தியானம் செய்து, அதனால் துன்பம் நீங்கி இமைக்கும் கணப்போதேனும் நிஷ்டானுபூதி நிலையில் இருப்பவர்கள் குடலும் நிணமும் இரத்தமும் சேர்ந்த குடிசையாகிய உடம்பில் மீட்டும் வந்து அடைவார்களா?]*

கலைமதி என்றாலும் இங்கே பிறையைக் கொள்ள வேண்டும். இறைவனைக் குன்றாக உருவகம் செய்ததனால் சடையைக் காடாகவும் முடியைச் சிகரமாகவும் கொள்ள வேண்டும்; ஏகதேச உருவகம். அம்பிகை சிவபெருமானிடத்தினின்றும் பிரியாமல் நிற்றலால் 'ஒன்றிப் படரும்' என்றார். இறைவனோடு ஒன்றிப்படரும் நிலையில் அம்பிகை பச்சை நிறம் படைத்திருப்பாள். அம்பிகைக்குச் 'சியாமபா' (486) என்று ஒரு திருநாமம் உண்டு. சியாமம் என்பது ஒருவகைப் பச்சை நிறம். அம்பிகையை, "பங்காயோர், தமனிய மலைபடர் கொடியென வடிவு தழைந்தாய்" (மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ், செங்கீரை) என்று பாடுவார் குமரகுருபர முனிவர்.

அம்பிகை வேறொன்றையும் எண்ணாமல் தன்னையே தியானித்து வாழும் பக்தர்களுடைய உள்ளத்தில் விருப்பத்துடன் நிலவுபவள். தூய்மையான மானஸவாவியைப் போன்ற அந்த உள்ளத்தில் அவள் அன்னம்போல இருப்பாள். 'பக்த மானஸ ஹம்ஸிகா' (372) என்பது அம்பிகையின் திருநாமங்களில் ஒன்று. அப்பெருமாட்டியின் தியானத்தால் அன்பர்களுடைய உள்ளம் தாபங்கள் அற்றுக் குளிர்ச்சி அடையும். பக்தர்களுடைய உள்ளமாகிய மயிலுக்கு அவள் மேகம்போல இருந்து இன்பத்தைத் தருவாள் என்று அவளுடைய திருநாமம் ஒன்று குறிப்பிடுகிறது; "பக்த சித்த கேகி கநாகநா" (747).

பதித்தலாவது தளர்ச்சியின்றித் தெளிவாக உருக் காணும்படி தியானித்தல். 'இடரும் தவிர்த்து' என்ற தொடரில் இடர் தவிர்த்தும் என்று உம்மையை மாற்றிக் கூட்டுக. பதித்தும் தவிர்த்தும் என்று பொருள் செய்க. இமைப்போது இருப்பார் என்றாலும் அவ்வாறு இருப்பவர்கள் பின்னும் தொடர்ந்து இருக்கும் ஆற்றலைப்பெறுவார் என்பதையும் நினைக்கவேண்டும். பின்னும் என்றது இப்போது பெற்ற பிறவியை அல்லாமல் இதன் பின் வேறு பிறவி இல்லை என்பதைக் குறித்தது. எய்துவரோ என்பது எய்தமாட்டார்கள் என்னும் பொருளைத் தந்தது.

குச்சிகளாலும் கீற்றுக்களாலும் வேய்ந்து காற்று, தீ, மழை ஆகியவற்றால் எந்தச் சமயத்திலும் பழுதுபட்டு அழியும் நிலையில் இருப்பது குரம்பை. ஆதலின் பிணி முதலியவற்றால் பழுதுபட்டு இறக்கும் உடம்பைக் குரம்பையாக உருவகித்தார். என்றும் மாறாத சிறப்புடைய வீட்டைப் பெறுவாராதலின் குரம்பையில் புகார். பெரிய மாளிகையைப் பெற்றவன் மீட்டும் குடிசைக்கு வராதது போல அமைந்தது இந்த நிலை. அம்பிகையைத் தியானித்து

நிட்டை கூடியவர்கள் இனிப் பிறக்கமாட்டார்கள். அம்பிகைக்கு, 'பவாரண்ய குடாரிகா' (114), 'பவநாசினி' (175), 'பவரோகக்னி' (842) என்று உள்ள திருநாமங்களால் அப்பெருமாட்டி பிறப்பை அறுக்கும் பேரருள் உடையவள் என்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

தேவியைத் தியானிப்பவர்களுக்கு இம்மையில் எந்த வித இடரும், பிறகு பிறவித் துன்பமும் இல்லை என்பது கருத்து.

இது அபிராமி அந்தாதியில் 48-ஆவது பாட்டு.



# அஞ்சல் என்பாய்

உயிர்களுக்கு உண்டாகும் துன்பங்களில் மிகப் பெரியவை பிறப்பும் இறப்பும். பல பல பிறவிகள் எடுத்து வாழ்ந்து மீட்டும் இறந்து இறந்து செல்லும் இந்தத் தொடர் என்று நிற்கிறதோ அன்றுதான் உயிர் மோட்சத்தை அடைகிறது. பிறவியைப் பெற்றவர்கள் மீட்டும் இங்கே வந்து பிறவாமல் இருப்பதற்கு ஏற்ற முயற்சியைச் செய்யவேண்டும். ''வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை'' என்று திருக்குறள் கூறும். பெரியவர்கள், இனிப் பிறவாமல் அருளவேண்டும் என்றும், இறக்கும்போது துணை நிற்கவேண்டும் என்றும் இறைவனை வேண்டுவார்கள்.

நாம் பிறந்துவிட்டோம். இனிமேல் நம்மை எதிர்நோக்கி இருப்பது இறப்பு. இறப்புத் துன்பத்தை நினைக்கும்போது யாருக்கும் உள்ளம் குலையும். ஆனால் அந்த நினைவு நெஞ்சில் நிலைப்பதில்லை. ஆன்றோர்கள், எவ்வாறேனும் மரணத் துன்பத்தை அடையாமல், கூற்றுக்கு ஆளாகாமல் இறைவன் திருவடியை அடையவேண்டும் என்று பிரார்த்திப்பார்கள். ''யானேதும் பிறப்பஞ்சேன் இறப்பதனுக் கென்கடவேன்'' என்று மணிவாசகர் பாடுகிறார். இவ்வாறே மரணத்தை எண்ணி ஆழ்வார்களும் நாயன்மார்களும் இரங்கியிருக்கிறார்கள்.

உடம்பைப் பெற்றவர்கள் எப்படியும் இறக்கத்தான் வேண்டும். ஆனால் அந்த இறப்பில் இரண்டு வகை உண்டு. புராணங்களில் சில வகையான கதைகள் வரும். பாவம் செய்த ஒருவன் இறந்த பிறகு அவனை யமதூதர்கள் அழைத்துக்கொண்டு சென்றார்கள் என்றும், புண்ணியம்

செய்த ஒருவனைச் சிவகணங்கள் அழைத்துச் சென்றன என்றும் படித்திருக்கிறோம். நல்லவர்களுடைய மரணமும் அல்லாதவர்களுடைய மரணமும் நம் கண்ணுக்கு ஒன்று போலவே தோற்றம் அளிக்கின்றன. உயிர் விடுவதற்குமுன் உடம்பில் உண்டாகும் நோய் முதலியவற்றை நாம் காண்கிறோம். உயிர் பிரிந்த பிறகு அது எத்தகைய நிலையை அடைகிறது என்பது நமக்குக் கண்கூடாகத் தெரிவதில்லை. ஆனாலும் சாஸ்திரங்களும் மெய்ஞ்ஞானியர்களும் அதுபற்றிச் சொல்லியிருப்பதை நாம் தெரிந்து கொள்ளலாம்.

இறப்பதற்கு முன்பு ஒருவனுடைய வாழ்வு எவ்வாறு அமைகிறதோ அதனுடைய தொடர்பாகவே இறப்பதற்குப் பின்பும் இருக்கும். இங்கே தீய குணங்களுக்கு எல்லாம் இடமாக இருப்பவன் இந்த உடம்பை விட்டவுடன் நல்லவன் ஆவதில்லை. மரணம் என்பது இந்தத் தூல சரீரத்தினின்றும் உயிர் பிரியும் அவஸ்தை. அதன் பிறகும் உயிருக்கு உடம்பு இருக்கிறது. சூட்சும சரீரம் என்றும், காரண சரீரமென்றும் கூறும் உடம்புகள் இரண்டோடும் அது சஞ்சாரம் செய்கிறது. இந்த உடம்பில் இருக்கும்போதும் அவை இருக்கின்றன. அப்போது பனியன், ஷர்ட், கோட்டுப் போட்டவனைப்போல உயிர் மூன்று உடம்புகளுடன் இருக்கிறது. மரணம் என்பது மேல் சட்டையைக் கழற்றுவது போன்றது. இந்த உடம்பு செயலற்றுக் கிடக்க நாம் தூங்கும்போது கனவு காண் கிறோம்; இன்ப துன்பங்களை அநுபவிப்பதாகக் கனவு காண் கிறோம். அந்த அநுபவம் சூட்சும சரீரத்தில் விளைவது உடம்பை உயிர் விட்ட பின்பும் சூட்சும சரீரம் இருப்பதால் அதுவே இன்ப துன்பத்தை அநுபவிக்கிறது. இந்த உடம்பில் இருக்கும்போது சூட்சும சரீரம் என்று பெயர் பெறும். உடம்பே, மரணத்திற்குப் பின் யாதனு

சரீரம் என்று பெயர் பெறும். சொர்க்கம், நரகம் என்று சொல்லுகின்ற இன்ப துன்ப அநுபவங்களை அந்தச் சூட்சும சரீரமே அநுபவிக்கிறது.

இன்பதுன்பம் என்ற இரண்டும் மனத்தைச் சார்ந்தவை. சரீரத்தின் தொடர்பு இல்லாமல் இன்பதுன்ப அநுபவம் இராது. எந்தச் சரீரமாக இருந்தாலும் இன்பதுன்பம் அநுபவிக்க அதுவே கருவியாக இருக்கிறது. உயிர்கள் சரீரங்களின் தொடர்பு பெற்று நிற்கும் வரையிலும் இன்பதுன்ப அநுபவத்துக்கு உட்பட்டே இருக்க வேண்டும். ஒளியும் நிழலும் போல இன்பமும் துன்பமும் இனமாக அமைகின்றன. சரீரத்தை விட்டு உயிர் எங்கும் பரந்த பரமாத்மாவோடு கலக்கும்போது அது என்றும் மாறாத ஆனந்தத்தை அடைகிறது. அதையே ஆத்மானந்தம் என்று சொல்வார்கள். சரீரங்களின் தொடர்பின்றி விடுதலை பெற்ற ஆத்மா பரமாத்மாவோடு இரண்டறக்கலந்துவிடும். அங்கே இன்பம் இல்லை. துன்பம் இல்லை. வெறும் ஆனந்தமே நிற்கும். முன்பு சொன்னதுபோல இன்பம் என்பதும் துன்பம் என்பதும் இந்திரியங்களின் வாயிலாக மனத்தால் நுகரப்படுபவை. ஆனந்தமோ சரீரங்களின் தொடர்பே இன்றித் தனியாக நிற்கும் ஆத்மா அநுபவிப்பது. ஆத்மா பரமாத்மாவோடு ஒன்றாகிய நிலையில் விளைவது அது.

இறைவனுடைய திருவருள் பெற்றவர்கள் இந்த உடம்பை விடும்போது மற்ற உடம்புகளின் தொடர்பையும் விடுத்து இறைவனோடு கலந்துவிடுவார்கள். அவர்களுக்கு இன்ப துன்பங்களுக்கு அப்பாற்பட்ட ஆனந்தம் கிடைக்கிறது. மற்றவர்கள் இறந்தவுடன் இப்பிறவியில் செய்த புண்ணிய பாவங்களின் பயனாக இன்ப துன்பங்களை அநுபவிக்கிறார்கள். இந்தப் பிறப்பின் அநுபவங்களைச் சுக துக்கம் என்று சொல்கிறோம். மரணமடைந்த பிறகு

கிடைக்கும் அநுபவங்களையே சொர்க்கம் நரகம் என்று சொல்கிறோம். சுகதுக்க அநுபவங்கள் வெளிப்படையானவை. சொர்க்க நரக அநுபவம் சூட்சுமமானவை. இந்தப் பிறவியில் சுகதுக்கங்களை அநுபவித்து மேலும் சுகதுக்கங்களை அநுபவிப்பதற்கு விதை போன்ற புண்ணிய பாவ கர்மங்களைச் செய்கிறவர்கள் இந்தப் பிறவிக்குப் பிறகு இன்ப துன்ப அநுபவங்களைத் தொடர்ந்து அநுபவிக்கிறார்கள். அப்படி அநுபவிக்கும் நிலையில் இருப்பவர்களை யமதூதர்கள் கொண்டு போவதாகப் புராணங்கள் கூறும். இந்தப் பிறவியில் அழுக்கெல்லாம் நீங்கித் தூய நிலையில் இருந்து, இறைவன் திருவருளாகிய பலத்தைத் தேடிக் கொண்டவர்கள் மரணம் அடைந்தவுடன் இன்ப துன்பங்களுக்கு அப்பாற்பட்ட ஆனந்த நிலையை அடைகிறார்கள், அத்தகையவர்களைச் சிவகணங்கள் அழைத்துச் செல்வதாகப் புராணங்கள் கூறும். அவர்களுக்கு யமவாதனை இல்லை.

இன்னும் விளக்கமாக ஓர் உதாரணம் சொல்லலாம். இறைவன் திருவருள் பெறாதவர்களின் வாழ்க்கைப் பயணம் இன்னும் தொடர்ந்துகொண்டே செல்கிறது. இந்தப் பயணத்தில் ஒரு சிறையிலிருந்து மற்றொரு சிறைக்குப் போகும் குற்றவாளியைப்போல் வேறு உடம்பில் புகுவார்கள். இந்தச் சிறை மாற்றத்தின் இடையே போலீஸ்காரர்களின் கட்டுக்காவலில் குற்றவாளிகள் இருப்பதுபோல, உயிரும் யமதூதர்களின் காப்புக்குள் அடங்கித் துன்பத்தைப் பெறும். இறைவன் திருவருள் பெற்றவர்களோ சிறையினின்றும் வெளிப்பட்டு அன்பர்கள் மாலையிட்டு அழைத்துச்செல்ல வீட்டுக்குப் போவதைப்போல இனிப் பிறவாத நிலையைப் பெற்று மோட்ச வீட்டை அடைவார்கள்.

அருளாளர்கள் இறைவனுடைய திருவருள் பெற்ற நம்பிக்கையால் தமக்கு இனிப் பிறப்பில்லை என்ற உறுதிப் பாட்டோடு இருப்பார்கள். ஆயினும் அன்பும் உணர்ச்சியும் மிகுவதனுல் இறைவனிடத்தில் மரணத் துன்பத்தினின்றும் தம்மைப் பாதுகாக்கவேண்டும் என்று சொல்வார்கள். செலவுக்குப் பணம் வேண்டியவர்கள் வேண்டிய அளவு பணம் பெற்றிருந்தாலும் பின்னும் சேமித்து வைப்பது போல இறைவன் காப்பாற்றுவான் என்ற உறுதி இருந்தாலும் மீட்டும் இத்தகைய வேண்டுகோளைச் செய்வார்கள்.

''ஒண்ணுளே ஒன்பது வாசல் வைத்தாய்
ஒக்க அடைக்கும்போது உணர மாட்டேன்
புண்ணியா உன்னடிக்கே போது கின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணியனே''

என்று அப்பர் சுவாமிகள் பாடுகிருர். அபிராமி பட்டரும் அம்பிகையை நோக்கி இத்தகைய விண்ணப்பத்தைச் செய்து கொள்கிருர். சென்ற பாட்டில் அம்பிகை பிறவிப் பிணியினின்றும் அன்பர்களைப் பாதுகாப்பாள் என்று சொன்னவர் இந்தப் பாட்டில் மரணத் துன்பத்தினின்றும் காப்பதற்குரியவள் என்ற எண்ணத்தை வெளியிடுகிருர்.

உடம்பாகிய குடிசைக்குள் புகுந்து உயிர் வாழ்கிறது. வாடகைக்கு வீட்டில் இருப்பவர்கள் எப்போதுமே அந்த வீட்டில் இருக்கமுடியாது. சிதிலமான வீடாக இருந்தால் ஒரு காலத்தில் இடிந்துபோகும். அப்போது வீட்டைவிட்டு வெளியேறவேண்டும். நம்முடைய உடம்பும் ஒரு காலத்தில் சிதிலமடைந்துவிடும். அந்தக் காலம் இன்னதென்று நமக்குத் தெரியாவிட்டாலும் அதற்கென்று வரையறையான கணக்கு உண்டு. அந்தக் கணக்கின்படி யாவும் நடைபெறும். இத்தனை காலந்தான் இந்த உடம்பில் உயிர் வாழவேண்டும் என்ற கணக்குக்குப் பிறகு ஒரு கணங்கூட

உயிர் இருக்க முடியாது. அந்தக் காலத்தை நாம் அறியா விட்டாலும் மரணத்தை விளைவிக்கின்ற காலன் அறிவான். உயிரை உடம்பினின்றும் பிரிக்கும் காலம் இன்னதென்பதை அவன் அறிவானாதலால் அவனுக்குக் காலன் என்ற பெயர் வந்தது. உடம்பினின்றும் உயிரைக் கூறுபடுத்தலால் கூற்று என்ற பெயரும் அமைந்தது. உடம்புக்குள் உயிர் சில காலம் குடி இருக்கிறது. இந்த உடம்பு நிரந்தரமாக இருக்கும் வீடு அன்று. வேற்றூரில் அரசன் பாளையம் இறங்கினால் அங்கே பல காலம் இருக்கமாட்டான். அது போலத் தான் உயிர் உடம்புக்குள் இருக்கிறது. எப்போதும் சொந்தமாகக் கொண்டு நிலையாக வாழும் இடத்துக்குப் புக்கில் என்றும், சில காலம் குடி இருக்கும் வீட்டுக்குத் துச்சில் என்றும் பெயர் வழங்கும். உயிருக்கு நிலையான வீடு ஒன்றும் இல்லை. இறைவன் திருவருள் இருந்தால் முத்தியாகிய நிலையான வீட்டில் இருக்கலாம்.

> ''ஒருபூதரும் அறியாத் தனிவீட்டில் உரையுணர்வற்று
> இருபூத வீட்டில் இராமல் என்றான்''

என்று அருணகிரிநாதர் கூறுகிறார். இறைவன் திருவருள் கிடைத்தால் என்றும் மாறாத நிலையான வீட்டில் வாழலாம். இல்லாவிட்டால் வாடகை வீட்டில் மாறி மாறி வாழ வேண்டியதுதான். மாறி மாறிப் பிறக்கும் உயிரின் அவல நிலையைக் கண்டு,

> ''புக்கில் அமைந்தின்று கொல்லோ உடம்பினுள்
> துச்சில் இருந்த உயிர்க்கு''

என்று திருவள்ளுவர் இரங்குகிறார்.

எனவே, குறிப்பிட்ட நாள் வரைக்கும் இந்த உடம்பாகிய வாடகை வீட்டில் குடி இருக்கும் உயிர் அந்த நாள் வந்தவுடன் இடத்தைக் காலி செய்துவிடும். எத்தகைய

ஆற்றலுடையவர்களானாலும் இந்த நியதியை மாற்ற முடியாது.

> ''இழைத்தநாள் எல்லை இகவா பிழைத்தொரீஇக்
> கூற்றம் குதித்துய்ந்தார் ஈங்கு இல்லை''

என்பது நாலடியார். அந்த நாள் வரும்போது உண்டாகும் துன்பங்களை எண்ணினால் நம்முடைய குலை குமுறும். அபிராமிபட்டர், ''அந்த நாளில் வந்து காப்பாய்'' என்று விண்ணப்பித்துக்கொள்கிறார். ஆழ்வாரும், ''அப் போதைக்கு இப்போதே சொல்லிவைத்தேன்'' என்று பாடுவார்.

> குரம்பை அடுத்துக் குடிபுக்க ஆவி வெம் கூற்றுக்கு இட்ட
> வரம்பை அடுத்து மறுகும் அப்போது வளைக்கை அமைத்து
> அரம்பை அடுத்த அரிவையர் சூழ வந்து அஞ்சல் என்பாய்

என்பது அவர் பிரார்த்தனை.

'தாயே, இந்தக் குடிசையாகிய உடம்பைச் சேர்ந்து குடியிருக்கப் புகுந்த உயிரானது கொடிய யமனுக்கு இன்ன காலத்தில் நீ வரவேண்டும் என்ற விதியை அனுசரித்து வரையறுத்த கால எல்லையை அணுகி வருந்தும் அந்த வேளையில், நின்னுடைய வளைகளை அணிந்த கைகளை அமைத்து அபய முத்திரை காட்டி அரம்பையும் அவளை அடுத்த வேறுபல யோகினிகளும் உன்னைச் சூழ்ந்துவர நீ எழுந்தருளி வந்து, ''நீ பயப்படாதே'' என்று கூறி என்னைக் காப்பாற்ற வேண்டும்' என்று அவர் வேண்டுகிறார்.

கை அமைத்தலாவது அஞ்சேல் என்ற குறிப்பைக் கையினால் காட்டுதல்; ''தோன்றும் திதியமைப்பில்'' என்று இந்த அபயமுத்திரையை 'அமைப்பு' என்று உண்மை விளக்கம் கூறும். அம்பிகைக்கு 'ரம்பாதி வந்திதா' (லலிதா.

741) என்பது ஒரு திருநாமம். ஆகையால் அன்னை எப்போதும் ரம்பை முதலிய அணங்கினர் சூழ்ந்து ஏவல் செய்யச் சித்தராக நிற்க எழுந்தருளுவாள். ஏதேனும் ஒரு சிறிய அதிகாரம் உடையவராக இருந்தாலே எப்போதும் நாலு பேருடன் வருவது உலகியல். அதிகாரமும் உபகாரமும் இணைந்தவர்களை மக்கள் சூழ்ந்துகொண்டே இருப்பார்கள். யாவருக்கும் தலைவியும் எல்லாவற்றையும் அருளுபவளு மாகிய அம்பிகையைச் சுற்றிப் பலர் இருப்பது வியப்பு அன்று. அழகும் ஏவல் புரியும் பாங்கும் உடைய அணங்குகள் பலர் அம்பிகையின் குறிப்பறிந்து தொண்டாற்றக் காத்து நிற்பார்கள். ஆதலின், 'அரம்பையடுத்த அறிவையர் சூழவந்து' என்றார். 'அஞ்சல் என்பாய்' என்பது, 'அஞ்சாதே என்று திருவாய் மலர்ந்தருளுவாயாக' என்று மட்டும் பொருள் தருவதன்று. 'அஞ்சாதே என்று கூறி யமபயத்தினின்றும் என்னைக் காப்பாற்றியருளவேண்டும்' என்றே பொருள் கொள்ள வேண்டும். 'ஏன் என்று கேட்பவர் இல்லை' என்றால் அப்படி ஒருவர் கேட்ட அளவில் நிற்க வேண்டும் என்ற விருப்பத்தைக் குறித்ததாகாது. உபகாரம் செய்பவர் இல்லை என்பதையே அது குறிக்கும். அது போலவே இங்கும் கொள்ளவேண்டும்.

அம்பிகை யம பயத்தை நீக்குவாள் என்பதை, 'ம்ருத்யு தாரு குடாரிகா' (749) என்ற அவள் திருநாமம் காட்டும். 'யமனென்னும் மரத்துக்குக் கோடாரிபோல இருப்பவள்' என்பது அத்திருநாமத்தின் பொருள். பலவகையான ஏவலர்களுடனும் தூதர்களுடனும் யமனுடைய காரியாலயம் விரிவாக ஆலமரம்போலப் படர்ந்து நிற்கிறது. கோடானுகோடி உயிர்களைக் கொண்டுவரவேண்டும் அல்லவா? அப்படி விரிவாக இருந்தாலும் ஆணி வேரிலே கோடாரி போடுவதுபோல அம்பிகை செய்வாள். "யமபடரெனதுயிர் கொளவரின் யானேங்குதல் கண்டெதிர்

தானேன்று கொளுங்குயில்'' (தேவேந்திர சங்க வகுப்பு) என்பர் அருணகிரிநாதர்.

இனி அம்பிகையின் இனிமையை எண்ண வருகிறார் அபிராமிபட்டர். வன்மையான யமனுடைய கொடுந் துன்பத்தை அகற்றும் அருள் வலிமையையுடைய பிராட்டி மென்மையானவள்; மெல்லியலார் சூழ வருபவள்: இனிமையே மயமான இசை அவளுடைய உருவமே. சங்கீதத்தின் அதிஷ்டாள தேவதையாகிய சங்கீத சியாமளை அம்பிகையின் அம்சமே. ஆகவே,

நரம்பை அடுத்த இசைவடிவாய் நின்ற
நாயகியே!

என்று போற்றுகிறார். 'ஏழு ஸ்வரங்களை ஒட்டி நிற்கும் இசையின் வடிவாக நிற்கின்ற பெருமாட்டியே' என்கிறார்.

குரம்பை அடுத்துக் குடிபுக்க
ஆவிவெங் கூற்றுக்குஇட்ட
வரம்பை அடுத்து மறுகும்அப்
போது வளைக்கைஅமைத்து
அரம்பை அடுத்த அரிவையர்
சூழவந்து அஞ்சல்என்பாய்;
நரம்பை அடுத்த இசைவடி
வாய்நின்ற நாயகியே!

[யாழின் சுரஸ்தானங்களைப் பொருந்தி அவற்றால் எழும் இசையின் வடிவாக நின்ற பெருமாட்டியே! இந்த உடம்பாகிய குடிசையைச் சார்ந்து சில காலம் இருப்பதற்குக் குடியாகப் புகுந்த எளியேன் உயிர், வெம்மையான கூற்றுவனுக்கு விதியால் வகுக்கப்பட்ட கால எல்லையை அணுகி வருந்தும் அந்தச் சமயத்தில் அரம்பையும், அவளோடு அடுத்து வரும் பிற தேவமகளிரும்

உன்னைச் சூழ்ந்து வர நீ எழுந்தருளி வந்து, நீ அஞ்சாதே என்று கூறி என்னைப் பாதுகாத்தருள வேண்டும்.

குரம்பை-குடிசை; கூடு என்றும் கொள்ளலாம்' வரம்பு-கால எல்லை. அரம்பையும் அவளை அடுத்த அணங்குகளும் சூழ. நரம்பு-சுரஸ்தானம்; யாழ் நரம்பு எனலும் ஆம்.]

இது அபிராமி அந்தாதியில் 49-ஆம் பாடல்.



# சரணமே அரண்

பக்தர்களுக்கு இறைவனுடைய திருநாமங்களை அடிக்கடி சொல்லுவதில் ஓர் இன்பம் உண்டாக்கும். பல வகையான நாமங்களைச் சொல்லி மகிழ்வதும், ஒரே நாமத்தைப் பலமுறை சொல்லி இன்புறுவதும் அவர்களுடைய இயல்பு. பக்தி முறுகி நிற்கும்போது ஒரு நாமத்தையே மீட்டும் மீட்டும் கூறி இன்புறுவார்கள். அப்போது அந்தத் திருநாமத்தின் எழுத்து, சொல், பொருள் என்பன உள்ளத்தில் தோன்றுவதில்லை. சுழற்றிவிட்ட பம்பரம் வேகமாகச் சுழலுவதுபோல ஒரே நாமத்தைத் தொடர்ந்து பலகால் சொல்லிக் கொண்டே இருப்பார்கள். இது பக்தியில் ஒரு வகையான வெறிகொண்ட நிலை.

அப்படியின்றி இறைவனுடைய பல திருநாமங்களை அவற்றின் பொருளை உணர்ந்து கூறுதலும், கூறி அருச்சனை செய்தலும் பக்தர்களுடைய இன்பத்தை மிகுதிப்படுத்தும் செயல்கள். இறைவனுடைய திருநாமம் ஒவ்வொன்றும் சிறந்த பொருளை உடையது. திருநாமத்தைச் சொல்லும் போது அதனால் புலனாகும் இறைவனுடைய இயல்பை எண்ணி உருகுவது அன்பர்களின் தகைமை. அவனுடைய உருவ அமைப்பையும் கருணையையும் பராக்கிரமத்தையும் அனந்த கல்யாண குணங்களையும் திருவிளையாடல்களையும் குறிப்பனவாக அந்தத் திருநாமங்கள் அமைந்திருக்கின்றன. ஒவ்வொரு மூர்த்திக்கும் தனித்தனியே சகசிரநாமம் உண்டு. சில மூர்த்திகளுக்கு வெவ்வேறு வகையில் வெவ்வேறு சகசிர நாமங்கள் இருக்கும். சில தலங்களில் அந்தத் தலங்களுக்கே உரிய சகசிரநாமங்களும் இருக்-

கின்றன. திருவாரூர்ப் பெருமானுக்கு அமைந்த முசுகுந்த சகசிரநாமம் போன்றவை அவை.

இவ்வாறு அமைந்த திருநாமங்கள் யாவும் பக்தர்கள் பலகாலம் சொல்லிச் சொல்லி இன்புறுவதற்காக அமைந்தவை. அருளாளர்கள் இறைவனைத் துதிக்கும்போது அவனுடைய திருநாமங்களைத் தம்முடைய பாடல்களில் பலவாறு இணைப்பார்கள். வழக்கமாக உள்ள சகசிர நாமங்களில் காணாத திருநாமங்களையும் அவர்களுடைய திருவாக்கில் காணலாம். இறைவனுடைய உருவங்கள் எப்படிக் கணக்கில் அடங்காதனவோ, அப்படியே அவனுடைய திருநாமங்களுக்கும் எல்லை இல்லாமல் வளர்ந்து கொண்டே வரும்.

இறைவியின் திருநாமங்கள் பற்பல. லலிதா சகசிர நாமம், லலிதா த்ரிசதி, லலிதா அஷ்டோத்தரம் என்பவை அன்னையின் திருநாமங்களின் வரிசைகளே. அபிராமி பட்டர் பலகாலம் லலிதா சகசிரநாமத்தைப் பாராயணம் செய்தும் அம்பிகையின் பூசையில் அருச்சனை செய்தும் வழிபட்டவர். அபிராமி அந்தாதியில் அந்தத் திருநாமங்கள் பலவற்றை இணைத்திருக்கிறார். அம்பிகையின் அருட் செயல்களையும் பராக்கிரமத்தையும் வெவ்வேறு வகையில் கூறும் அபிராமிபட்டர் இப்போது எம்பெருமாட்டியின் திருநாமங்கள் சிலவற்றை வரிசையாகச் சொல்லி இன்புற எண்ணுகிறார். அந்தத் திருநாமங்கள் அவளுடைய இயல்புகளைப் புலப்படுத்தும்தொடர்களே. ஆதலின் அந்த நாமங்களை வைத்துப் பாடல்களைப் பாடும்போது அவற்றால் குறிக்கப்பெறும் இயல்புகள் அவருடைய நெஞ்சில் விரிவாக நின்று இன்பம் தந்திருக்க வேண்டும். இப்போது அம்பிகையின் பதினொரு நாமங்களை ஒரே பாட்டில் அடுக்கிக் கூறுகிறார்.

அம்பிகை எல்லாப் பொருளுக்கும் தனித் தலைவி; எல்லா உயிர்களுக்கும் மேலான பெருமாட்டி. அவளைச் சர்வேசுவரி (202) என்றும். பரதேவதா [369) என்றும் லலிதா சகசிரநாமம் சொல்லுகிறது. தேவர்களுக்குத் தலைவியாக இருப்பதனுல் சுரநாயிகா (463) என்றும் பரவு கிறது. இவற்றையெல்லாம் எண்ணிய பட்டர் இந்தப் பாடலை,

நாயகி

என்று தொடங்குகிருர், 'இசைவடிவாய் நின்ற நாயகியே' என்று சென்ற பாட்டில் முன்னிலையாக விளித்த ஆசிரியர் இப்போது படர்க்கையாகப் பரவப் புகும்போது அந்த அந்தத்தை ஆதியாக வைத்து 'நாயகி' என்ருர்.

அம்பிகை எல்லாத் தொழிலையும் செய்யும் மகாசக்தி யாக விளங்குகிருள். படைப்பு முதலிய பஞ்ச கிருத்தியங் களும் அவள் திருவருளால் நடைபெறுகின்றன. ஒவ்வொரு தொழிலையும் ஒவ்வோர் உருவத்தில் இருந்து நடத்துகிருள். அந்த வகையில் பிரமனுக நான்கு முகங்களோடு இருந்து படைப்புத் தொழிலை ஆற்றுகிருள். அதனுல் அவளைச் சிருஷ்டி கர்த்ரீ (264) என்றும் ப்ரஹ்மரூபா (265) என்றும் லலிதா சகசிரநாமம் கூறுகிறது. ஆதலால் அப்பெரு மாட்டியை,

நான்முகி

என்று பாராட்டுகிருர் ஆசிரியர். சுவாதிஷ்டான சக்கரத் தில் ஆறிதழ்த் தாமரையில் மஞ்சள் நிறத்தோடும் நான்கு முகங்களோடும் காகினி என்ற திருவுருவத்தில் அம்பிகை இருப்பதாகக் கூறுவர். சதுர்வக்த்ர மனேஹரா (505) என்று லலிதா சகசிரநாமம் சொல்கிறது. எனவே சுவாதிஷ்டான சக்கரத்தில் இருக்கும் பெருமாட்டியே என்றும் பொருள் கொள்ளலாம்.

படைப்புத் தொழிலை இயற்றும் நான்முகியாகச் சொன்ன பிறகு தொடர்ந்து எம்பெருமாட்டி காத்தல் தொழிலையும் செய்வது நினைவுக்கு வருகிறது. திருமாலின் வடிவத்தில் நின்று அந்தச் செயலை அவள் ஆற்றுவதால் கோப்த்ரி (266), கோவிந்தரூபிணி (267). விஷ்ணுரூபிணி (893) என்ற திருநாமங்கள் வந்தன. நாராயணி (298) என்ற திருநாமமும் அப்பொருள் கொண்டே அமைந்தது ஆகவே நான்முகி என்றவர் தொடர்ந்து,

நாராயணி

என்றார். நாராயணனோடு சம்பந்தம் உடையவள் நாராயணி என்று பொருள் செய்து, நாராயணன் என்ற சொல் ஜீவர்கள் சென்று சேரும் இடமாக நிற்கும் சிவனைக் குறிப்பது என்பர். நாராயணனாகிய திருமாலுக்குச் சகோதரி யாதலின் நாராயணி என்ற திருநாமம் வந்தது. சுபார்சுவ க்ஷேத்திரத்தில் இருக்கும் அம்பிகைக்கு நாராயணி என்ற திருநாமம் உண்டு என்று பத்மபுராணம் கூறு கிறது.

அம்பிகையினுடைய திருக்கரங்கள் தாமரையைப் போல இருக்கின்றன. அவற்றில் ஐந்து மலரம்புகளைத் தரித்திருக்கிறாள். ஆதலின் அப்பெருமாட்டியை,

பஞ்ச நாயகி

என்று அடுத்துச்சொன்னார். ஐந்து தன்மாத்திரைகளையே பஞ்ச பாணங்களாக அம்பிகை ஏந்தியிருக்கிறாள். அவை தாமரை, மாம்பூ, அசோகம், முல்லை, நீலம் என்பவை. பஞ்ச தன்மாத்ர சாயகா (11) என்ற நாமத்தை லலிதா சகசிர நாமத்தில் பார்க்கலாம்.

அடுத்தபடி,

சாம்பவி

என்கிறார். சம்புவாகிய பரமேசுவரனுக்குத் தேவியாக இருப்பதால் இந்தத் திருநாமம் வந்தது. சம்புமோஹினி (964) என்பது அந்தப் பெருமாட்டியின் திருநாமங்களில் ஒன்று. சாம்பவி என்னும் திருநாமம் 112-ஆவதாக லலிதா சகசிரநாமத்தில் அமைந்திருக்கிறது. சிவபக்தர்களாகிய சாம்பவர்களுடைய அன்னையென்றும், எட்டு வயதுள்ள கன்னிகையென்றும் இந்தத் திருநாமத்துக்கு வேறு பொருள்கள் உண்டு.

அடுத்தபடி பட்டர் நினைக்கின்ற திருநாமம்,

சங்கரி

என்பது. சாங்கரி (126) என்று லலிதா சகசிரநாமத்தில் வருகிறது. சங்கரருடைய பத்தினி யென்றும், சுகத்தைச் செய்பவளென்றும் இத் திருநாமத்துக்குப் பொருள் கொள்ள வேண்டும். அன்பர்களுக்கு அருள் தந்து இன்பத்தை உண்டாக்குபவளாதலின் எம்பெருமாட்டிக்கு இந்தத் திருநாமம் அமைந்தது.

அடுத்தபடி,

சாமளை

என்று போற்றுகிறார், ச்யாமளா என்பது அம்பிகையின் திருநாமங்களில் ஒன்று. காளிதாசன் இயற்றிய ச்யாமளா தண்டகம் என்ற நூல் ஒன்று உண்டு. சியாமள நிறம் பொருந்தியமையின் இத்திருநாமம். அமைந்தது, ச்யாமாபா (468) என்பது லலிதா சகசிரநாமத்தில் இந்தப் பொருளோடு வரும் திருநாமம். பதினாறு வயதுடைய கன்னிகைக்கு இப்பெயர் அமையும். ஒருவகைப் பச்சை நிறத்தைச் சியாமளம் என்று சொல்வார்கள்.

அம்பிகை சிவபெருமானைப்போன்ற அங்க அடையாளங்கள் பலவற்றை உடையவள். சிவபெருமான் பாம்புகளை ஆபரணமாக அணிந்ததுபோல எம்பெரு

மாட்டியும் அணிந்திருக்கிறாள். பாம்புகளுக்குள் உயர்ந்தவை நாகப்பாம்புகள். அவற்றையே அம்பிகை மாலையாகத் தரித்திருக்கிறாள். இதை நினைந்து,

சாதி நச்சுவாய் அகிமாலினி

என்கிறார், ஆசிரியர். ''சோதி படலசூடி காகோடி பணிம தாணி மார்பாளே'' (தக்க. 105) என்று ஒட்டக்கூத்தரும், ''நாகபூஷணத்தி அண்டம் உண்ட நாரணி'' (திருப்புகழ்) என்று அருணகிரிநாதரும் போற்றுவர். இலங்கையிலுள்ள நயினா தீவில் எழுந்தருளியிருக்கும் அன்னைக்கு நாகபூஷணி என்ற திருநாமம் வழங்குகிறது.

அடுத்தபடி ஆசிரியர் நினைக்கும் திருநாமம்,

வாராகி

என்பது. இத்திருநாமம் வராகி என்றும் வழங்கும். இந்த அந்தாதியில், ''சூலிவராகி'' (77) என்று பின்னே பாடுவர். விஷ்ணுசக்தி வகையில் ஒன்றாக நிற்பவள் வராகி. அம்பிகையின் சேனைத்தலைவியாகிய அம்ச சக்திக்கு வாராகி என்று பெயர் உண்டு. ''பராசக்தி வராகானந்த நாதர் என்பவருக்கு வராகத் திருமுகத்துடன் தரிசனம் தந்தமையின் வாராகி என்னும் பெயர் பெற்றாள்'' என்று திரிபுரா சித்தாந்தம் என்னும் நூல் கூறுகிறது. வராகியை முப்பத்திரண்டு செய்யுட்களால் துதிக்கும் வராகி மாலை என்னும் நூல் ஒன்று தமிழில் உண்டு. சப்த மாதாக்களுக் குள் வராகத் திருமுகத்துடன் உள்ள வராகி என்னும் சக்தி யும் உண்டு.

சிவபெருமானைப்போல அம்பிகையும் முத்தலைச் சூலத்தை ஏந்தியிருக்கிறாள். அதனால் அவளுக்குச் சூலினி என்ற திருநாமம் வந்தது. அதை அடுத்தபடி சொல்கிறார் ஆசிரியர். ''சூலாத்யாயுத சம்பன்னா'' (லலிதா, 506)

அடுத்தபடி ஆசிரியரின் நினைவில் வருகிற திருநாமம்,

**மாதங்கி**

என்பது. மதங்க முனிவரின் குமாரி என்பது ஒரு பொருள். இசைபாடும் மதங்கர் குலத்துப் பெண்ணாகத் தோன்றி யமையின் அத்திருநாமம் வந்தது என்று கொள்ளுவதும் பொருந்தும்; ''மதங்கர்குலப் பெண்களில் தோன்றிய எம்பெருமாட்டி'' (70) என்று இவ்வாசிரியரே பின்பு கூறுவார்; ''மாதங்கி வேதஞ்சொல் பேதை நெடுநீலி'' என்பது திருப்புகழ்.

இவ்வாறு அம்பிகையின் பதினெரு திருநாமங்களை ஆசிரியர் அடுக்கிச் சொன்னார். அந்தத் திருநாமங்கள் எம்பெருமாட்டியின் புகழுக்குரிய அடையாளங்கள். ஒவ்வொன்றும் ஒவ்வொரு வகையில் அன்னையின் சிறப்பைப் புலப்படுத்துகிறது. அத்தகைய பெருமையும் அருமையும் உடைமையினால்தான் அன்னைக்குப் பல திருநாமங்கள் உண்டாயின.

**என்று ஆய கியாதி உடையாள்**
**சரணம் அரண்நமக்கே.**

எல்லாம் காரணப் பெயர்கள், மக்கள் ஒரு காரணமும் இன்றி வைத்துக் கொள்ளும் பெயர்கள் போல் அல்லாமல் இத்தகைய நாமங்கள் யாவும் தக்க காரணங்களை உடையனவாய், பொருள் நிரம்பியனவாய், பக்தர்கள் கூறக் கூற அவர்களுடைய நாவில் இனிப்பனவாய், பொருளை எண்ண எண்ணக் கருத்தில் ஆனிப்பனவாய் இருக்கின்றன. இத்தகைய நாமங்களால் புகழ்பெற்ற பெருமாட்டியின் திருவடிகள் நமக்கு எல்லா வகையான துன்பங்களையும் அச்சத்தையும் போக்கிப் பாதுகாக்கும் அரணமாக உள்ளன என்று கூறி இந்தப் பாடலை முடிக்கிறார் அபிராமி பட்டர்.

நாயகி நான்முகி நாரா
யணிகை நளினபஞ்ச
சாயகி சாம்பவி சங்கரி
சாமளை சாதிநச்சு
வாய்அகி மாலினி வாராகி
சூலினி மாதங்கிஎன்
றாயகி யாதி உடையாள்
சரணம் அரண்நமக்கே

*[எல்லாவற்றுக்கும் தலைவி, நான்கு முகங்களை உடையவள், நாராயணி, கைத்தாமரையில் ஐந்து மலரம்புகளைத் தாங்கியவள், சம்புவின் மனைவி, சங்கரி, சாமளை, நஞ்சை வாயிலே உடைய நல்ல பாம்பை மாலையாக உடையவள், வாராகி, சூலினி, மாதங்கி என்று பலபடியாகக் கூறும் திருநாமங்களால் ஆகிய புகழை உடையவளாகிய அபிராமியின் திருவடிகள் நமக்குப் பாதுகாப்பாகும்.*

*கியாதி - புகழ். சரணம் - திருவடி. அரண் - பாதுகாப்பு.]*

*எல்லோருக்கும் தலைவியாக நின்று, படைப்பு முதலிய தொழில்களைப் பிரமன் முதலிய உருவிலே நின்று நடத்தி, சிவபெருமானோடு ஒன்றி நின்று, தியானம் செய்வதற்கேற்ற வகையில் ஆயுதங்களையும் அங்கங்களையும் தாங்கிய உருவெடுத்து விளங்கும் அன்னை நம்மைப் பாதுகாப்பாள் என்பது இதன் திரண்ட பொருள்.*

*அம்பிகையின் திருவடிகளே நமக்குப் பாதுகாப்பாக உதவுவன என்பது கருத்து.*

*இது அபிராமி அந்தாதியின் 50-ஆவது பாட்டு.*

# செய்யுட்களில் வந்துள்ள அம்பிகையின்திருநாமங்கள்

அகிமாலினி
அம்பிகை
அம்புயாதனத்து அம்பிகை
அரு
அன்னை
இசைவடியாய் நின்ற நாயகி
இறைவர் செம்பாகத் திருந்தவள்
இறைவர் நெஞ்சை நடம் கொண்ட நாயகி
இறைவி
ஈசர் பாகத்து நேரிழை
உமை
உமையவள்
எட்டுத் திக்கே அணியும் திருஉடையானிடம் சேர்பவள்
எம்பெருமாட்டி
ஒன்று
கடம்பு சாத்தும் குழல் அணங்கு
கடவுள் யாவர்க்கும் இறைவி
கறுக்கும் திருமிடற்றான் இடப்பாகம் கலந்த பொன்
கன்னி
கியாதி உடையாள்
குவளைக்கண்ணி
கோமளம்
சங்கரனார் மனை மங்கலம்
சங்கரி
சாம்பவி
சாமளை
சித்தி
சித்திதரும் தெய்வம்
சிந்துர மேனியள்
சிவம
சுந்தரி
சூலினி
தவள்
திரிபுர சுந்தரி
துடியிடை சாய்க்கும் துணைமுலையாள்
தெருள்
நாயகி
நாராயணி
நான்முகி
பச்சைக் கொடி
பஞ்சசாயகி
பஞ்சபாணி
பணிஅணைமேல் துயில் கூரும் விழுப்பொருள்
பணி மொழி
பராசக்தி
பரிமளப் பூங்கொடி
பல உரு
பாசாங்குசை
புத்தி
புரத்தை
பொருள்
பொன்
போகம்
மருள்
மாதங்கி
முத்தி
முத்திக்கு வித்து
யாமளை
வாணுதல் கண்ணி
வாராகி
வாள் நுதல்
விழுப்பொருள்
வேதப்பரிபுரை

# விளக்கத்தில் மேற்கோள் காட்டிய லலிதா சகசிரநாமத்தில் வரும் திருநாமங்கள்

அசிந்த்ய ரூபா
அப்ரமேயா
அம்பா
அருணாருண் கௌஸும்ப வஸ்த்ர பாஸ்வத் கடிதடி
அம்பிகா
ஆப்ரஹ்ம கீட ஜனனி
உமா
ஏகாகினி
கதம்பகுஸும ப்ரியா
கமலாக்ஷ நிஷேவிதா
காமேச்வர ப்ரேமரத்ன மணிப்ரதிபண ஸ்தனீ
காலஹந்த்ரி
கோப்த்ரி
கோமளாகாரா
கோமளாங்கி
கோவிந்த ரூபிணி
ச்யாமளா
ச்யாமா
ச்யாமாபா
ச்ருஷ்டி கர்த்ரி
சதுர்வக்த்ர மனோஹரா
சந்த்ரமண்டல மத்யகா
சம்பு மோஹினி
சாங்கரி
சாம்பவி
சாருஹாஸா
சிஞ்ஜான மணிமஞ்ஜீர மண்டித ஸ்ரீபதாம்புஜா
சிவ மூர்த்தி
சுத்தவித்யாங்குராகார த்விஜ பங்க்தித்வயோஜ்வலா
சூலாத்யாயுத ஸம்பன்னா
ஞான விக்ரஹா
த்யான கம்யா
த்ரிநயனா
த்ரிபுரசுந்தரி
த்ரியம்பகா
த்ரிலோசனா
திவ்யகந்தாட்யா
தேவகார்யஸமுத்யதா
நடேச்வரி
நவவித்ருமபிம்ப ஸ்ரீந்யக்காரி தசனச்சதா
நாராயணி
நிராகாரா
ப்ரஹ்ம ரூபா
ப்ரஹ்மோபேந்த்ர மஹேந்த்ராதி தேவஸம்ஸ்துத வைபவா
ப்ராஹ்மி
பக்த சித்த் கேகி கநாகநா
பக்தமானஸ ஹம்ஸிகா
பக்த ஸௌபாக்ய தாயினி
பஞ்சதன்மாத்ர சாயகா
பத்மாஸனா
பரதேவத
பராசக்தி
பவநாசினி
பவரோகக்னி
பவாரண்ய குடாரிகா

பஹுரூபா
பானுமண்டல மத்யஸ்தா
பீதவர்ணு
ம்ருத்யு தாரு குடாரிகா
மங்கலாக்ருதி
மந்தஸ்மித ப்ராபாபூரமஜ்ஜத்வைஷ்ணவி
காமேச மாநஸா
மனோ வாசாமகோசரா
மஹாபைரவ பூஜிதா
மஹாபோகா
மஹாமாதா
மஹாமாயா
மஹாஸித்தி
மாதா
மாயா
முக்திஸ்வரூபிணி
முகுந்தா
ரத்னக்ரைவேய
சிந்தாகலோல
முக்தாபலான்விதா
ரத்ன கிங்கிணி மேகலா
ரம்பாதி வந்திதா
ரமா
ராஜ்யதாயினி
வஸுதா
வாக்வாதினி
வாகதீச்வரி
விஞ்ஞான கலனு
விஷ்ணு ரூபிணி
ஜன்ம ம்ருத்யு ஜராதப்த ஜன
விச்ராந்தி தாயினி
ஜனனி
ஸ்ரீகண்டார்த்த சரீரிணி
ஸ்ரீமாதா
ஸத்கதிப்ரதா
ஸர்வம்ருத்யு நிவாரணி
ஸர்வ மோஹினி
ஸர்வேச்வரி
ஸரஸ்வதி
ஸஹஸ்ரதள பத்மஸ்தா
ஸஹஸ்ராம்புஜாரூடா
ஸாம்ராஜ்ய தாயினி
ஸித்த மாதா
ஸித்தேச்வரி
ஸுமங்கலி
ஸுர நாயிகா
ஹரிப்ரஹ்மேந்த்ர ஸேவிதா

# மேற்கோளாகக் காட்டிய நூல்கள்

அப்பர் தேவாரம்
அற்புதத் திருவந்தாதி
ஆத்திசூடி
ஐங்குறுநூறு
ஔவை குறள்
கந்த புராணம்
கந்தர் அநுபூதி
கந்தர் அலங்காரம்
காளிதாசன் வாக்கு
சம்பந்தர் தேவாரம்
சிதம்பரச் செய்யுட் கோவை
சியாமளா தண்டகம்
சிவகாமியம்மை இரட்டை மணிமாலை
சிவஞான சித்தியார்
சுந்தரர் தேவாரம்
சௌந்தர்ய லகரி
தக்கயாகப்பரணி
தாயுமானவர் பாடல்
திரிபுரா சித்தாந்தம்
திருக்குறள்
திருக்கோவையார்
திருப்புகழ்
திருமந்திரம்
திருமுருகாற்றுப்படை
திருவகுப்பு
திருவாசகம்
திருவிளையாடற் புராணம்
திவ்வியப்பிரபந்தம்
தேவீ புராணம்
நன்னூல்
நாலடியார்
பட்டினத்தார் பாடல்
பத்ம புராணம்
பழம்பாடல்
பழமொழி
பாசவதைப்பரணி
பிரபுலிங்கலீலை
மதுரைக்காஞ்சி
மீனாட்சியம்மை குறம்
மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்
மூகபஞ்சசதி
லலிதா சகசிரநாமம்
வராகிமாலை

